

நவம்பர் 1981










சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 1-50
ஆண்டுச் சந்தா ரூ. 18/-
ஆறு மாத சந்தா ரூ. 9/-



Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543) Assistant Editor: Manjula Ramesh.




'தெய்வீகம் பொலியும் நின் திருமுகம்' எங்கோ பார்த்த அந்த அற்புதக் கவிதை வரிகள் அந்த முகத்தைப் பார்க்கும்போது நினைவில் வருகிறது.

அந்த முகம்!

அதுதான் இத்தனை வெற்றிக்கும் காரணமா? எங்கேயோ பிறந்து, எப்படியோ வளர்ந்து, இன்று கலைத் துறையில் அனைவரையும் மயக்கும் புன்னகையால் வளைத்துப் போட்ட முகம்தான் — முகத்துக்கு உரியவர் தான்—

கே. ஆர். விஜயா!

தமிழ்த் திரையுலகில் அழகிய நடிகைகளுக்குப் பஞ்சமில்லை. எத்தனையோ சரித்திரம் படைத்த நாயகிகள் இருந்தார்கள். அவர்களில் ஒருவரான விஜயா இன்னும் நடித்துக் கொண்டுதான் இருக்கிறார். இவ்வளவு பெரிய வெற்றிக்குப் பின் ஒரு பெரிய சரித்திரமே இருக்கிறது. அதை அவர் மறக்கவும் இல்லை; மறைக்கவும் இல்லை.

''என் பன்னிரண்டு வயது வரை நாய் அம்மாவைப் பெற்ற பாட்டி, தாத்தாவிடம் தான் இருந்தேன். அம்மாவும், அப்பாவும் ஊர் ஊராக மாறிக் கொண்டே இருந்தார்கள். ஏதாவது ஒரு பிஸினஸ் செய்வது. அதில் நஷ்டமானால் பிறகு வேறு ஊருக்குப் போவது என்றே இருந்தார்கள். இதுபோன்ற காரணங்களினால் நானும் படிக்கவில்லை.

எனக்குப் பன்னிரண்டு வயது ஆனபோது தான் அம்மா அப்பாவிடம் வந்து சேர்ந்தேன். என்னை அங்கு நடந்துகொண்டிருந்த டிராமாவில் நடிக்க வைப்பது என்று முடிவு செய்தார்கள்.

அப்போது நாங்கள் பழனியில் இருந்தோம். அங்கு நடக்கும் சிறு சிறு டிராமாக்களில் நடிப்பது, காலண்டர்களுக்குப் போஸ் கொடுப்பது, நடனம் ஆடுவது இப்படிப் பல வழிகளில் சம்பாதிக்க ஆரம்பித்தேன்.

அப்போதெல்லாம் எவ்வளவோ கஷ்டங்களைத் தாங்கி யிருக்கிறேன். ஆனால் அதைப் பற்றியெல்லாம் கவலைப்படத் தெரியாத வயது. ஏனென்றால் என்னிடம் பொறுப்பு இல்லை. என் வாழ்க்கைப் பொறுப்பு முழுவதும் பெற்றோரிடம் இருந்தது. அவர்கள் தான் நாடகங்கள், டான்ஸ்களை ஒப்புக்கொள்வது, தேதி கொடுப்பது போன்றவற்றைச் செய்து வந்தார்கள். அவர்கள் சொன்னபடி நான் செய்து கொண்டிருந்தேன்.

கஷ்டப்பட்டபோதெல்லாம் கவலையில்லை. இப்போது நல்ல நிலைக்கு வந்த பிறகுதான் பயமாக இருக்கிறது. ஏனென்றால் இப்போது வாழ்க்கை என் கையில் இருக்கிறது. பொறுப்புக்களும் கூடிவிட்டன. இவ்வளவு உயரத்துக்கு வந்த பிறகு இந்த நிலையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே என்று

கவனத்துடன் இருக்க வேண்டியவளாகிறேன்....''

என்று சிரிக்கிறார் கே. ஆர். விஜயா.

கலைத் துறையில் நுழைவதற்கு முன்பு மிகவும் கஷ்டப்பட்டுத் தான் வாழ்க்கையை நடத்தியிருக்கிறார். வெளியூர்களில்இருப்பதை விட சென்னைக்கு வந்தால் நிறைய வாய்ப்புக்கள் கிடைக்கும் என்றுதான் சென்னைக்குப் பெற்றோருடன் வந்திருக்கிறார்.

எப்படியாவது சினிமாவில் நுழைந்துவிட வேண்டும் என்று ஆசை. அப்போது ஏ.வி. எம். நிறுவனம் 'நானும் ஒரு பெண்' சினிமாவை எடுப்பதாக இருந்தார்கள். அதற்காக இவருக்கு மேக்-அப் டெஸ்ட் செய்து பார்த்தார்கள்.

ம்ஹூம்! ஒத்துவரவில்லை.

''இந்தப் பெண் மிகவும் ஒல்லியாக இருக்கிறாள். முகத்திலும் எக்ஸ்பிரஷன்' இல்லை.''

என்று நிராகரித்து விட்டார்களாம். மீண்டும் நாடக வாழ்க்கை ஆரம்பமானது.

அங்கேயும் கூட அதிர்ஷ்டம் அடிக்கவில்லை, குறிப்பிடும்படியான பெரிய நாடகக் கம்பெனியிலோ, நாடகங்களில் புகழ் பெறத்தக்க பாத்திரமோ கிடைக்கவில்லை. சிறு சிறு நாடகங்கள், தற்காலிகப் பாத்திரங்கள் இப்படித்தான் காலம் ஓடியது..

கண்காட்சிகள் நடந்தால் அங்கே நடக்கும் நாடகங்களில் வாய்ப்பு கிடைத்தது. டான்சுக்கும் அழைத்தார்கள். 'இடையே காலண்டர்களுக்கும் போஸ் கொடுத்துக் கொண்டிருந்தார்.

பாரி அண்ட் கம்பெனி வெளியிட்ட காலண்டர் ஒன்றில் இவருடைய தோற்றத்தைக் கண்டு கே. எஸ். கோபாலகிருஷ்ணன் அவரைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறார்.

தான் எடுக்கப்போகும் படத்தில் ஒரு கள்ளமறியாத குடும்பப் பெண் பாத்திரத்துக்கு இந்த முகம் மிகவும் பொருத்தமாக இருக்கும் என்று நினைத்திருக்கிறார். அதிகம் வசனம் இல்லாமல், வெறும் முக பாவம் மட்டுமே பாத்திரம்! அது—

கற்பகம்!

அதிர்ஷ்ட தேவதை கடைக்கண் காட்டி விட்டாள். வெற்றித் திருமகள் புன்னகை பூத்தாள்!

கற்பகம் விஜயாவை யாராலும் மறக்க முடியவில்லை. மக்கள் மத்தியில் அந்தப் படத்துக்குப் பெரும் வரவேற்பு! அப்புறம் என்ன நடந்தது?

''தெரியவில்லை. அந்தப் படத்துக்குப் பிறகு, உழைப்பு, உழைப்பு, உழைப்பு... அவ்வளவுதான். இதோ இங்கே வந்து நிற்கிறேன். நான் யோசித்துக்கூடப் பார்க்க நேரமில்லை. இப்போது நினைத்தால், எனக்கு அதிகமாக எதுவும் நினைவில் வரமாட்டேன் என்கிறது.

கற்பகத்துக்கு அப்புறம் நிறையப் படங்களில் 'புக்' ஆனேன். வாழ்க்கையில் முன்னேற வேண்டுமே என்ற ஒரே குறிக்கோளோடு ஓய்வு ஒழிவு இல்லாமல் நடித்தேன். மற்றவர்களைக் கவனிக்கவோ, மற்றவர்கள் என்னைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று பார்க்கவோ கூட இல்லை. கிடைத்த வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொண்டு முன்னேறினேன். அவ்வளவு தான்.

'பணம் படைத்தவன்' படம் திரு எம்.ஜி. ஆருடன் நான் முதலில் நடித்த படம். அதற்காகக் கல்கத்தாவுக்கு ஷூட்டிங்கிற்காகப் போயிருந்தேன். அங்கிருக்கும் தமிழ்ச் சங்கம் எங்களுக்குப் பெரும் வரவேற்புக் கொடுத்தது. எம். ஜி. ஆர். எங்களை யெல்லாம் திரளாகக் கூடியிருந்த கூட்டத்துக்கு அறிமுகப்படுத்தினார்.

நான் அப்போதுதான் கற்பகத்தை முடித்திருந்தேன். புதுமுகம் அவர்களுக்கு. அப்படி எம். ஜி. ஆர். நினைக்கவில்லை.



# கவிதை பாடும் கண்களுக்கு...

# ஐடெக்ஸ்

விழிகள் மொழிபேச ஐடெக்ஸ்

பெண்மை பளிச்சிட.. இளமை எழில்
கொஞ்சிட.. வனிதையர் வதனம்
கவர்ச்சி மிளிர்ந்து கண்கள்
களிநடம்புரிய ஐடெக்ஸ் கண்மை
சாஸ்திரிய முறையில் தயாராகும்
ஐடெக்ஸ் மை கண்களுக்கு
குளுமையூட்டி பாதுகாக்கிறது
எவ்வித தீங்கும் விளைவிக்காது

ஐடெக்ஸ் 38 ஆண்டுகளாக உங்கள்
நம்பிக்கையின் மகத்தான சின்னம்






அரவிந்த லாபரடரீஸ் சென்னை 600033

Imageads AL 1293 Tam

''இந்த விஜயா இப்போதுதான் அறிமுகம் ஆகியிருக்கிறாரே என்று பார்க்காதீர்கள். வெகு விரைவில் முன்னணி நட்சத்திரமாக வந்துவிடப் போகிறார். அவ்வளவு திறமையான நடிகை!''

என்றார். அவருடைய வாக்குப் பலித்து விட்டது. அந்தச் சொல்லை நான் ஆயுளுக்கும் மறக்க மாட்டேன்.

நடிப்பில் என்னைப் பெரிதும் உற்சாகப் படுத்துபவர் சிவாஜி. அவர், ஏழு மணிக்கு படப் படிப்பு அரம்பமென்றால், 'டாண்' என்று ஏழு மணிக்கு வந்து விடுவார். நாங்கள் அவருக்கு முன் போய்விட வேண்டும் என்று பரபரப்போம். நடிக்கும்போதும் பெரிதும் உதவுவார். அன்றைய படப்பிடிப்பு அன்றோடு முடிந்து விட்டது என்றில்லாமல்.

''நாளைக்கு முக்கியமான சீன் இருக்கு. நன்றாகப் பார்த்துக் கொண்டு வா''

என்று போகிற போக்கில் சொல்லிவிட்டுப் போவார். எனக்கு இன்னும் கொஞ்சம் பயம் எடுத்துக்கொள்ளும். கவனமாக நடிக்க வேண்டுமே, நாளைக்கு என்று. இப்படித் தான் மட்டும் இல்லாமல் மற்றவர்களையும் தொழிலில் அக்கறையுடன் ஈடுபடச் செய்வார்.

அதே போல இந்தத் திரை உலகில் நான் நுழைந்த பதினேழு வருடங்களில் எத்தனையோ படங்கள்! அவற்றிலே நான் தேர்ந்தெடுத்த நடித்த பல கதாபாத்திரங்களை என்றும் மறக்கவே முடியாது.

'தீர்க்க சுமங்கலி'யாகத் தோன்றினேன்.

'நம்ம வீட்டுத் தெய்வம்', நான் பெற்ற பாக்கியம்!

தங்கை, அக்கா தங்கை, திருடன், பணம் படைத்தவன் எனப் பல படங்களில் நல்ல கதாபாத்திரங்கள் கிடைத்தன. நல்ல பெயரும் புகழும் கிடைத்தது.

சாதாரணமாக இருந்த போதெல்லாம் நான் கவலை இல்லாமல் இருந்து விட்டேன். என் பெற்றோர்கள் பொறுப்பை எடுத்துக் கொண்டார்கள். இப்போதுதான் நான் கவனமாக இருக்க வேண்டியதாகிறது. இந்த வாழ்க்கையை, புகழை, கௌரவத்தைப்பாதுகாக்க வேண்டியதாக இருக்கிறது...''





என்று கூறிக் கொண்டே போனார்.

இதெல்லாம் சரி. இவருடைய வாழ்வின் முக்கியமான திருப்பத்தைப் பற்றி என்ன சொல்கிறார்?

அதைப் பற்றிக் கேட்கும்போது நாணத்துடன் தலை கவிழ்ந்து சிரிக்கிறார்.

பாலாஜி எடுத்த 'அன்னையின் ஆசை' படத்தில் நடிக்க ஒப்பந்தமானேன். அப்போதுதான் அவருடைய பாகஸ்தர் திரு வேலாயுதம் அறிமுகம் ஆனார். ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டோம். பாலாஜி எடுத்த அடுத்த படமான 'தங்கை'யில் நடித்துக் கொண்டிருக்கும்போது திருமணம் செய்து கொண்டோம்.

என் பெண் பிறந்த சமயம் நடிப்பதா வேண்டாமா என்ற யோசனையில் இருந்தேன். அவர் தனக்கு ஆட்சேபணை இல்லை என்று கூறிவிட்டார். அப்புறம் என்ன? எத்தனை பெண்கள் அலுவலகம் போகிறார்கள்? நானும் அப்படியே ஷெட்யூல் போட்டுக் கொண்டேன். பத்திலிருந்து நான்கு மணி வரை கால்ஷீட் கொடுப்பேன். ஞாயிற்றுக் கிழமைகளில் விடுமுறை எடுத்துக் கொள்கிறேன்!''

இவருடைய கணவர் எப்படி?

''எப்படி என்றால்? என்னைக் கேட்டால் என் கணவர் நல்லவர், என் பெண் புத்திசாலி என்றுதான் சொல்லுவேன். வேறு என்ன சொல்ல இருக்கிறது?''

என்று வழக்கமான சிரிப்பை உதிர்க்கிறார். இவருடைய வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சி எது? ஏதேனும் கவையான சம்பவங்கள் உண்டா? இன்னாரைப் பற்றி என்ன நினைக்கிறார்?

ம்ஹும்! இதுபோன்ற கேள்விகளுக்கு அவரிடமிருந்து பதில் இல்லை.

''நான் யாரைப் பற்றியும் அபிப்பிராயத்தையே உருவாக்கிக் கொள்வதில்லை. ஷூட்டிங், ஷூட்டிங் முடிந்தவுடன் அதை முழுவதுமாக மறந்துவிட்டு வீடு என்று இருந்து விடுகிறேன். மற்றவர்களைப் பற்றிய விஷயங்களில் தலையிடுவதில்லை. என்ன செய்யட்டும்?''

என்கிறார்.

இப்போது புரிகிறதா இவருடைய வெற்றியின் ரகசியம்? எந்த 'காண்ட்ரோவெர்ஷியிலும்' கலந்துகொள்ளாமல், யாரைப் பற்றியும் வம்பளக்காமல், தன் வீடு உண்டு, தன் தொழில் உண்டு என்று இருந்து விடுகிறார். அமைதியான குடும்ப வாழ்க்கை, வெற்றிகரமான சினிமா உலகம்!

திட்டமிட்ட இவருடைய வாழ்க்கையை மற்ற இளம் நடிகைகள் பார்த்துப் புரிந்து கொண்டால் போதும்! மற்றவை ஏன்?

# இம்மாத இல்லத்தரசிகள்



## முதல் பரிசு

### டொமாட்டோ கார மோதக்

**தேவையான பொருட்கள் :**

தக்காளி அரை கிலோ
பங்களூர் மாங்காய் இரண்டு
தேங்காய்த் துருவல் மூன்று கப்
அரிசி மாவு ஒரு லிட்டர்
தூள்செய்த வெல்லம் ஆறு டீஸ்பூன்
கடுகு ஒரு டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு ஒரு டீஸ்பூன்
மிளகாய்ப் பொடி நான்கு டீஸ்பூன்
தேவையான உப்பு
டால்டா அல்லது நெய்
சிறிது கறிவேப்பிலை

**செய்முறை :**

தக்காளிகளை வெந்நீரில் ஊறவைக்கவும். பிறகு மேல் தோலை உரிக்கவும். மாங்காய்த் தோலைச் சீவிப் பொடியாகத் துருவவும். தேங்காயைத் துருவி ஒருபுறம் வைக்கவும்.

வாணலியில் டால்டாவைக் காயவைத்து கடுகு உளுத்தம் பருப்பை வெடிக்க விடவும். பிறகு கறிவேப்பிலையைப் போட்டுவிட்டு முதலில் மாங்காய்த் துருவலைக் கொட்டிக் கிளறவும். அது பாதி வதங்கினதும் டொமாட்டோவைப் போட்டு உப்பு, மிளகாய்ப் பொடி போட்டு வதக்கிவிட்டு கடைசியில் தேங்காய்த் துருவலைக் கொட்டி வெல்லத் தூளையும் போட்டு ஒரு புரட்டுப் புரட்டி இறக்கிவிடவும். இது பூரணம்.

அரிசி மாவை வெறும் வாணலியில் லேசாக வறுக்கவும். பிறகு வெந்நீரில் கொஞ்சமாக உப்பைப் போட்டுக் கரைக்கவும். பெரிய பேஸினில் மாவைக் கொட்டி வெந்நீரைச் சிறிது சிறிதாக ஊற்றிக் கெட்டியாகப் பிசையவும். பிறகு இந்த மாவை சிறு சிறு கிண்ணங்களாகச் செய்யவும். அவற்றில் மேலே கூறிய பூரணத்தை வைத்து மூடி மேலே குவித்து மூடவும். பிறகு இந்த 'மோதக்'குகளை ஆவியில் வேக விட்டு எடுக்கவும். ஒருபுறம் புளிப்பு, ஒருபுறம் இனிப்பு, ஒருபுறம் காரம், ஒருபுறம் உவர்ப்பு என்று நான்கு சுவைகளுடன் இவை வெகுருசியாக இருக்கும்.

சௌம்யா கிருஷ்ணமூர்த்தி

## இரண்டாம் பரிசு

### தக்காளி குஸ்கா

**தேவையான பொருட்கள் :**

தக்காளி மூன்று
பிரியாணி அரிசி 800 மி. லிட்டர்
தேங்காய் அரை மூடி
நெய் நூறு கிராம்
பெரிய வெங்காயம் ஒன்று
சின்ன வெங்காயம் ஐம்பது கிராம்
பச்சை மிளகாய் ஐந்து
புதினா, கொத்தமல்லி பதினைந்து பைசா
பூண்டு ஒன்று
இஞ்சி இருபத்தைந்து கிராம்
முந்திரிப் பருப்பு ஐந்து
பட்டை எட்டு சிறு துண்டுகள்
கிராம்பு மூன்று
ஏலக்காய் மூன்று
பிரிஞ்சி இலை சிறிது
கேசரிப் பவுடர் சிறிதளவு
உப்பு தேவையான அளவு

**செய்முறை:**

முதலில் தேங்காயை ஆட்டிப் பால் பிழிந்து எடுக்கவும். தக்காளி, பெரிய வெங்காயம், பச்சை மிளகாய் இவைகளை அரிந்து கொள்ளவும். இஞ்சியையும், பூண்டையும் சேர்த்து நைஸாக அரைத்துக்கொள்ளவும். சின்ன வெங்காயத்தை அம்மியில் தட்டி கொள்ளவும். முந்திரிப் பருப்பைச் சிறு துண்டுகளாக உடைத்துக் கொள்ளவும். அரைப்படி வேகக் கூடிய பாத்திரத்தை அடுப்பில் வைத்து நெய்யை ஊற்றிக் காய்ந்தவுடன் பட்டை, கிராம்பு, முந்திரிப் பருப்பு, ஏலக்காய், பிரிஞ்சி இலை எல்லாவற்றையும் போட்டு சிவந்ததும் மீதியுள்ள தக்காளி, பெரிய வெங்காயம், சின்ன வெங்காயம் பச்சை மிளகாய், அரைத்து வைத்துள்ள இஞ்சி, பூண்டு, புதினா, கொத்தமல்லி எல்லாவற்றையும் போட்டு நன்றாக வதக்கவும். வதக்கிய பிறகு தேங்காய்ப் பாலையும் தண்ணீரையும் சேர்த்து ஒரு லிட்டராக அளந்து ஊற்றவும். தேவையானால் சிறிது கேசரிப் பவுடர் போடலாம். கொதி வந்ததும் அரிசியைப் போடவும். எல்லாம் சேர்ந்து பதமாக வெந்ததும் அடுப்பில் உள்ள தணலைத் தட்டில் வைத்து தம் போடவும். பத்து நிமிடம் இருந்தால் போதும். உடனே பரிமாறலாம். சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும்.

ராதாருக்மணி

## மூன்றாம் பரிசு



### தக்காளி பால் சூப்

**தேவையான பொருட்கள்:**

தக்காளி அரைக் கிலோ
பாசிப் பருப்பு ஐம்பது கிராம்
துவரம் பருப்பு நூறு கிராம்
தேங்காய் ஒரு மூடி
எலுமிச்சம் பழம் பெரியது ஒன்று
மிளகு ஒன்றரை ஸ்பூன்
மிளகாய் இரண்டு
பெரிய வெங்காயம் ஐந்து
இஞ்சி ஒரு துண்டு
கொத்தமல்லி ஒரு கட்டு
கறிவேப்பிலை சிறிது
மஞ்சள் பொடி ஒரு ஸ்பூன்
பெருங்காயம் ஒரு சிறு துண்டு
பூண்டு இருபத்தைந்து கிராம்
நெய் நூறு கிராம்
பட்டை, சோம்பு ஒரு ஸ்பூன் (சேர்த்துக் கொள்ள விரும்பினால் மட்டுமே)
உப்பு தேவையான அளவு

**செய்முறை:**

முதலில் துவரம் பருப்பையும் பாசிப் பருப்பையும் நன்றாக நிறையத் தண்ணீர் விட்டு வேக வைக்க வேண்டும். நன்றாக வெந்தவுடன் ஒரு சுத்தமான துணியில் பருப்பை வடிகட்டி, பருப்புத் தண்ணீரை தனியேஇருக்கவேண்டும்.தேங்காயைத் துருவி மூன்று தடவை பால் எடுக்க வேண்டும். பருப்புத் தண்ணீருடன் இரண்டாம் மூன்றும் பாலைச் சேர்க்க வேண்டும். வாணலியில் நெய்யை விட்டு அது காய்ந்ததும் பட்டை, சோம்பை பொடித்துப் போட்டு பின் மிளகாய், வெங்காயத்தைப் பொடியாக நறுக்கி வதக்க வேண்டும். இது நன்றாக வதங்கியதும் தக்காளியைப் போட்டு வதக்கி பருப்புத் தண்ணீரில் அதைப் போட வேண்டும். கொத்தமல்லியை நன்றாகக் கழுவி பொடியாகக் கிள்ளி இதையும் பருப்புத் தண்ணீரில் போட வேண்டும். இஞ்சியைக் கழுவி சிறு துண்டுகளாக நறுக்கி இதையும், பூண்டை உரித்து அதையும், பருப்புத் தண்ணீரில் போட வேண்டும். இதை அடுப்பில் வைத்து தக்காளி நன்றாக மசியும்வரை வேக வைக்க வேண்டும். தேவையானால் சிறிது தண்ணீர் சேர்க்கலாம். தக்காளி மசிந்ததும் இறக்கி நன்றாக ஒரு துணியில் வடிகட்டிக் கொள்ள வேண்டும். (அனைத்துச் சத்தும் நன்றாகத் தண்ணீரில் இறங்குமாறு வடிகட்டிக் கொள்ள வேண்டும்.)

இந்தத் தண்ணீரில் மஞ்சள் பொடியையும் பெருங்காயத்தையும் போட்டு மீண்டும் ஒரு ஐந்து நிமிடம் அடுப்பில் வைக்க வேண்டும். இறக்கப் போகும்போது மிளகைப் பொடித்துப் போட்டு தேவையான அளவு உப்பையும் போட வேண்டும். இறக்கி வைத்த பிறகு தேங்காயின் முதல் பாலையும் எலுமிச்சம் பழத்தையும் பிழிந்து விடவேண்டும். பச்சைக் கறிவேப்பிலையைக் கிள்ளிப் போட வேண்டும்.

இதுவே ''தேங்காய்ப் பால் சூப்''. சுவையானது.சத்து நிறைந்தது.நோயாளிகளுக்குத் தினமும் கொடுக்கலாம். நல்ல ஜீரண சக்தி ஏற்படும். சர்க்கரை வியாதிக்காரர்களுக்கு தக்காளி ஏற்றதாகையால் தேங்காய்ப் பால் சேர்க்காமல் இதே முறையில் சூப் வைத்து கொடுக்கலாம்.

பருப்புச் சக்கையை உசிலி செய்ய கடலைப் பருப்புக்குப் பதில் இஷ்டமானால் பயன்படுத்தலாம்.

— 'கோகுஷா'

## ஆறுதல் பரிசு

### தக்காளி இரால் பாத்

**தேவையான பொருட்கள்:**

பெரிய ரவை இரண்டு கப்
தக்காளி கால் கிலோ
உரித்துச் சுத்தப்படுத்திய இரால் கால் கிலோ
இஞ்சி ஒரு துண்டு
பூண்டு எட்டு பருப்புகள்
பச்சை மிளகாய் ஏழு
தனியா ஒரு மே. கரண்டி
மஞ்சள் தூள் துளி
வெங்காயம் பெரியது ஒன்று
பட்டை, லவங்கம், பிரிஞ்சி இலை கொஞ்சம்
நெய் நூற்றி ஐம்பது கிராம்
எலுமிச்சம் பழம் ஒன்று
புதினா கால் கட்டு
கொத்தமல்லி கா.. கட்டு

**செய்முறை:**

ரவையைக் கொஞ்சம் நெய் விட்டு வறுத்து எடுத்துக்கொள்ளவும். தேங்காயைத் துருவி ஒன்றரைக் கப் பால் எடுத்துக்கொள்ளவும். இஞ்சி, பூண்டு, பச்சை மிளகாய், தனியாவை லேசாக வதக்கி நன்றாக அரைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

அகன்ற பாத்திரத்தில் நெய்யை சூடு செய்து, பட்டை, இலவங்கம் போடவும். இவை சிவந்த பின் பொடியாக அரிந்த வெங்காயத்தையும் அரைத்த மசாலாவையும் போட்டு வதக்கவும். இதில் இராலைப் போட்டு தேவையான உப்பும் மஞ்சள் தூளும் சேர்த்து வேக விடவும். இரால் நன்றாகவெந்த பின் தேங்காய்ப் பாலை ஊற்றி தக்காளியையும் அரிந்து போட்டுக் கொதிக்க வைக்கவும். நன்றாகக் கொதித்த பின் ரவையைப் போட்டு நன்றாகக் கிளறவும். தண்ணீர் பற்றுவிடில் சூடான தண்ணீர் சேர்த்துக்

கொள்ளலாம். புதினாவையும் கொத்தமல்லியையும் பொடியாக அரிந்து இத்துடன் சேர்த்து நன்றாகக் கலந்து தீயைச் சிறிதாக்கி மூடி வைக்கவும். ரவை நன்றாக வெந்த பின் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து பரிமாறவும்.

திரு ஜே. ரங்கநாதன்

## ஆறுதல் பரிசு

### கடப்பா குருமா

**தேவையான பொருட்கள் :**

தக்காளிப் பழம் அரை கிலோ
தனியா ஒரு டீஸ்பூன்
பட்டை ஒரு டீஸ்பூன்
கிராம்பு நான்கு
ஏலக்காய் நான்கு
சிவப்பு மிளகாய் பத்து
மஞ்சள் பொடி அரை டீஸ்பூன்
வெங்காயம் நூறு கிராம்
பச்சை மிளகாய் ஐந்து
கறிவேப்பிலை சிறிய கொத்து
ரொட்டி ஸ்லேஸ் நான்கு துண்டு
கடுகு ஒரு டீஸ்பூன்
க., உ. பருப்பு ஒரு டீஸ்பூன்
வெள்ளை உளுத்தம் பருப்பு ஒரு டீஸ்பூன்
டால்டா இரண்டு டீஸ்பூன்

**செய்முறை:**

முதலில் தனியா, பட்டை, கிராம்பு, ஏலக்காய், மிளகாய் வற்றல் இவைகளை சிவக்க வறுத்துப் பொடி செய்துகொள்ள வேண்டும். பச்சை மிளகாய், வெங்காயம், கருவேப்பிலை, கொத்தமல்லி இவற்றை நன்கு சுத்தம் செய்து பொடிப் பொடியாக நறுக்கிக் கொள்ள வேண்டும். தக்காளியை நன்கு கழுவி நான்கு நான்கு துண்டுகளாக நறுக்கிக் கொள்ள வேண்டும். ரொட்டியைச் சிறிய நீளத் துண்டுகளாக வெட்டிக் கொண்டு, டால்டாவில் போட்டு பொன் வறுவலாக வறுத்துக் கொள்ள வேண்டும். வாணலியை அடுப்பில் வைத்து இரண்டு டீஸ்பூன் எண்ணெய் விட்டு, கடுகு, க. உ. பருப்பு, வெ. உளுத்தம் பருப்பு இவைகளைச் சிவக்க வறுத்துக்கொண்டு, நறுக்கி வைத்த ப. மிளகாய், வெங்காயம், கறிவேப்பிலை, கொத்துமல்லி, இவற்றைப் போட்டு வதக்க வேண்டும். தக்காளியையும் சிறிது உப்பு, மஞ்சள் தூள் போட்டு வதக்க வேண்டும். அதில் பொடி செய்த மசாலா சாமான்களைபோட்டு சிறிது தண்ணீர் விட்டு சேர்ந்து வரும்வரை நன்கு கிளறி விட்டு சிறிது நேரம் கழித்து இறக்கி விடவும். அதில் வறுத்த ரொட்டித் துண்டுகளைச் சேர்க்கவும். இதைச் சாதத்தில் போட்டுக் கலந்தும், சப்பாத்தி, பூரி, தோசை, இட்டிலி இவைகளிலும் சேர்த்துச் சாப்பிடலாம்.

திருமதி ஜி. சுந்தரி கணேசன்

## ஆறுதல் பரிசு

### தக்காளி வடாம்

**தேவையான பொருட்கள்:**

தக்காளி அரைக் கிலோ
ஜவ்வரிசி கால் கிலோ
பச்சை மிளகாய் சுமார் பதினைந்து
உப்பு தேவையான அளவு
பெருங்காயம் ஒரு துண்டு

**செய்முறை:**

ஜவ்வரிசியை ஒரு மணி நேரம் ஊற வைக்கவும். தக்காளிப் பழத்தைச் சிறிய துண்டுகளாக நறுக்கி, அத்துடன் உப்பு, பச்ச மிளகாய், பெருங்காயம் முதலியவற்றைச் சேர்த்துக் கல்லுரலில் போட்டு நன்றாக அரைத்துக் கொள்ளவும். அடுப்பில் அகன்ற பாத்திரத்தில் சிறிதளவுநீர்வைத்து கொதித்தவுடன் அதில் ஜவ்வரிசியைப் போட்டு நன்றாக வேக விட வேண்டும். இறக்குவதற்கு ஐந்து நிமிடங்களுக்கு முன்பு அரைத்து வைத்துள்ள தக்காளியை அத்துடன் சேர்த்து நன்றாகக் கிளறி இறக்க வேண்டும். கீழே இறக்கி வைத்து அதில் கொத்து மல்லியைப் பொடிப் பொடியாக நறுக்கிப் போட வேண்டும். ஆறியவுடன் வெய்யிலில் பிளாஸ்டிக் பேப்பரை விரித்து அதில் ஸ்பூனால் வட்ட வட்டமாக இடவேண்டும். இரண்டு மூன்று நாட்கள் வெய்யிலில் காயவைத்து டப்பாக்களில் போடவும். - பத்மா

## ஆறுதல் பரிசு

### தக்காளி பாயசம்

**தேவையான பொருட்கள்:**

தக்காளி கால் கிலோ
அரிசி இரண்டு டீஸ்பூன்
தேங்காய் மூடி ஒன்று
முந்திரி, திராட்சை பத்து
ஏலம் கிராம்பு பொடி அரை டீஸ்பூன்
ஜீனி நூற்றி இருபத்தைந்து கிராம்
நெய் இரண்டு டீஸ்பூன்

**செய்முறை:**

தக்காளியைக் கழுவி முழுதாக வேக வைத்து தோலுரித்து சாறு எடுத்துக்கொள்ளவும். அரிசி, தேங்காய்த் துருவல், ஐந்து முந்திரிப் பருப்பு, ஐந்து திராட்சை இவற்றை நைஸாக அரைத்துக் கொள்ளவும். இவற்றுடன் தக்காளிச் சாற்றினைச் சேர்த்துக் கொதிக்க விடவும். கொதித்ததும் ஜீனியைப் போட்டு ஒரு கொதிவிடவும். பின்னர் ஏலம் கிராம்புப் பொடியைப் போட்டு கீழே இறக்கவும். மீதியுள்ள முந்திரி, திராட்சை ஆகியவற்றை நெய்யில் வறுத்துப் போடவும்.

திருமதி ரேவதி சிவராமன்

நைத்ருபகாச்யப கோத்ரம், வடமான் கேரள ஐயர் வகுப்பைச் சேர்ந்த பட்டதாரி பெண்களுக்கு மணமகன் தேவை. 34 வயது உத்திரட்டாதி நட்சத்திரம், 3ம் பாதம். ஹைதராபாத்தில் அரசாங்க வேலையில் இருக்கும் பெண்ணுக்கு 42 வயதுக்குள் மணமகன் தேவை. தங்கை 23 வயது ரோகிணி நட்சத்திரம், 2ம் பாதம். கம்பெனியில் வேலை செய்யும் பெண்ணுக்கு 30 வயதுக்குள் மணமகன் தேவை. ஜாதகத்துடன் மற்ற விவரங்களும் அனுப்பவும்.

## பெட்டி எண் 115

வாதூல கோத்ரம், வடமான், உயரம் 5 அடி, நாலரை அங்குலம். 28 வயது. மிருகசீர்ஷ நக்ஷத்திரம். பி காம் படித்து, பொதுப் பணித் துறையில் வேலையில் இருக்கும் பையனுக்கு ஐயர் வகுப்பு, வடமான், மத்திய, மாநில அரசில் வேலை செய்யும் மணமகள் தேவை. விருப்பம் உள்ளவர்கள் ஜாதகம், மற்ற விவரங்களுடன் எழுதவும்.

## பெட்டி எண் 116

ஆத்ரேய கோத்ரம், வெள்நாடு தெலுங்குப் பிராமணர். பெயர் மகாலக்ஷ்மி. மக நட்சத்திரம். 3ம் பாதம். 23 வயது. படிப்பு எஸ்.எஸ்.எல்.சி. ஷார்ட் ஹாண்ட், டைப்ரைட்டிங் பாஸ் செய்து மாதம் ரூ. 400 சம்பாதிக்கிறாள். சென்னையில் உத்தியோகத்தில் உள்ள தகுதி வாய்ந்த வரன் தேவை. மணமகன் எஸ்.எஸ்.எல்.சி. அல்லது பி.யூ.சி. படித்திருந்து மாதம் 600 ரூபாய்க்குக் குறையாத ஸ்திர வருமானமுள்ளவராய் இருக்க வேண்டும். மணமகன் வெள்நாடு, முலகநாடு, அல்லது தெலுங்காணி உட் பிரிவைச் சேர்ந்தவராய் இருந்தால் போதும்.

## பெட்டி எண் 117

36 வயது. ஒரே மகன். மகம் நட்சத்திரம். வேலை பார்க்கும் தெலுகான்ய தெலுங்கு பிராமணப் பெண்ணுக்கு 42 வயதுக்குள் மணமகன் தேவை. மனைவியை இழந்தவரானாலும் பரவாயில்லை. 31 வயதான, மாதம் ரூ. 600 சம்பாதிக்கும் பெண்ணின் சகோதரனுக்கும் 25 வயதுக்குள் மணமகள் தேவை. கிருத்திகை நட்சத்திரம். தெலுங்கில் உட்பிரிவுகள் பேதமில்லை.

## பெட்டி எண் 118

சொந்தமாக வீடும் நிலமும் உள்ள படித்த சொந்தமாகத் தொழில் செய்யும் 35 வயது தெலுங்கு பிராமண இளைஞருக்கு பிராமண வகுப்பைச் சேர்ந்த பெண் தேவை. மொழி, பிரிவு தடையில்லை. வசதியற்றவராயின் திருமணச் செலவும் ஏற்றுக்கொள்ளப்படும்.

## பெட்டி எண் 119

ரிசர்வ் வங்கியில் வேலை பார்க்கும் அழகான மிகவும் மத நம்பிக்கை கொண்ட பழமையான, அஷ்டசகஸ்ரம் காஸ்யப கோத்ரம், 25 வயதுப் பெண்ணுக்கு திருவனந்தபுரம்/ கொச்சின்/ சென்னை/ பெங்களூரில் வேலை பார்க்கும் மணமகன் தேவை. நட்சத்திரம் சதயம்.

## பெட்டி எண் 120

தஞ்சை மாவட்ட கள்ளர் வகுப்பைச் சேர்ந்த 19 வயதுப் பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த மாத ஊதியம் ரூ. 600க்கு குறையாமல் பெறும் மத்திய அல்லது மாநில அரசு அலுவலகங்களில் பணிபுரியும் 25 வயது மணமகன் தேவை.

## பெட்டி எண் 121

5 அடி உயரமுள்ள, மாதம் ரூ. 700 சம்பாதிக்கும் 40 வயதுள்ள, சைவ பிள்ளை வகுப்பைச் சேர்ந்தவருக்கு அதே வகுப்பைச் சேர்ந்த 30 வயதுக்கு மேலுள்ள பெண் தேவை. விதவைகளும் விண்ணப்பிக்கலாம். போட்டோவுடன் விண்ணப்பிக்கவும்.

## பெட்டி எண் 122

27—11—46ல் பிறந்த பூராடம், நாலாம் பாதம், பாரத்வாஜ கோத்ரம், மாதம் ரூபாய் 1000 சம்பாதிக்கும் பெண்ணுக்கு 40 வயதுக்கு மேற்படாத மணமகன் தேவை. நட்சத்திரப் பொருத்தம் இருந்தால் போதும். ஐயர் வகுப்பில் உட்பிரிவுகள் பரவாயில்லை. திருமணம் நன்றாக நடத்திக் கொடுக்கப்படும்.

## பெட்டி எண் 123

கௌசிக கோத்திரம், பூரட்டாதி நட்சத்திரம். எஸ்.எஸ்.எல்.சி. வடகலை அய்யங்கார். 24 வயதுள்ள நல்ல நிறமுள்ள பெண்ணுக்கு அதே பிரிவில் மாத வருமானம் ரூ. 600 பெறும் நல்ல வரன் தேவை. பெற்



திருமண மலர்



றோர்கள் ஜாதக நகல் விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும்.

### பெட்டி எண் 124

நல்ல குடும்பத்தில் பிறந்த ஒழுக்கமான, நாணயமான, எந்தவிதக் கெட்ட பழக்கமும் இல்லாத 5' 6'' உயரமுள்ள தற்பொழுது நடனப் பள்ளி நடத்தி வரும் 24 வயதுள்ள வடமான் கௌசிக கோத்ரம் ஹஸ்த நட்சத்திரம் இளைஞருக்கு 20 வயதுக்குள் நல்ல அழகும், நிறமும், சங்கீத ஞானமும்கொண்ட நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் புகைப்படமும் மற்ற விவரங்களும் அனுப்பி வைக்கவும்.

### பெட்டி எண் 125

போக்கு வரத்துக் கம்பெனியில் வேலை பார்க்கும் கௌண்டன்ய கோத்திரபட்டதாரி பெண்ணுக்கு, அக்கோத்திரமல்லாத மண மகன் தேவை. பெற்றோர் டாக்டர்கள். ஜாதகத்துடனும், மற்ற விவரங்களுடனும் விண்ணப்பிக்கவும்.

### பெட்டி எண் 126

26வயது, தேசிய மயமாகப்பட்ட வங்கியில் கோவையில் ஆபீசர் வேலை. ப்ரஹசரணம் கௌதம கோத்ரம் கொண்ட பையனுக்கு 22 வயதுக்குள் அழகும், குணமும் உள்ள பெண் தேவை: டெல்லியில் இருந்து கிடைத்தால் நலம். ஜாதகம், மற்ற விவரங்களுடன் விண்ணப்பிக்கவும்.

### பெட்டி எண் 127

தமிழக அரசில் வேலை செய்யும் மாதச் சம்பளம் ரூ. 750 பெறும் 31 வயது பிரஹசரணம், கௌசிக கோத்திரம் பிரம்மச்சாரி வரனுக்குப் பெண் தேவை. மத்ய, மாநில அரசில் வேலை செய்பவராயிருத்தல் நலம். அதே ஜாதியில் மற்ற உட்பிரிவினரும் ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். திருமணம் சுமாராகச் செய்தாலும் பரவாயில்லை.

### பெட்டி எண் 128

வடமர்வனை அல்லா திருவய்ங்கார் மணமகன் 31 வயது, வேலை பார்க்கும் பட்டதாரிப் பெண்ணுக்குத் தேவை. அவருடைய 27 வயது, சார்டர்ட் அக்கவுண்டண்டாக வேலை பார்க்கும் சகோதரனுக்கு அழகும் குணமும் உள்ள மணமகள் தேவை. பெண் கொடுத்து, பெண் எடுப்பதாக இருந்தாலும் சரி. ஜாதகத்துடன் பதில் எழுதவும்.

### பெட்டி எண் 129

குடும்பப் பொறுப்புள்ள, வடகலை ஐயங்கார் 39 வயதுள்ள ஆரோக்கியமான, நல்ல நிறமுள்ள பெண்ணுக்கு வரன் தேவை. ஹிந்தி மீடியம் 10 வரை தில்லியில் படித்திருக்கிறாள். மராட்டியும், தமிழும், தையல் வேலையும் நன்றாகத் தெரியும். தம் சம்பிரதாயத்தில் அதிகப் பற்று உண்டு. ஸ்ரீவத்ஸ கோத்திரம். பூரம் நக்ஷத்திரம். வட இந்தியாவிலேயே இருந்து வருகிறாள்.

### பெட்டி எண் 130

வாதூல கோத்ரமல்லாத, தமிழ் பேசும் ஐயர் வகுப்பைச் சேர்ந்த மணமகன், பம்பாயில் வளர்ந்த பி.ஏ. பட்டதாரி, 161 செ.மீ. கோதுமை நிறம், கர்னாடகஇசையில் தேர்ச்சி, மிகவும் பண்பட்ட குடும்பம். 29 வயதான பெண்ணுக்குத் தேவை. ஜாதகம், மற்ற விவரங்களுடன் விண்ணப்பிக்கவும்.

### பெட்டி எண் 131

நல்ல பணக்காரக் குடும்பம், குருடோ அல்லது செவிடு-ஊமையாகவோ உள்ள 30 வயதுக்குள் இருக்கும் பெண், வியாபாரம் செய்யும் எண்ணம் கொண்ட கெட்ட பழக்கம் ஏதுமில்லாத பையனுக்குத்தேவை, சந்தோஷமான வாழ்க்கை நிச்சயம். சாதி, மதம் பேதமில்லை.

### பெட்டி எண் 132

கௌசிக கோத்ரம். பூரட்டாதி நட்சத்திரம், வடகலை அய்யங்கார், 31 வயது; அரசாங்க அலுவலகம் ரூ. 650 சம்பளம் பெறும் பெண்ணுக்கு 36 வயதிலிருந்து 40 வயதுக்குள் உள்ள மணமகன் தேவை.

### பெட்டி எண் 133

ஸ்ரீவத்ஸ கோத்ரம், தெலுங்கு பிராமணன் (தெலுகாணி பிரிவு) 31 வயதுடைய வரனுக்கு 25 வயது முதல் 28 வயது வரையுள்ள மணமகள் தேவை. பையன் எஸ்.எஸ்.எல்.சி. படித்து பிரபல தனியார் ஸ்தாபனத்தில் மாதம் ரூ. 600 பெறுகிறான். நக்ஷத்திரம் கார்த்திகை.
அவனுடைய தமக்கைக்கு வயது 36. மக நக்ஷத்திரம். எஸ்.எஸ்.எல்.சி. தனியார் ஸ்தாபனத்தில் மாதம் ரூ. 500 பெறுகிறாள். இப் பெண்ணுக்கு மணமகன் தேவை. 42 வயதுக்குள், அதே பிரிவில் அல்லது உட்பிரிவில், குழந்தைகள் இல்லாமல், மனைவியை இழந்தவராக இருக்கலாம். மணமகன் சென்னையிலோ மதுரையிலோ அல்லது கோவையிலோ உத்யோகம் செய்பவராக இருப்பது நலம். பெண் கொடுத்துப் பெண் எடுத்துக்கொள்வதைப் பற்றி ஆலோசிக்கப்படும். விவரங்களுக்கு விண்ணப்பிக்கவும்.

### பெட்டி எண் 134

**பா**ல் ஒழுகும் முகம்! இனிய தேன் ஒழுகும் குரல்! குருத்து போன்ற இளமை! அதிகாலைச் சூரியன் போல் தகதகக்கும் பண்பும், நெறியும், படிப்பும் கூடிய அந்த இளைஞன் தான் திருச்சிராப்பள்ளி அரண்மனையில் பெரிய சம்பிரதி. (முக்கிய கணக்குப் பிள்ளை)

நாயக்க வம்சத்தார் ஆண்ட காலம்!

தொடக்கத்தில் முத்து வீரப்ப நாயகரும் அவருக்குப் பின் அவரது அரசியும், பின்னர் விஜயரங்க சொக்கநாத நாயக்கரும், அவர் மறைவுக்குப் பின் அவரது அரசி மீனாட்சியும் ஆட்சி புரிந்து கொண்டிருந்தார்கள்.

இதில் விஜயரங்க சொக்கநாத நாயக்கரிடமும் அவரைத் தொடர்ந்து அவரது மனைவியார் மீனாட்சியாரிடமும் கணக்குப்பிள்ளையாக வேலை பார்த்தவர் இந்த இளைஞர். (மீனாட்சியின் காலம் 1654–1658)

விதவை மீனாட்சி இந்த இளைஞரிடம் அடிக்கடி கணக்குகள் கேட்க வருவார்.

இளைஞனின் அறிவுக் கூர்மை மட்டுமல்ல, அவனது இளமையான அழகும் மீனாட்சியைக் கவர்ந்தது.

அவன் மீது அவளுக்குத் தீராத காதல் தோன்றியிருந்தது. அதைப் பல வழிகளில் இளைஞனுக்கு உணர்த்திப் பார்த்தாள். இளைஞன் வேறு எல்லா விஷயங்களிலும் புரிந்து கொள்பவன். ஆனால் இந்த விஷயத்தில் மட்டும் சூட்டிகை இல்லை.

இதை அறிந்த அரசிக்கு இன்னும் தாபம் அதிகமாகியது.



ஒரு நாள் கணக்குப்பிள்ளை இளைஞன் தனியாக அவன் அறைக்கு வந்தபோது, உடனே அவனது கையைப் பிடித்து இழுத்தாள். ''தாயுமானவர்! என் தாபத்தைத் தணி!'' என்று வாய் திறந்து கெஞ்சிக் கேட்டாள்.

இளைஞன் தாயுமானவன் திடுக்கிட்டான்.

அரசி செய்வது தகாத செயல் என்று புரிந்து கொண்டான். கையை விருட்டென்று உருவினான். அந்தக் கணமே வெளியே ஓடினான்.

நேராக வீட்டுக்கு வந்தான். தனது சிறிய தாயார் மகனை அருணையப் பிள்ளையோடு ஊரை விட்டுப் புறப்பட்டான். தென் திசை நோக்கிச் சென்றான்.

நல்லூரர் என்னும் ஊரை அடைந்து இளைப்பாறும்போது தனது சிவபூஜைப் பெட்டகத்தை எடுத்துக்கொள்ளவில்லை என்று நினைவு வந்தது.

''அருணையா! நீ போய் சீக்கிரம் எடுத்து வா!'' என்று கூறினான்.

# தாயுமானவர்

## - ஸ்ரீவேணுகோபாலன் —

அங்கே அருணையா வருவதற்காகக் காத்திருந்தபோது கருணாகரக் கடவுள் மீது பதிகம் ஒன்றைப் பாடினான்.

சீக்கிரம் அருணையனும் பெட்டகத்தோடு திரும்பினான்.

இருவரும் மேலே புறப்பட்டார்கள்.

தாயுமானவருடைய தந்தை கேடிலியப்ப பிள்ளை. இவருக்கும் மனைவி கெஜவல்லிக்கும் பிறந்த முதல் மகன் சிவசிதம்பரம்.

சிவ சிதம்பரம் பிறந்த பின்னர் கேடிலியப்பருக்கு வெகு நாள் குழந்தை பிறக்கவில்லை.

ஒரு சமயம் கேடிலியப்பரின் தமையனார் வேதாரண்யப் பிள்ளை வந்து, ''உனக்காவது ஒரு மகன் இருக்கிறான். எனக்கு மகவு இல்லையே'' என்று சொன்னபோது,

கேடிலியப்பர் சிறிதும் தயங்காமல், ''அண்ணா! சிவசிதம்பரத்தையே தங்களுக்கு வளர்ப்புப் பிள்ளையாகத் தருகிறேன்'' என்று கூறிச் சிவசிதம்பரத்தை அவரிடம் அளித்து விட்டார்.

பின்னர் மகவு இல்லாத கேடிலியப்ப பிள்ளை திருச்சிராப்பள்ளி முத்துவீரப்ப நாயக்கரிடம் (1608–1625) கணக்குப்பிள்ளையாக அமர்ந்தார்.

தினந்தோறும் திருச்சிராப்பள்ளி மலைக் கோவிலில் எழுந்தருளியிருக்கும் தாயுமானவ சுவாமியைத் தொழுது வர கெஜவல்லி கர்ப்பம் அடைந்தாள்.

தம்பதிகள் மகிழ்ச்சி பொங்கும்படி கெஜவல்லிக்கு ஒரு ஆண் மகவு பிறந்தது.

அந்த மகன்தான் தாயுமானவன். திருச்சிக் கடவுள் பெயரையே அவனுக்கு வைத்தார் கேடிலியப்ப பிள்ளை.

தாயுமானவன் கல்வி கற்று சிறந்த அறிவு ஆற்றலோடு இருக்கும்போது, தந்தை கேடிலியப்ப பிள்ளை மரணமெய்தினார்.

தந்தையைப் போலவே மகனும்—நுண்ணிய அறிவோடு இருப்பதைப் பார்த்த நாயக்கர் மன்னர், தாயுமானவனையே தமது கணக்குப் பிள்ளையாக ஏற்றுக் கொண்டார்.

அரசாங்க வேலை செய்து வரும் நாளையில் தாயுமானவன் தினமும் மலைக்கோட்டை அருகில் இருக்கும் மௌன மடத்துக்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் மௌன குருவை மனதாரத் தொழுது வந்தான்.

இவரது பக்தி சிரத்தையைக் கண்ட மௌன குரு, இவருக்குத் தெய்வ அருள் லபிக்கும்படி அருள் புரிந்தார். அவர் அருள் பெற்ற நாளிலிருந்து தெய்வீகப் பாடல்களாகப் பாட ஆரம்பித்தான் தாயுமானவன்.

பலவிதப் பாமாலைகள் இயற்றி இறைவனைத் தொழுவதுடன், அரண்மனையில் கணக்குப்பிள்ளை உத்தியோகத்தையும் செவ்வனே நடத்தி வரும்போதுதான் அரசி மீனாட்சி அவன் மீது மோகம் வைக்கும் சம்பவம் நிகழ்ந்தது.

நல்லூரை விட்டுக் கிளம்பிய தாயுமானவர், பின்னர் விராலிமலை, திருக்கோகர்ணம், இராமேசுவரம் ஆகிய ஸ்தலங்களுக்குச் சென்று அந்தந்த ஊர் இறைவன் மீது பதிகங்களைப் பாடிய வண்ணம் சென்றான்.

இராமேசுவரத்தில் தாயுமானவனின் அண்ணன் சிவசிதம்பரம் தாயுமானவனைச் சந்திக்க, பின்னர் எல்லாருமாகத் திருமறைக் காட்டுக்கு வந்து அங்கே குடியிருந்து வரலானார்கள்.

இங்கே, அண்ணன் வற்புறுத்த தாயுமானவர் மட்டுவார்குழலி என்கிற பெண்ணை திருமணம் செய்து கொண்டார்.

இந்த இல்லற வாழ்வில் தாயுமானவருக்குப் பிறந்த ஒரே பிள்ளை கனகசபாபதி.

இல்லறத்தில் இருக்கும்போதே தாயுமானவரின் மனம் துறவறத்தை நாட, அதற்கு ஏதுவாக இரு சம்பவங்கள் நிகழ்ந்தன. முதலில் தாயுமானவரின் தாய் இறந்தாள். பின்னர் அவரது மனைவியும் இறந்தாள்.

தன் மகன் கனகசாபாபதியை தமையன் சிவசிதம்பரத்திடம் விட்டுவிட்டு,

தாயுமானவர் துறவு பூண்டு அருணையாவையும் அழைத்துக் கொண்டு செவ்த்

தொண்டு செய்யப் போனார்.

தாயுமான சுவாமி மொத்தம் எழுதிய பாடல்கள் 1452.

1661ல் காட்டூரணியை அடைந்து அங்கே மோன நிட்டையில் ஆழ்ந்த தாயுமானவர் அந்த ஆண்டு தை மாதம் திங்கட் கிழமை அன்று இறைவனடியைச் சேர்ந்தார்.

அவர் சிவப் பதவி அடைந்த இடம் இப்பொழுது லட்சுமிபுரம் என வழங்கப் படுகிறது.

பக்திச் சுவை மட்டும் தாயுமானவரின் பாடல்கள் இன்னும் நமக்கு இறை உணர்ச்சியையும், பக்திக் கண்ணீரையும் தருபவை.

ராமேசுவரம் கோவிலில் தண்டு இறங்கிய போர்ச்சுக்கீசியர்களை தாயுமானவர் ஒரு படை சேர்த்து விரட்டினார் என்பது ஒரு செய்தி.

தாயுமானவரின் மாணக்கர்கள் அருளைய ரும், கோடிக்கரை ஞானியாரும் ஆகும். குருவின் மறைவுக்குப் பிறகு இவர்கள் தாயுமானவரின் கீர்த்தனைகளை நாடெங்கும் பரப்பினார்கள்.

''எல்லாம் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே.''

- பராபரக் கண்ணி

## பாரதியின் புத்திமதி



யதுகிரி புக்ககத்துக்குப் புறப்பட்டபோது மகா—கவி—பாரதியார் கூறிய புத்திமதி:

''புக்ககத்தில் தைரியமாக இரு. பயப் படாதே. ஒட்டுக் கேட்காதே. பிறர் கடிதங் களை உடைத்துப் பார்க்காதே. மனதில் உள்ளதை நேரில் சொல்லிவிடு. மனத்தில் வைத்து உருகுவதை விட வாயினால் சொல்லி விடுவது நல்லது.

உன்னால் முடிந்த அளவு அவர்கள் சொற் படி நட. உன்னால் முடியாவிட்டால் விஷயத்தை எடுத்துச் சொல்லிவிடு — மறைக் காதே! அதில் நன்மை உண்டு. உன்னை விலை கொடுத்து வாங்கவில்லை. அவர்கள் வீட்டை நன்றாக விளங்க வைத்து விருத்தி செய்யப் போகிறாய். அந்த வீட்டில் உனக் குப் பூரண உரிமை உண்டு. அதற்காக பண விவகாரத்தில் தலையிடாதே. வேலை செய்யப் பின்வாங்காதே! அதற்காக சக்தி மீறி யதைச் செய்யாதே! செய்வதை உன் மனம் ஒப்பச் செய்!''

ஒவ்வொரு பெண்ணும் உணர வேண்டிய எத்தனை அருமையான அறிவுரைகள்!

''பாரதியின் அறிவுரை'' என்ற நூலிலிருந்து குமாரி வி. ராஜேஸ்வரி

## இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள் : வேர்க்கடலை

முடிவு தேதி : 15-11-81

**சமையல் கூபன்**

இத்துடன் . . . . . . . . . . . என்ற தலைப்பில் சமையல் குறிப்புகளை அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

களிப்பூட்டும் தீபாவளித் திருநாள்-வாழ்வில்
ஒளியூட்ட உளமார வாழ்த்துகின்றோம்

பல்வேறு சாதனங்கள் தயாரிப்பில்
தலைசிறந்த தொழில் நுட்பத் தேர்ச்சி





டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட
சென்னை-600 001

சைக்கிள்கள், சைக்கிள் சீட்டுகள், செயின்கள்,
டைனமோ லாம்ப் செட்டுகள், எஃகு குழாய்கள்,
எஃகு ஸ்டிரிப்புகள், மெட்டல் செக்ஷன்கள்
மற்றும் 'Z' பார்லின்கள் தயாரிப்பாளர்கள்.

Imageads M-TI-1446 Tam



# கலப்பட அகராதி



கலப்படம் பலவிதம்! எந்தெந்தப் பொருளில் என்னென்ன கலப்படம் செய்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? இந்தத் தகவலைப் பட்டியல் போட்டுக் காட்டியுள்ளது சென்னை மத்திய அரிமா சங்கம் வெளியிட்டுள்ள ஓர் அறிக்கை.

அதோடுமட்டும் அல்ல. கலப்படத்தைக் கண்டுபிடிக்க ஒவ்வொரு பொருளுக்கு ஒவ்வொரு சோதனையை அந்த அறிக்கை தெரிவிக்கிறது. பட்டியலை நீங்களே பாருங்களேன்:

| பொருள் | கலப்படப் பொருள் | கண்டுபிடிக்கும் வழி முறைகள் |
|---|---|---|
| சர்க்கரை | சாக்பீஸ் பௌடர், ரவை. | சிறிதளவு எடுத்துத் தண்ணீரில் கலந்தால் கலப்படப்பொருள் அடியில் தங்கிவிடும். |
| பொடி உப்பு | பொடி செய்யப்பட்ட வெள்ளைக் கல், சாக்பீஸ் பொடி. | சிறிதளவு எடுத்துத் தண்ணீரில் கலந்தால் கலப்படப் பொருள் அடியில் தங்கிவிடும். |
| மிளகாய்ப் பொடி | மாவுப் பொருள், வண்ணப் பூச்சு கொண்ட பொடி. | வண்ணப்பூச்சு செய்யப்பட்டிருந்தால் சிறிதளவு பொடியை எடுத்துத் தண்ணீரில் விட்டால் உடனே வண்ணப் பூச்சு கலந்துவிடும். மற்ற கலப்படங்களைப் பரிசோதனை சாலையில்தான் கண்டறிய வேண்டும். |
| தேநீர் தூள் | கலர் செய்யப்பட்ட மரத்தூள். | சிறிதளவு தூளை எடுத்துப் பச்சைத் தண்ணீரில் கலந்தால் சுத்தமான தேநீர் உடனே நிறம் தருவதில்லை. கலப்படத்துக்காக, வண்ணம் பூசப்பட்டவை, உடனே பழுப்பு, கருப்பு நிறத்தையோ தருகிறது. |
| பருப்பு வகைகள் | கேசரிப்பருப்பு கலப்படம் | சிறிதளவு பருப்பை எடுத்து 50 மில்லி ஹைடிரோ குளோரிக் அமிலத்துடன் கலந்து அந்தப் பாத்திரத்தை வெப்பமான நீரில் 15 நிமிடங்களுக்கு வைத்திருந்தால் ரோஸ் கலர் வருமானால் கேசரிப் பருப்பு கலந்திருப்பதை அறியலாம். |
| அரிசி | வெள்ளைக் கல் | சிறிதளவு அரிசியை எடுத்துத் தண்ணீரில் மிதக்க விடுங்கள். கற்கள் உடனே கீழே தங்கிவிடுகின்றன. அல்லது 15 நிமிட நேரம் ஊறவைத்த பிறகு சிறிய மரக் கட்டையினால் அரைத்தோமானால் சுத்தமா அரிசி அரைபடும். கல் தனியே நின்றுவிடும். |
| எண்ணெய் | | பரிசோதனை சாலையில்தான் கண்டு பிடிக்க முடியும். |
| வெண்ணெய், நெய் | வனஸ்பதி, மிருகக் கொழுப்பு | சிறிதளவுநெய்யுடன்அதேஅளவுஹைடிரோ குளோரிக் அமிலத்தைச் சிறிதளவு சர்க்கரையுடன் சேர்க்கவேண்டும். சேர்த்தபின் ரோஸ் வண்ணம் வருமாயின் கலப்படம் செய்யப்பட்டது என அறியலாம். |

தகவல் : **திருமதி சம்பா நரசிம்மன்**

# வயதுக்கு வந்த பின்...

சுமார் 20 வருடங்களுக்கு முன்பெல்லாம் பெண் குழந்தைகள் ''வயதுக்கு வருவது'' 14 வயது முதல் 16 வயதுக்குள்ளாக இருந்தது.

தற்காலத்தில் கடந்த 10, 15 வருடங்களாக பெண் குழந்தைகள் பத்தரை வயதிலிருந்து 14 வயதுக்குள் ''வயதுக்கு'' வந்து விடுகிறார்கள். இது தற்போதைய உணவின் தரத்தினாலேயே என்று கருதப்படுகிறது. புரத சத்துள்ள ஆகாரங்கள் குழந்தைகளுக்கு கிடைப்பதினால் அவர்களுக்கு உடல், உள்ள வளர்ச்சி வேகமாக ஏற்படுகிறது. தாய்மார்கள் குழந்தைகளின் ஊட்ட சத்துத்தேவைகளை நன்றாக உணர்ந்திருக்கிறார்கள்.

நடைமுறையில் இது ''வயதுக்கு வருவது'' ''பெரியவளாவது'', ''புஷ்பவதியாவது'', ''திரள்வது'' ''மாதவிலக்கு'', ''பூப்பெய்துவது'' என்று பலவாறு சொல்லப்படுகிறது.

முன்காலத்தில் இச்சம்பவத்தைப் பற்றி தாய்மார்கள் குழந்தைகளிடம் பேசவே கூச்சப்படுவார்கள். அது ஏற்பட்ட பின்தான் ''அது'' என்ன என்பதை மறைமுகமாக விளக்குவார்கள். அதனால் பல பெண் குழந்தைகள் அதிர்ச்சி யடைவதும் உண்டு.

தற்காலத்தில் பெண் குழந்தைகள் முக்கால்வாசிப் பேர் பள்ளிக்கூடங்களில், நண்பர்களிடம் பேசியும், பல புஸ்தகங்களைப் படித்தும் இதைப் பற்றித் தெரிந்து கொண்டு விடுகிறார்கள். பழைய காலம் போல் இருப்பதில்லை. ஆனாலும் ஒருசில பெண் குழந்தைகள் இது என்னவென்றே அறியாமல் இருக்கிறார்கள்.

திடீரென்று உதிரத்தைப் பார்க்கும்போது இக் குழந்தைகள் அதிர்ச்சி யடைகிறார்கள். எனக்குத் தெரிந்த சில தாய்மார்களும் சீக்கிரமே ஏற்படும் இச் சம்பவத்தை எதிர்பார்க்காததினால் பயந்துபோய் டக்டரிடம் வருகிறார்கள்.

பெண் குழந்தைகள் ''வயதுக்கு வரும்'' முன் பலவிதமான உடல், உள்ள, உணர்ச்சி மாறுதல்கள் ஏற்படுகின்றன. திடீரென்று உடல் வளர்ச்சி, உயரம் வைத்தல், பருமன் ஏற்படுதல், மார்பகங்கள் பெரிதாவது, வலி ஏற்படுவது முதலியவை உண்டாகும்.

பயம், கூச்சம், மனக் கிலேசம், ஆண்களைக் கண்டால் ஒருவிதமான ஈர்ப்பு முதலியவை ஏற்படலாம். இந்த உடல், உள்ள மாறுதல்கள் Hormonial changes தான்.

இவற்றைக் கட்டாயமாக குழந்தைகளின் தாயோ, அல்லது மூத்த சகோதரியோ, அல்லது சித்தி, அத்தை முதலியவர்களோ அல்லது குடும்ப டாக்டரோ விளக்கமாக பயம் இல்லாத முறையில் எடுத்துச் சொல்ல வேண்டும். வயதுக்கு வருமுன் சில பெண் குழந்தைகளுக்கு அடிவயிற்றில் வலியோ அல்லது low grade temperatureரோ ஏற்படலாம். இவைகள் உடலில் ஏற்படும் Physiological & Hormonial changes களினால்தான்.

ஒரு தாய் தன் பெண்ணிடம் இந்த மாதிரி உதிரப் போக்கு என்ன காரணத்தினால் ஏற்படுகிறது என்பதைக் கூச்சப்படாமல் அழகாக விளக்கிச் சொல்ல வேண்டும். பெண் களுக்குத்தான் கர்ப்பப் பை இருக்கிறது. பெண்கள்தான் தாயாகும் வாய்ப்பைப் பெறுகிறார்கள். கர்ப்பப் பையின் இருபுறமும் இரண்டு உருண்டைகள் மாதிரி Ovary என்

டாக்டர் சாந்தரி மேனன்



12 வயதினிலேயே...



பது இருக்கின்றது. அவைகளில் இருந்து மாதத்துக்கு ஒரு முறை ஒரு ''பெண் கரு அணு'' அல்லது ''முட்டை'' உண்டாகும். அந்த முட்டைதான் கல்யாணமான பிறகு ஆண்களிடம் உண்டாகும் ''விந்து'' (Sperm) உடன் கலப்பதினால் கருவாக மாறி பிறகு குழந்தையாகிறது என்பதை விளக்க வேண்டும். பெண் கரு அணுவுடன் இணையும் சந்தர்ப்பம் ஏற்படாவிட்டால், அதாவது உடல் உறவு ஏற்படா விட்டால் பெண் கரு கர்ப்பப் பையில் சென்று தங்கி ஒரு மாதத்துக்கு ஒரு முறை ''மாதவிடாய்'' யாக வெளியேறும். ஒவ்வொரு மாதமும் கர்ப்பப் பை ஒரு அரச குமாரனை வரவேற்பதற்காகச் செய்யும் ஏற்பாடு போல் தன்னை ''ஆண் – பெண் கரு அணுக்களை'' இணைந்து வரும் ''கருவை'' ஏற்பதற்குத் தயார் செய்து கொள்கிறது. இந்த ஏற்பாடே அதாவது கர்ப்பப் பையில் உண்டாகும் Eudo metrial Changes உதிர்ந்து மாதவிடாயாக உதிரமாக வெளியேறுகிறது.

இந்த உதிரப் போக்கு கர்ப்பப் பையிலிருந்துதான் வெளியாகிறது. மூத்திரப் பையிலிருந்தோ, அல்லது மலத் துவாரத்திலிருந்தோ அல்ல என்பதையும் விளக்க வேண்டும்.

உதிரப் போக்கு ஏற்படும்போது அதற்கு ''தக்க பாதுகாப்பு''எப்படிச் செய்துகொள்ள வேண்டும் என்பதையும் சரியாகச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

இக்காலத்தில் எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் காலேஜ்களிலும் Sanitary pad ஐம்பது பைசாவுக்குக் கொடுக்கிறார்கள். குழந்தைகளிடம் உதிரப் போக்கு பள்ளியிலோ அல்லது காலேஜிலோ ஏற்பட்டால் உடனே டீச்சரிடம் போய்க் கேட்டுத் தகுந்த உதவியைப் பெறச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

பிறகு இது மாதா மாதம் 25 முதல் 30 நாட்களுக்கு ஒரு முறை ஏற்படும் சம்பவம் என்பதையும் விளக்க வேண்டும். ஒரு பிளாஸ்டிக் கவரில் Sanitary napkin ஒன்றை ஒரு Elastic beltடன் கைப் பையில் எடுத்துச் செல்லுமாறு புத்தி புகட்ட வேண்டும்.

சில பெண் குழந்தைகளுக்கு உதிரப் போக்கு சில மாதங்களுக்கு அதிகமாக இருக்கலாம். வயிற்று வலியும், இடுப்பு, தொடை வலியும் ஏற்படலாம். மார்பகங்கள் விண்ணென்று வலிக்கலாம். அக்காலங்களில் இவர்கள் விளையாடாமலும், பள்ளிக்குச் செல்லாமலும் இருப்பது நல்லது.

வயிற்று வலி முதலியவைகளுக்குத் தற்காலத்தில் நல்ல மாத்திரைகள் கிடைக்கின்றன. இவை அபாயமற்றவை. அதிகம் உதிரப் போக்கு ஏற்படுவதைத் தவிர்க்க டாக்டரிடம் ஆலோசனை கேட்டு கால்ஷியம் இருக்கும் – விடமின் முதலியவைகள் கலந்த டானிக்குகளை வாங்கிக் கொடுக்கலாம்.

ஒருசில பெண் குழந்தைகளுக்கு ''புஷ்பவதி''யாகிய பிறகு 7–8 மாதங்களுக்கு அல்லது ஒரு வருடம் கூட மறுபடியும் ''தீட்டு'' வராமலும் இருக்கலாம். இதுவும் நார்மல்தான். இதுவும் சில மாதங்களில் சரியாகிவிடும்.

கல்யாணமாகி கர்ப்பமானால் மாதவிடாய் சமயத்தில் ஏற்படும் வயிற்று வலி குறைந்து போய் நின்றுவிடும். இந்த வலியை ''டிஸ்மெனோரியா'' என்று சொல்வார்கள்.

தாய்மார்கள் பெண் குழந்தைகளுக்கு ''வயது வந்த'' பின் ஏற்படும் மாறுதல்களை விளக்கி அவர்கள் ஆண்களிடம் பழகும் போது, எதற்காக, எப்படி தங்களைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்பதையும் விளக்கமாகச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

அறியாமையும், வயதினால் ஏற்படும் உணர்ச்சிகளும் ஆபத்தில் கொண்டு விடும் என்பதையும் விளக்க வேண்டும்.

மேலை நாடுகளில் பெண் குழந்தைகளுக்கு மாதவிலக்கு, செக்ஸ், கர்ப்பம் முதலியவற்றைப் பள்ளிகளில் சொல்லிக் கொடுக்கிறார்கள். நிறைய கல்யாணமாகாத பெண் குழந்தைகள் ஆண்களுடன் பேசுவதினால் கர்ப்பத் தடை மாத்திரைகளை ரெகுலராக எடுத்துக் கொள்கிறார்கள். இது கருச்சிதைவு (Abortion for unmatured mothers) அதனால் ஏற்படும் தீங்குகளைத் தடுக்கின்றன என்பது அவர்களுடைய அபிப்பிராயம்.

நமது நாடு இன்னும் அவ்வாறு முன்னேற்றம் அடையவில்லை. நமது பழக்க வழக்கங்களும், பண்பாடுகளும் இன்னும் ஒரு வரம்புக்குள்தான் இருக்கின்றன. நமது குழந்தைகளுக்குத் தக்க சமயத்தில் தகுந்த அறிவுரைகள் சொல்லி அவர்களை நல்ல பெண்களாக வளர்ப்பதில்தான் தாய்மார்களின் பெரும் பொறுப்பு இருக்கிறது.

❁❁❁❁❁❁❁❁❁:❁❁❁❁❁❁❁❁

ஸேமியா பாயசம் செய்யும்போது ஸேமியாவைச் சிறிது நெய் விட்டு சிவக்க வறுத்து ஆறியதும் நன்றாக ஜலம் விட்டு கழுவிய பிறகு வேகவைக்கவும். பாயஸம் திரிந்தமாதிரி ஆனால் ஒரு சிட்டிகை சமையல் சோடாவை பாலில் கரைத்துப் பாயஸத்துடன் கொதிக்க விட்டால் சரியாகி விடும்.

—கமலா வெங்கடராமன்



தீபாவளி வாழ்த்துக்கள்




பட்டுச்சேலைகள் • வேஷ்டிகள்
எல்லாவித ஜவுளிகள்
உயர்ந்தரகம் ஒரே விலை

PHONE: 444115, 445657

# நல்லி சின்னசாமி செட்டி

பட்டு ஜவுளி வியாபாரம்
தியாகராய நகர் • மதராஸ்-17.

பனகல் பார்க் எதிரில்

# ராசி பலன் (நவம்பர் '81)

## மேஷம்



இம்மாதம் வெகு நாட்களாக உங்களிடமிருந்து விலகியிருந்த நட்பு ஒன்று நாளுகக் கூடும். விருந்தினர்களின் வரவும் இருக்கும். இதனால் வியாபாரத்தில் ஈடுபட்டு இருப்பவர்களுக்கும், அரசாங்க உத்தியோகத்தில் இருப்பவர்களுக்கும் முன்னேற்றம் உண்டு. கணவரின் விரைவான பதவி உயர்வினால் மனைவியின் கௌரவமும் சமூகத்திடையே மேம்படும். குடும்பத்திலே சுமுகமான சூழ்நிலை இருக்கும்.

## ரிஷபம்



தெய்வ அருளினால் உங்கள் மனதிலே ஏற்படும் எண்ணத்தாலும், விரைவாகச் சிந்தித்து எடுத்த காரியத்தை முடிக்கும் ஆற்றல் உங்களிடம் அதிகமாக இருப்பதாலும் நீங்கள் திட்டமிட்ட காரியம் வெகு விரைவில் நிறைவேறப் போகிறது. இடையிலே ஏற்பட்ட சிறு சலனங்கள் மறைந்துவிடும். வெளியூர்ப் பயணங்களும் அதிக லாபத்தை கொடுக்கும். குழந்தைகளினால் மகிழ்ச்சி உண்டாகும்.

## மிதுனம்



உங்கள் கைகளில் வைத்திருக்கும் பொறுப்புக்களையும், கடமைகளையும் விரைவில் முடித்துவிடப் பாருங்கள். புதிய பொறுப்புக்களோ, (அ) உங்கள் வாழ்க்கையில் பெரும் மாற்றமோ ஏற்படவிருக்கிறது. மாதத்தின் இரண்டாவது வாரம் வெகு கவனமாக இருக்க வேண்டியுள்ளது. பண வரவைப் பாதுகாத்து வையுங்கள். செலவினங்கள் கூட வாய்ப்பு உண்டு.

## கடகம்



வெகு காலமாகத் தள்ளிப் போய்க்கொண்டிருக்கும் சுப நிகழ்ச்சிகள் அநேகமாக இந்த மாதத்தில் முடிவாகிவிடக் கூடும். அதிர்ஷ்டத்தைக் கொண்டு வரும் உறவுகள் ஏற்படலாம். பண வரவை மிஞ்சிய செலவினங்கள் இருப்பினும், வாழ்க்கை குதூகலமாக இருக்கும். கணவருடைய பக்கத்திலிருந்து உறவுகள் மகிழ்ச்சியைத் தரும்.

## சிம்மம்



புதியவர்களுடன் ஏற்படவிருக்கும் தொடர்புகளில் மிகவும் கவனமாக இருப்பது நல்லது. பிரச்னைகள் ஒன்று மாற்றி ஒன்று எழுந்து கொண்டே இருக்கும். தெய்வத்தின் அருள் உங்களுக்குப் பூரணமாக இருப்பதால் பூரணமாக அவற்றிலிருந்து விடுபட்டு விடுவீர்கள். புதிய தொழில்களை மேற்கொள்ளாமல், இருப்பதைப் பாதுகாப்பது இன்னும் சில நாட்களுக்கு நல்லது.

## கன்னி



இம்மாதத்தின் முதல் இரண்டு வாரங்கள் கிடைக்கவிருக்கும் ஓய்வை நன்றாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். பொழுதுபோக்கு அம்சங்கள் நிறைந்த வாரமாக அமையும். கடைசி இரண்டு வாரங்கள் மேற்கொள்ளவிருக்கும் புதிய பொறுப்புக்கள், திட்டமிட்ட பலனைத் தரக்கூடியதாக அமையும். தொழில் ரீதியாக எதிர்பார்த்த வேலைகள் நிறைவேறும் காலம் இது.

### துலாம்



திடீரென்று உற்சாகத்தால் ஏதேனும் வேலையைச் செய்துவிடுவதோ, வாக்குறுதி களைக் கொடுத்து விடுவதோ இந்த மாதத்தைப் பொறுத்தவரை அவ்வளவு நல்ல தில்லை. செலவினங்கள் வெகுவாக இருக்கும். தொடரப்போகும் மாற்றங்களினால் ஏற்பட விருக்கும் சரிவுகளைத் தவிர்க்க வெகு கவனத்துடன் இருக்க வேண்டும். விடா முயற்சியும், தன்னம்பிக்கையும் இறுதி வெற்றியை உங்களுக்கே தரும்.

### விருச்சிகம்



உங்களுடைய நண்பர்களிடமும், உறவினர்களிடமும் மிகவும் வெளிப்படையாகப் பேசி விடுவது இப்போதைக்கு நல்லது. மனதிலே வைத்துக் கொண்டிருந்தால் உங்களைத் தவறாகக் கணிக்க வாய்ப்பு ஏற்படும். நீங்கள் நினைத்திருக்கும் திட்டப்படிதான் அனைத்தும் நடக்கும். காலம் உங்களுடைய வழியில் வெகு விரைவில் வெற்றியைக் கொண்டு வரும்.

### தனுசு



இரண்டுங்கெட்டானாகச் சிந்தித்துக்கொண்டிருக்கும் திட்டங்களில் இரண்டில் ஒன்று என்று தீர்மானமாக முடிவு எடுத்துவிடுவது நல்லது. அதனால் மேலும் பல வாய்ப்புக் களும், பதவி உயர்வும் ஏற்பட வழி இருக்கிறது. பொதுமக்களிடையே நல்ல செல்வாக்கும், புகழும் ஏற்படும். பண வரவும் திருப்திகரமாகவே இருக்கும்.

### மகரம்



உங்களுடைய வர்த்தகமும், தனியார் தொழிலும் விரிவடைந்து கொண்டே செல்வதற்கு வழிகள் இந்த மாதத்தில் உண்டு. உறவினர்கள், நண்பர்களின் ஒத்துழைப்புப் பூரணமாக உங்களுக்கு இருக்கும். இடையிலே, தீராத கடன்கள் சில தொல்லை தந்தாலும், எதிர்காலத்தில் கிடைக்கவிருக்கும் வெற்றிகள் அவற்றைச் சரிசெய்துவிடும். அனைவரிடமும் சுமுகமாக இருக்கமுயலுங்கள்.

### கும்பம்



மற்றவர்களின் பிரச்னைகளை, அவர்களின் கண்ணோட்டத்திலிருந்து புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள். அப்படிப்பட்ட மனோபாவமே உங்கடைய வாழ்க்கையை அமைதியாக நடத்திச் செல்ல உதவும். ஒரே சீராகச் சென்றுகொண்டிருக்கும் உங்களுடைய வாழ்க்கையைத் தெய்வ அருளால் காப்பாற்றிக் கொள்ளுங்கள். கடைசி வாரத்தில் நீங்கள் நினைத்த காரியம் கைகூடும்.

### மீனம்



எழுத்தாளர்களுக்கும், கலைஞர்களுக்கும், முதல் இரண்டு வாரம் சிறிதே சோர்வு தட்டினாலும், பின்னர் சுவையான முன்னேற்றங்கள் உண்டாகும். பரிசுகள் கிடைக்க கூடிய வாய்ப்புக்கள் உண்டு. குடும்பத்தில் இருக்கும் தடங்கல்களும் மாறி சுமுகமான நிலை ஏற்பட வழிகள் உண்டாகும்.

# மிக்ஸர் உறை

நிர்மலா தேசிகன்

**தேவையான பொருட்கள் :**

மதுரை கோட்ஸ் ஆங்கர் முறுக்கப்பட்ட பருத்தி நூல் கேனரி மஞ்சள் 0288, சிவப்பு நிறம் 0333, காபி 0381, ஒவ்வொன்றிலும் 1 சிட்டம்.

எம்பிராய்டரி முழுவதிலும் நூலை மூன்றாக உபயோகிக்கவும். சமமாக நெய்யப்பட்ட எம்பிராய்டரி லினென் பச்சை நிறத்தில் 91.4 செ.மீ. அகலத்தில் 68.5 செ.மீ. (91.4 செ.மீ.) லைனிங் துணி (81.2செ.மீ.) அகலத்தில். எம்பிராய்டரி ஊசி எண் 7.

வரை படத்தில் எக்ஸ் அமைப்பு முக்கியமான பாகத்தைக் குறிக்கும். ஒய் அமைப்பு கஸெட்டைக் குறிக்கும். வரைபடத்தில் உள்ள ஒரு சதுரம் 2.5 செ.மீ. அளவு குறிக்கும். மேல்கொண்ட ஸ்கேலைப் பின்பற்றி அமைப்புக்களைப் பெரிதாக வரைந்துகொள்ளவும்.

துணியை அகலவாட்டில் நடுவில் மடிக்கவும். எக்ஸ் அமைப்பின் உடைந்த வரி மடிப்பின் மேல் வைத்து வெட்டவும். மீதித் துணியை பிரித்து ஒய் அமைப்பை வெட்டிக்

A

B




எம்ப்ராய்டரி

கொள்ளவும். லைனிங் துணியில் இதேபோல் இரண்டு துண்டுகள் வெட்டவும்.

வரைபடத்தில் ஒரு முழு அமைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. எக்ஸ் அமைப்பின் நீளமான பகுதியை நேராக வைத்துக் கொண்டு எம்பிராய்டரி டிஸைனை இடது பக்கத்தின் கீழ்ப் பாகத்தில் டிரேஸ் செய்து கொள்ளவும். இந்த அமைப்பின் ஏ பாகம் கீழ் ஓரத்திலிருந்து 3.2 செ. மீட்டரும் பி பாகம் பக்க ஓரத்திலிருந்து 3.2 செ. மீட்டரும் இருக்க வேண்டும்.

இது முடிந்தவுடன் ஓரத்திலிருந்து ஏ பாகம் 6.3 செ. மீட்டரும் மேல் ஓரத்திலிருந்து பி பாகம் 7 செ. மீட்டரும் இருக்குமாறு வைத்துக் கொண்டு இன்னும் ஒரு முறை டிரேஸ் செய்து கொள்ளவும்.

அமைப்பின் வலது பக்கத்திலிருந்து 0.6.மீ. தள்ளி டிரேஸ் செய்து இன்னொரு முறை டிரேஸ் செய்யவும். (பி என்ற பாகம் கீழ் கரையிலிருந்து 4.4 செ.மீ. இருக்கவேண்டும்.)

வரை படம் 1ம், செய்முறை எண் குறிப்பையும் பின்பற்றி எம்பிராய்டரி முடிக்கவும்.

ஒரே எண் குறிப்புக் கொடுக்கப்பட்ட பாகங்கள் எல்லாம் ஒரே கலரிலும் மற்றும் தையலிலும் எம்பிராய்டரி செய்ய வேண்டும்.

முடிக்கும் விதம்: லைனிங் துண்டுகளை உள் பக்கமாக வைத்து ஓரத்தில் இணைக்கவும். எம்பிராய்டரி செய்யப்பட்ட பாகத்தின் மேல் கரையின் நடுப் பாகமும் கஸெட் துண்டின் குட்டையான ஓரத்தின் நடு பாகமும் முன் பாகங்களை ஒன்றைப் பார்த்தாற்போல் வைத்து இணைக்கவும்.

மேல் ஓரங்களையும், பக்கங்களையும் ஓரத்திலிருந்து 1.9 செ.மீ. விட்டுத் தைக்கவும். தையலின் மேல் இஸ்திரி செய்து ஓரங்களில் உள்ள நூல்களைக் கத்தரிக்கவும். கீழ் ஓரத்தில் 1.3 செ.மீ. மடித்து நழுவுத் தையல் செய்யவும்.

வேறு விதமான நூல்கள்:



மதுரை கோட்ஸ் ஆங்கர் பேர்ல் நூல் எண் 8 (10 கிராம் பந்து) கெனரி மஞ்சள் 0289. சிவப்பு நிறம் 0332. காபி 0387 ஒவ்வொன்றிலும் ஒரு பந்து.

வரைபடம் 2. கௌச்சிங்: அமைப்பின் மேல் ஒரு நூலை வைத்து மற்றொரு நூலினால் சிறு தையல்களை உபயோகித்து. சமமான இடைவெளி விட்டு முடி போடவும்.

சாடின் தையலுக்கு, கௌச்சிங்கில் முடி போடும் தையலுக்கும் ஒற்றை நூல் உபயோகிக்கவும். மற்ற தையல்களுக்கு இரட்டையாக உபயோகிக்கவும்.

செய்முறை எண் குறிப்பு:

1 – 0288; 2 – 0333: கௌச்சிங்
3 – 0288; 4– 0381: சாடின் தையல்
5 – 0288 காம்புத் தையல் (Stem stitch)
6 – 0288 கம்பளித்தையல் (Blanket-stitch)
7 – 0987 பின்னோக்கிய தையல் (Back stitch)
8 – 0987 டெய்ஸி தையல் (Daisy stitch)

(Standed cotton) முறுக்கப்பட்ட பருத்தி நூல்
1 – 0289; 2 – 0332: கௌசிங் (Couching)
3 – 0289; 4 – 0381: சாடின் தையல் (Satin stitch)
5 – காம்புத் தையல் (Stem stitch)
6 – 0289 கம்பளித் தையல் (Blanket stitch)
7 – 0381 பின்னோக்கிய தையல் (Back stitch)
8 – 0381 டெய்ஸி தையல் (Daisy stitch)
பேர்ல் நூல்.



உடம்பில் எங்காவது நரம்புச் சுளுக்கு ஏற்பட்டால் அந்த இடத்தில் விளக்கெண்ணெயைத் தடவி நன்கு நீவிவிட்டால் சுளுக்கு நீங்கும்.

–என்வீயென்



# தனக்குத் தானே வைத்தியம் செய்து கொள்ளாதீர்கள்!

தினசரி ஏராளமானோர் தவறான மருந்துகளை உட்கொண்டு தவிக்கின்றனர். இறக்கின்றனர். மருந்துகளின் சக்தி உட்கொண்டவர்களின் அப்போதைய நிலையைக் கொண்டுள்ளது. தன் வைத்தியத்தினால் ஏற்படும் குறைகளும் தவிர்க்கும் முறைகளும் சில:

- உடம்பைக் குறைக்க உபயோகிக்கும் மருந்துகள் தூக்கமின்மையையும் பசியின்மையையும் கொடுக்கின்றன. கொழுப்பைக் குறைப்பதில்லை.

- இரும்புச் சத்துக் குறைவு இல்லாதபோது அயர்ன் டானிக்குகள் உபயோகமற்றவை. குறைந்த பாகமே உடலில் சேர்க்கப்படுகின்றன. மீதி மலத்தில் சென்று விடுகின்றன. புஷ்டியான குழந்தைகள் உட்கொண்டால் குடல் புண்ணையும் உருவாக்கக் கூடும். நரம்பு டானிக்குகளில் உள்ள பொட்டாசியம் புரோமைடு விஷ சம்பந்தமான அறிகுறிகள் தோற்றுவிக்கக் கூடும்.

- சமனப்படுத்தும் மருந்துகளும் தூக்க மாத்திரைகளும் குழப்பத்தையும் ஞாபக மறதியையும் கொடுக்கின்றன. இதனால் அதிகப்படியான மருந்து சாப்பிட நேருகிறது. மரணம் ஏற்படவும் ஏதுவாகிறது.

- வலியகற்றும் மருந்துகள் மிகக் கடுமையானவை. இவை வயிற்றிலுள்ள மெல்லிய ஜவ்வினைப் பாதிக்கிறது. சில பெப்டிக் அல்சரை உருவாக்குகிறது. பெனிசிலின் சிறுநீரகத்தையும் இரத்த ஓட்டத்தையும் பாதிக்கிறது.

- ஆண்டிபயாடிக்ஸ் மருந்துகளைச் சரியான முறையில் பயன்படுத்த வேண்டும். சில எலும்பின் மஜ்ஜையில் சரிப்படுத்த இயலாத பாதிப்பைத் தருகின்றன. குடல்நோய், பேதி, மற்றும், விட்டமின் பி குறைவு போன்றவை இவற்றை உட்கொள்வதால் உருவாகிறது. மருத்துவர் தரும் ஆண்டி பயாடிக்ஸ் மருந்துகளை அவர் சாப்பிடச் சொல்லும் காலம்வரை சாப்பிடல் வேண்டும். இல்லையெனில் மீண்டும் வியாதி தோன்றக் கூடும்.

- பேதி மருந்துகள் உடல் முழுவதையுமே பாதிக்கக் கூடியவை.

மருந்து உபயோகிக்கச் சில வழிகள்:

- உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் பாதிப்பு தலைவலி, வயிற்றோட்டம், செரியாமை போல் இருந்தால் சாதாரண வலியகற்றும் மருந்து முதலுதவி, மற்றும் குறைந்த வழி மருந்துகளைப் பயன்படுத்தலாம். இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குள் உங்கள் வைத்தியம் பயன் தராவிடில் உடன் வைத்தியரிடம் செல்லவும்.

- வைத்தியரின் ஆலோசனை இல்லாமல் ஒரே சமயத்தில் இரு மருந்துகள் உட்கொள்ளாதீர்கள். கண்டிப்பாக கர்ப்பமுற்ற பெண்கள் வைத்தியரை ஆலோசிக்காமல் மருந்துகள் சாப்பிடக் கூடாது.

- குறிப்பிட்ட மருந்து உங்களுக்கு அலர்ஜியை ஏற்படுத்துவதாக இருந்தால் ஒவ்வொரு முறை ஆலோசிக்கும்போதும் டாக்டரிடம் கூறிவிடுங்கள். மருந்தை உட்கொள்ளும்போது உங்கள் அலர்ஜிக்குரியது அதில் உள்ளதா என்று கவனியுங்கள்.

- உங்கள் பாதுகாப்பின்போது ஒரே டாக்டரிடம் மருந்தும் ஆலோசனையும் பெறவும். வேறு டாக்டரிடம் செல்ல வேண்டியிருந்தால் முந்திய டாக்டரின் மருந்துகள் மற்றும் ஆலோசனைகளையும் முதலில் கூறிவிடவும்.

- முன்னர் ஏற்பட்ட நோயே மீண்டும் ஏற்பட்டால் மீதப்பட்ட மருந்தையோ முன்னர் உங்களுக்கோ உங்கள் குடும்பத்துக்கோ எழுதித் தந்த மருந்தையோ உபயோகிக்க வேண்டாம். முடிவடைந்த தேதிக்குப் பிற்பட்ட மருந்தைத் தூக்கி எறிந்து விடுங்கள். உபயோகப்படுத்தாத மருந்தை ஆஸ்பத்திரிகளுக்கோ சமூக சேவை ஸ்தானத்துக்கோ கொடுத்துவிடுங்கள்.

ஆதாரம்: ரீடர்ஸ் டைஜஸ்ட்

தொகுப்பு: க. முருகவேள்





'பெண்கள் இரண்டு பேர் சேர்ந்து வாழ மாட்டார்கள்; உருப்படியாக ஒன்றும்செய்ய மாட்டார்கள்' என்று சொன்ன காலமெல் மால் போயே போய்விட்டது. ஆங்காங்கே ஏரியாவுக்கு ஒன்றாக, முளைத்திருக்கும் மாதர் சங்கங்கள் ஊருக்கு உபயோகமாகப் பல வேலைகளைச் செய்கின்றன. இவர்களுடன் மற்றவர்களும் இணைந்து மேலும் நல்ல சமூக சேவையைச் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அவர்களில் ஒரு அமைப்பினர் தான், 'இன்டேன் விநியோகஸ்தர்கள்',

ஏனப்படும் 'காஸை' விநியோகிக்கும் தென்னக இன்டேன் விநியோகஸ்தர்கள். பல மாதர் சங்கங்களை ஒன்று கூட்டி தீ விபத்தைத் தடுக்கப் பாதுகாப்பு நடவடிக்கைகளைச் சொல்லித் தருகிறார்கள்.

சென்ற முறை சட்ட சபையிலும் கூட இந்தத் தீவிபத்தைப் பற்றிய சர்ச்சை எழுந்தது. தீவிபத்தில் இறந்தவர்களில் பெண்கள்தான் அதிகம். எனவேதான் சமையலறையில் எப்படி யெல்லாம் பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்பதைச் சொற்பொழிவுகளாகவும், திரைப் படமாகவும் சொல்லித் தருகிறார்கள்.

கடந்த 13ந் தேதியன்று அண்ணா நகரில் ஐந்து மாதர் சங்கமும் இளைஞர் சங்கம் ஒன்றும் கூடி இந்த விழாவை நடத்தியது.

சிலிண்டர் (அ) ரப்பர் டியூப் போன்றவை தீப்பற்றிக் கொண்டால் என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சொல்லித் தருகிறார்கள்.

இதுபோன்ற பாதுகாப்புக் கூட்டங்களில் டாக்டர் மாதங்கி ராமகிருஷ்ணன் தவறாமல் கலந்து கொள்கிறார். அவர் போட்டுக் காட்டும் தீவிபத்துக்குள்ளான பெண்களின் ஸ்லைடுகள்... அப்பப்பா! கோரம்...! நாமும் அது மாதிரி ஆகாமல் இருக்க வேண்டுமே என்று தெய்வத்தைத்தான் வேண்டிக் கொள்கிறோம்.

(1) சமையலறையில் வேலை செய்யும்போது நைலக்ஸ், நைலான் புடவைகளைக் கட்டவே கூடாது.

(2) முடியவில்லை என்றால், 'ஏப்ரன்' கட்டிக்கொண்டு வேலை செய்யலாம். இதனை 'காஸ்' விநியோகிக்கும் கடைகளில் விற்கலாம்.

(3) வெளியே போகும்போது காஸை மூட மறந்து விட்டோமானால் வந்தவுடன் பற்றவைக்கவே கூடாது.

இவையெல்லாம் அவர் அன்று சொன்ன அறிவுரைகள்.

தீயிடம் அணுகியும் இருக்க வேண்டும்— அதே சமயம் பத்திரமாகவும் இருக்க வேண்டும்!

ஜனனி முரளி

# ஐந்து மாதர் சங்கங்கள் ஒன்று கூடினால்...






தொகுப்பு: டி.ஆர்.ரமேஷ்.எம்.ஏ.பி.எல்



**ஷியாமளா கௌரி** பம்பாய்—29.

எனக்கு வயது 21. நல்ல அழகும், மதிப்பு மிக்க வேலையும் இருக்கிறது. எனக்கு இருக்கும் ஒரே பிரச்னை என் முகத்தில் இருக்கும் பருக்கள்தான். கன்னம் பூராவும் பரவி இருக்கும் இந்தப் பருக்களே என் திருமணத்துக்குத் தடையாக இருக்குமோ என்று பயமாக இருக்கிறது.

மருத்துவர்களைக் கேட்டேன். ஸ்கின்-ஸ்பெஷலிஸ்ட் சொன்னதை யெல்லாம் செய்தேன். விளம்பரத்தில் பார்த்த மருந்துகளை யெல்லாம் போட்டேன். ம்ஹூம். எதற்கும் அந்தப் பருக்கள் மசியவில்லை. கொஞ்சம் குறைவது போல இருக்கும். மீண்டும் வந்து விடும். இதற்கு நிரந்தரமான தீர்வே கிடையாதா?

**அழகுக் கலை நிபுணரின் பதில்:**

பெண்களின் பருவ காலங்களில் ஏற்படும் தொல்லைகளில் இதுவும் ஒன்று. இதைப் போக்க வேண்டுமே என்ற அவசர ஆத்திரத்தில் கண்ட கண்ட மருந்துகளைப் போடுவதால், மேலும் புண்ணாவதுடன், மாறாத வடுக்களும் ஏற்பட்டு விடும். எனவே மிகவும் பலனளிக்கும் மருந்துகளை, அனுபவம் மிக்கவர்களிடம் கேட்டுப் போடுவது நல்லது.

சீனக் களிமண் என்று சொல்லப்படும் வெள்ளைக் களிமண் சாதாரணமாகக் கிடைக்கும். இதைக் கொஞ்சம் வாங்கி வைத்துக் கொள்ளுங்கள். இரவு படுக்கப் போவதற்கு முன், கொஞ்சம் நீரில் கரைத்து முகம் முழுவதும் மென்மையாகப் பூசிக்கொள்ளுங்கள். இது காய்ந்தவுடன் வெள்ளையாகி பார்க்கக் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக்கும். மறுநாள் காலையில் எழுந்தவுடன் வெது வெதுப்பான நீரில் முகத்தைக் கழுவி விடுங்கள். இப்படி ஒரு வாரம் செய்தால் போதும். நல்ல பலன் கிடைக்கும்.

## குழந்தையின் வயிறு வீங்கிக் கிடக்கிறது!

**மரகதம் சீனிவாசன்** சிங்காநல்லூர்

என் பிள்ளைக் குழந்தைக்கு ஒரு வயது நான்கு மாதம் ஆகிறது. நல்ல ஆரோக்கியமாக இருக்கிறான். சாப்பிடுகிறான், விளையாடுகிறான், எல்லாம் செய்கிறான். ஆனால் வயிறு மட்டும் பெரிதாக இருக்கிறது. என் மாமியார், இது வயிற்று உப்பசம்தான், வேறு ஒன்றுமில்லை என்று கூறுகிறார். டாக்டரும் பரிசோதித்து விட்டு கட்டியெல்லாம் ஒன்றும் இல்லை, குழந்தை நன்றாகத்தான் இருக்கிறான் என்கிறார்கள். ஆனால் அவனுடைய வயிறு மட்டும் எப்போதும் முட்ட முட்டச் சாப்பிட்டவன் வயிறு போல் இருக்கிறது. இதற்கு ஏதாவது வழி இருக்கிறதா?

**மருத்துவரின் பதில்:**

கட்டி போன்ற மற்ற எந்த நோயும் இல்லை என்று மருத்துவர்கள் உறுதி கூறுகிறார்களானால், அது பொட்டாசியம் குறைவால்தான் இருக்கும். இதற்கு இளநீர் மிகச் சிறந்த மருந்து. குழந்தைகளுக்கு எல்லா வகையிலும் அருமையான சுவையான மருந்து இளநீர்தான். பேதியாகும் குழந்தைகளுக்கும் இது ஒரு அருமருந்து. எனவே ஒரு வாரம் இளநீர் ஒரு டம்ளர்

கொடுத்துப் பாருங்கள். வயிற்று உப்பசம் போய்விடும்.

## எங்கள் வீட்டு ரோஜா பூக்காதா?

**சியாமளா ரகுநாதன் பட்டுக்கோட்டை**

ஒரு கிரௌண்டும், நடுவில் சிறிய வீடும் சுற்றித் தோட்டமும் இருக்கிறது. ஆனால் நான் ஆசை ஆசையாகப் பயிரிட்ட ரோஜா மட்டும் பூக்கவே மாட்டேன் என்கிறது. எப்போதோ ஒரு முறை சின்னப் பூ பூக்கிறது. இந்தப் பூந்தோட்டத்தைப் பற்றி நான் எவ்வளவோ கனவு கண்டு கொண்டிருந்தேன். என் வீட்டைச் சுற்றி ரோஜாத் தோட்டம்; அதன் நடுவே என் சந்தோஷமான சிறிய குடும்பமென்று. என் கனவு நனவாகுமா?

**தோட்டக் கலை நிபுணரின் பதில்:**

நிச்சயமாக உங்களின் கனவு நனவாகும். பூச்செடிகளுக்கு நைட்ரஜன் எனப்படும் தழைச்சத்து மிகவும் அவசியம். உங்கள் தோட்ட மண்ணில் அது இல்லை.

முதல் நாள் இரவே கடலைப் பிண்ணாக்கை வாங்கி ஊறவைத்து விடுங்கள். மறுநாள் காலையில் பார்த்தால் புளித்து நுரைத்துக் கொண்டு இருக்கும்.

ரோஜாவைச் சுற்றியுள்ள மண்ணைக் கொத்திவிட்டு, அதிலே இந்த ஊறின கடலைப் பிண்ணாக்கைப் போட்டு மண்ணால் மூடிவிடுங்கள். இப்படி மூன்று மாதத்துக்கு ஒரு முறை செய்து வந்தால் போதும். அப்புறம் உங்கள் தோட்டம் எங்கும் ரோஜா தான்!

## நாங்கள் எப்படி வீடு கட்டுவது?

**மணிமாலா சென்னை-90**

என் கணவர் தனியார் நிறுவனம் ஒன்றில் மானேஜராக இருக்கிறார். வேலை வேலையென்று எப்போது பார்த்தாலும் அவருக்கு வேலை சரியாக இருக்கும். நாளுக்கு நாள் ஏறி வரும் விலைவாசியோடு. வீட்டு வாடகையும் எக்கச் சக்கமாக இருக்கிறது. இந்த நிலையில் வீடு கட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை. நாங்கள் கல்யாணமான புதிதில் வாங்கிப் போட்ட நிலம் இருக்கிறது. வீடு கட்டிக் கொள்ள எங்களுக்கு யாரேனும் கடன் தருவார்களா? சிறிது சிறிதாக, நாணயமாகக் கடனை அடைத்து விடுகிறோம்.

**கட்டிடம் கட்டும் காண்டிராக்டர்:**

உங்களைப் போன்றவர்களுக்கு ஆங்காங்கே இதற்கென்றே இயங்கி வரும் கூட்டுறவு சங்கங்கள் மிகவும் உதவும். இங்கு குறைந்த வட்டியில் நீண்ட தவணை முறையில் கடன் தருகிறார்கள்.

முதலில் உங்களுடைய நிலம் மாநகராட்சியில் அனுமதிக்கப்பட்ட கட்டிட பிளான், டாக்குமெண்ட்ஸ், வில்லங்கப் பத்திரம் இவற்றைத் தெளிவாகக் காட்டிவிட வேண்டும். பின்னர் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி அந்தக் கூட்டுறவு சங்கத்தில் மெம்பராகி விட வேண்டும். பின்னர் அவர்கள் உங்களுடைய நிலத்தைப் பார்வையிடுவார்கள்.

எல்லாம் சரியாக இருக்கிறது என்றால் ரூ. 40,000 வரை கடன் தருகிறார்கள். இதை மூன்று தவணைகளாகக் கொடுப்பார்கள். ஏனெனில் அவர்கள் தரும் தொகையை முழுமையாக நீங்கள் கட்டடம் கட்டவே பயன்படுத்த வேண்டும் என்பதற்காகத்தான்



கட்டிட வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையிலும் தருகிறார்கள்.

இதை பின்னர் 15 ஆண்டுகளில் நீங்கள் திருப்பித் தரலாம்.

இதைப் போன்ற வேறு பல நிறுவனங்களும் வீடு கட்ட நிதி உதவி அளிக்கிறது. எக்மோர் மாண்டியத் ரோடில் உள்ள Housing finance development Corporation இவற்றுள் ஒன்று.

## கிழிந்த புடவையை வாங்கிவிட்டேன்!

**பிரேம சுந்தரவதனம் மேற்கு மாம்பலம்**

நான் இந்த ஆண்டு தீபாவளிக்கென்று ஒரு பட்டுப் புடவை ரூ. 800 கொடுத்து ஒரு கடையில் வாங்கினேன். ஆனால் வீட்டுக்குக் கொண்டு வந்த பிறகு பிரித்துப்

பார்த்ததில் புடவையில் உடல் முழுவதும் நூல் இழைகள் விலகி இருந்தது. அதை மறுபடியும் கடைக்காரரிடம் காண்பித்தபோது வேறு புடவை மாற்றவோ, அல்லது பணத்தைத் திருப்பித் தரவோ இயலாது என்று கூறிவிட்டார். என் கணவர் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த அந்தப் பணம் பாழாகிவிட்ட கவலை. நான் மேற்கொண்டு நடவடிக்கை எடுக்க விரும்பாவிட்டாலும் சட்டத்தில் இம்மாதிரியான நிலைகளுக்கு என்ன பரிகாரம் என்ற விவரத்தைத் தயவுகூர்ந்து விளக்க வேண்டுகிறேன்.

**வழக்கறிஞர் பதில்:**

பொருள் மாற்றுச் சட்டம் (Sale of goods) என்ற ஒரு சட்டம் இருக்கிறது. இதன்படி ஒரு பொருளை வாங்குபவர் அப்பொருளை அக்கடையிலிருந்து வெளியே எடுத்துச் செல்லும் முன்னர் சரி பார்த்த பிறகே செல்ல வேண்டும். அதாவது வாங்குபவர்தான் முன் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். Let the Buyer Beware என்பதுதான் சட்டத்தின் மொழி. ஆகவே நீங்கள் வீட்டுக்குச் சென்ற பிறகு புடவையில் உள்ள குற்றங்களைத் தெரிந்து கொண்டு, மீண்டும் கடைக்கு வந்து புகார் செய்வது என்பது சரியாகாது.

கடைக்காரர்களே மனிதாபிமானத்துடன் நடந்து கொள்வார்கள். ஏனென்றால், மீண்டும் அந்த வாடிக்கையாளர் தன் கடைக்கு வரவேண்டுமே என்பதற்காக. அவர் மனம் வைத்தால் உண்டு. இல்லையெனில் ஒன்றும் செய்வதற்கில்லை.

# பழைய சாதத்தின் பக்குவம்!

முதல் நாள் இரவு சாதம் மீதியாகிவிட்டால், சாதாரணமாக எல்லோரும் அந்த சாதத்தில் தண்ணீர் கொட்டி வைத்துவிட்டு மறுநாள் காலையில் அதைத் தயிர் சாதமாகப் பிசைந்து உபயோகப்படுத்துவார்கள். இதை இன்னொரு விதமாகப் பயன்படுத்தலாமே!

**திடீர் புளியஞ்சாதம்!**

தேவையான சாமான்கள்: முதல் நாள் மீந்துபோன சாதம் – 4 கப், புளி – சிறு எலுமிச்சங்காய் அளவு, மஞ்சள் பொடி ஒரு சிட்டிகை, உப்பு தேவையான அளவு, மிளகாய் வற்றல் 8, பெருங்காயம், கறிவேப்பிலை, கடுகு ஒரு டீஸ்பூன், உளுத்தம் பருப்பு ஒரு டீஸ்பூன், கடலைப் பருப்பு ஒரு டீஸ்பூன், எண்ணெய் 2 கரண்டி.

செய்முறை: முதல் நாள் இரவு மீதியான சாதத்தில் புளியைக் கெட்டியாக, கொத்சாகக் கரைத்து விட்டு, உப்பு, மஞ்சள் பொடி போட்டு, பெருங்காயம் கரைத்து விட்டு, நன்றாகக் கலந்து மூடி வைத்து விடவும். மறுநாள் அடுப்பில் வாணலியில் எண்ணெய் வைத்துக் காய்ந்ததும், கடுகு, உளுத்தம் பருப்புப் போட்டுத் தாளிக்க வேண்டும். வேர்க்கடலை இருந்தால் அதையும் ஒரு ஸ்பூன் போடலாம். கறிவேப்பிலை, மிளகாய் வற்றல்களைக் கிள்ளிப் போட்டு, வறுபட்டதும், முதல் நாள் இரவு கலந்து மூடி வைத்துள்ள சாதத்தைப் போட்டு, உப்புமா–உசிலிப்பது போல நன்றாக உசிலித்து எடுக்க வேண்டும். மணக்க, மணக்க, ருசி மிக்க, புளியஞ் சாதம் தயாராகிவிடும். அவசரமாக அலுவலகங்களுக்குக் கிளம்புபவர்கள், காலையில் அவசரமாக விரைவில் செய்து கொள்ளத் தகுந்த உணவு இது.



# அவள் ஒரு முற்றுப்புள்ளி!

விமலா ரமணி

**சா**ந்தி ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தாள்.

''சாயங்காலம் பர்மிஷன் போட்டுட்டு சீக்கிரம் வந்துடு. உன்னைப் பெண் பார்க்க வரா.''

உள்ளே இருந்து அம்மாவின் குரல்.

குரல் வந்த திசையை நோக்கி ஒரு கணம் விரக்தியாகப் பார்த்த சாந்தி 'உம்' என்று முனகிவிட்டுப் படி இறங்கினாள்.

சாந்தி சிரித்துக் கொண்டே நடந்தாள்.

எத்தனை பேர் பெண் பார்த்தாகி விட்டது!

தெரிந்த ஒரே பாடலை எத்தனை முறை பாடியாகி விட்டது..!

இருக்கும் ஒரே ஒரு பட்டுப் புடவையைப் பிரித்துப் பிரித்து எத்தனை முறை கட்டிக் கொண்டாகி விட்டது!

இன்னும் தாலி கட்டிக் கொள்ளும் பாக்கியம் மட்டும் கிடைக்கவில்லை.

எப்படிக் கிட்டும்?

உறவுகள் எட்ட இருக்கும்போது கிட்டத்தில் நிற்பது இவள் துரதிர்ஷ்டம்தான்

துரதிருஷ்டமாவது துரதிருஷ்டம்! சுற்றி இருக்கும் மனிதர்களின் சுயநலம்தான்! ஏதோ ஒருமுறை டி.வி.யில் (ஒளி டி.வி.யில் 'தான்) நாடகம் ஒன்றைப் பார்த்தபோது —

பெண்பார்த்துவிட்டுப் போனவுடன் அப்பன்காரனே தன் மகளைப் பற்றி தாறுமாறுகப் பெண் பார்த்தவர்களுக்கு மொட்டைக் கடுதாசி போடுவதையும், அதனுல் அவள் கல்யாணம் நின்றுபோனதையும் பார்த்தபோது இப்படியும் அப்பாக்கள் இருப்பார்களா என்று நினைத்துப் பார்த்திருக்கிறாள்.

ஏனெனில் அவளுக்கு அப்பாவைப் பற்றித் தெரியாது. அம்மாதான் சகலமும். தொட்டதற்கெல்லாம் 'அம்மா... அம்மா'தான்.

அவள் நிர்வாணமாகத் திரிந்த காலத்திலிருந்தே இன்று சேலை கட்டிக்கொண்டு தெரு உலா வருகிற இந்த நேரம் வரை அம்மாவைப் பற்றிய நினைப்பு, கணிப்பு எல்லாமே உயர்வாகத்தான் இருந்தது.

அவளுக்கு ஐந்து வயதானபோதே அப்பா இறந்து போனுர். கடைக்குட்டி சாந்தி. இவளுக்குப் பெரியவர்கள்இரண்டு பெண்கள். மாலா, புவனு. குடிகார அப்பனிடம்



தான் பட்ட கஷ்டங்களையெல்லாம் அம்மா சொல்லி அழுவாள். ஏதோ சில காட்சிகள் மங்கலாகச் சாந்தியின் மனதுக்குக் கூடத் தெரியும்.

சாந்தியும் கூட அழுதிருக்கிறாள்.

வீட்டு வேலை செய்த சம்பாத்தியத்தில் எப்படியோ பெரிய பெண்ணுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டாள் அம்மா.

அடுத்தவளுக்குப் படிப்பு வரவில்லை. சேர்த்துவைத்து, வகுப்பில் முதலாவதாக சாந்தி படித்துக் கொண்டிருந்தாள். டீச்சர்களின் நல்லெண்ணத்தைச் சம்பாதித்துக் கொண்ட சாந்திக்குப் படிப்பு பெரும் பிரச்னையாக இல்லை.

எப்படியோ புதுப் புத்தகங்கள் வாங்கவும், யூனிஃபார்ம் தைக்கவும் இதர செலவு

❖ ❖ ❖ ❖ – ❖ ❖ ❖

துணிகளுக்கு நீலம் போடும்போது, சிறு துணியில் நீலம் 1 ஸ்பூன் போட்டு ஒரு பிஞ்ச் சமையல் உப்பும் சேர்த்து மூட்டையாகக் கட்டி பக்கெட் தண்ணீரில் போட்டு கரையவிட்டு நீலம் போட்டால் திட்டுத்திட்டாக நீலம் துணிகளில் படியாது!

-திருமதி. பாத்திமுத்து சித்திக்



❖ ❖ ❖ ❖ – ❖ ❖ ❖

களுக்கும் ஒய்ஸ்மென் கிளப் பிரஸிடெண்ட் உதவிவிடுவார். ஆண்டு தோறும் ஏதோ பிராஜக்ட் ஒர்க் வைத்துக் கொண்டு குழந்தைகளின் படிப்புக்கு என்றும், அதுவும் டிஸ்டிங்ஷனுடன் பாஸ் செய்யும் குழந்தைகளுக்குச் சில சலுகைகள் என்றும், ஒய்ஸ்மென் கிளப் போன்ற பெரிய ஸ்தாபனங்கள் உதவி செய்து வந்ததால்தான் சாந்தியின் படிப்பு தொடர்ந்தது, முடிந்தது. ஷார்ட் ஹாண்ட், டைப்ரைட்டிங், செகரடேரியல் கோர்ஸ் என்று எல்லாவற்றையும் பாஸ் செய்துவிட்டு ஒரு கம்பெனியில் ஸ்டெனோவாக வேலை பார்த்துக் கொண்டிருந்தாள் சாந்தி. மாதச் சம்பளம் ரூ. 500.

அதைத் தவிர ஓவர் டைம், போனஸ் சலுகைகள்.

அதையும் தவிர தனிப்பட்ட முறையில் சில கம்பெனிகளுக்குக் கணக்கெழுதித் தந்துகொண்டும் சம்பாதித்துக் கொண்டிருந்தாள்.

வீட்டுக்கு வரும்போதே பள்ளிக்கூடக் குழந்தை மாதிரி வண்டி வண்டியான நோட் புத்தகங்களைச் சுமந்து கொண்டு ஹோம் ஒர்க்குடன்தான் வருவாள்.

சும்மா சொல்லக் கூடாது. அம்மா அவளை சமையல் அறைப் பக்கமே விட மாட்டாள்!

''என் ராஜாத்தி, ஆபீஸிலே ஒழைச்சு ஓடாகப் போறே... இங்கேயும் வந்து வேலை செய்யணுமா?'' என்று பரிதவிப்பாள்.

அவள் உட்கார்ந்த இடம் தேடி காப்பி, டிபன், சூடாகப் பால் எல்லாமே வரும்.

இரவு இரண்டு மணி வரை கண் விழித்து கணக்கு எழுதி, காலை ஆறு மணிக்கு எழுந்து குளித்து, கோயிலுக்குப் போய்விட்டு, பார்ட் டைம் ஜாப் ஒன்றையும் பார்த்துவிட்டு ஒன்பது மணிக்கு ஆபீஸுக்குப் போய் (கையில் டிபன் பொட்டலத்துடன்) ஒரு பைசா வெளியில் செலவழித்து விடாமல் ஜாக்கிரதையாக வீட்டுக்கு நடந்தே வந்து, பொதி மாடு மாதிரி கணக்குப் புத்தகங்களைச் சுமந்து கொண்டு..!

கால் நடைதான்!

பள்ளிக்கூட நாட்களில் பாடப் புத்தகங்களைச் சுமந்தாள். இப்போது ஆபீஸ் கணக்குகளைச் சுமக்கிறாள்.

அத்துடன்—

—வீட்டுப் பொறுப்புக்களையும் சேர்த்துச் சுமக்கிறாள்.

இந்தச் சுமை எப்போது குறையும்?

இவள் சம்பாதித்துச் சேர்த்து வைத்ததில் தான் அடுத்தவளுக்குக் கல்யாணமே ஆயிற்று.

பெரியவளுக்குத்தான் தன் சம்பாத்தியத்தில் சுமாராகச் செய்தோம். இவளுக்காவது நன்றாகச் செய்ய வேண்டும் அம்மா ஆசை ஆசையாகச் செய்தாள்.

தங்கையின் கல்யாணத்துக்கு வந்த மூத்த அக்கா, அவளுக்கு வாங்கி இருக்கிற புடவைகள், இரட்டை வடச் சங்கிலி, நெக்லஸ் — இவைகளைப் பார்த்துப் பொறாமையில் தீய்ந்து போனாள்.

''என்னை மஞ்சள் கயிற்றோடு அனுப்பிச்சுட்டே.. இவளுக்கு மாத்திரம் இத்தனை சீர் வரிசையா?'' அக்காக்காரி அம்மாவிடம் கத்தினாள்.

''தெரியாமப் பேசாதே மாலா, உன் கல்யாணத்தப்போ நான்தான் சம்பாதிச்சேன். வீட்டு வேலையிலே மீந்து வைச்சதை வைச்சு என்ன பண்ணிட முடியும்? இப்பத்தான் நாம தலையெடுக்க ஆரம்பிச்சிருக்கோம். சாந்தியோட புண்ணியத்துலே இந்தக் கல்யாணமாவது நல்லா நடக்கணும்.''

மாலா அழ ஆரம்பித்தாள்.

''எல்லாம் என் தலையெழுத்து. ஒரு பிராமணார்த்தக்காரனுக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாச்சு. உச்சிக்

குடுமியும், ஒன்பது கஜமுமாக நாங்க நிக்கறோம். இப்போ எல்லாம் பெரிய உத்தியோகஸ்தன்....''

''உஸ்...இரைஞ்சு பேசாதே... யார் காதிலாவது விழப் போறது ''

''எனக்குப் பந்தல்லே நிக்க அவமானமா இருக்கு. ஒரு தங்கச் செயின் வாங்கிக் கொடுக்கச் சொல்லு... உன் சின்னப் பொண்ணை.''

''அவ என்னடி பண்ணுவா? அவளே கல்யாணத்துக்கு நிக்கறா. பாவம், தன்னோட அக்காவுக்குக் கல்யாணம் ஆனாத்தான் தனக்கு ஆகும்னு பெரிய மனுஷி மாதிரி எல்லாத்தையும் எடுத்துப் போட்டுண்டு செய்யறா. அவளைப் போய்...''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. எனக்குச் செயின் வேணும்... அவ்வளவுதான் சொல்லி விட்டேன்.''

''இப்பவே சேர்த்த பணம் போறும இன்னும் ஆபீஸ்ல வேறே கடன் வாங்கி இருக்கா.''

''அதான் மாசம் கிட்டத்தட்ட எழுநூறு ரூபாய் சம்பாதிக்கிறான்னு பீத்திண்டியே... எல்லாக் கடனையும் அடைச்சுடுவா. எனக்கு செயின் வேணும்.''

''சரி சரி... இப்போதைக்கு என்னோட இந்த ரெட்டை வடச் செயினைப் போட்டுக்கோ.''

அம்மா செயினைக் கழட்டுவதற்குள் இந்த சம்பாஷணைகளைக் கேட்டுக் கொண்டிருந்த சாந்தி சிரித்தபடி உள்ளே வந்தாள்.

''நீ அந்தச் செயினைக் கழட்ட வேண்டாம்மா. உன்னோட ஆயுஸு உள்ளவரை அந்தச் செயினைப் போட்டுண்டு இரு. மாலாவுக்கு நான் வேறே செயின் வாங்கித் தரேன்''

தங்கையைத் திடீரென்று அங்கு கண்ட மாலா ஒரு கணம் திணறிப் பின் சமாளித்து,

''பார்த்தியா... என்னமோ சொன்னியே சாந்தி எல்லாம் செய்வா... யாருக்குச் செய்யறா... அக்காவுக்குத்தானே? உன்னால செய்ய முடியாது... வாஸ்தவம்... அவளால முடியும்... செய்யறா... நீ ஏன் குறுக்கே நிக்கறே?'' என்றாள்.

''சாந்தி ஒத்தை வடமா இருந்தாலும் நன்னா காத்திரமா இருக்கட்டும். அவல் செயின் தேவலையா? இல்லே கோதுமைச் செயின் தேவலையா? இந்த அழுக்குப் பிடிச்ச மஞ்சள் கயித்தை எடுத்துட்டு அந்தச் செயின்லே திருமங்கல்யத்தைக் கோத்துக்கணும்.''

நல்ல வேளை அழுக்குப் பிடித்த மஞ்சள் கயிறுடன் திருமாங்கல்யத்தையும் கழட்ட வேண்டும் என்று அவள் நினைக்கவில்லை!

அன்றே மாலாவுக்கு இரண்டு பவுனில் ஒரு செயின் சாந்தி வாங்கித் தந்தாள்.

''நீ உனக்கு ஒண்ணுமே எடுத்துக்கலையே சாந்தி.... ஏதோ நைலக்ஸ் புடவைதானே கல்யாணத்துக்குக்கூட எடுத்துண்டே. ஆபீஸ் போறதுக்கு இது போதும்னு சொல்லிட்டே. ரொம்ப நாளா மோதிரம் போட்டுக்கணும்னு ஆசைப்பட்டியே... ஒரு மோதிரம் வாங்கிக்கோயேன்.....''

அம்மா வற்புறுத்த ஒரு அரைப் பவுன் மோதிரம் ஒன்றை வாங்கிக் கொண்டாள் சாந்தி.

ஜானவாசத்தின்போது தன் கழுத்துச் செயினை அனைவருக்கும் காட்டி சாந்தியைப் பற்றிப் பெருமையுடன் பேசினாள் மாலா.

ஊருக்குக் கிளம்பு முன் சாந்தியிடம் வந்தாள் மாலா.

''சாந்தி... இதுவரை எனக்கும் இவருக்கும் எந்தச் சீரும் அம்மா பண்ணல்லே. இனிமே நீ தலையெடுத்திருக்கே, எங்களை மறந்துடாதே. தீபாவளிக்குப் புது மாப்பிள்ளைக்கு மோதிரம் வாங்கும்போது இவருக்கும் ஏதாவது வாங்கி வைச்சுடு என்ன?''

சாந்தி தலையாட்டினாள்.

கல்யாணமான புதுப் பெண், சாந்தியைத் தங்கை என்பதால் நமஸ்காரம்தான் பண்ணவில்லை. பாக்கி அத்தனை அன்பு, மரியாதை! 'எங்க சாந்தி... எங்க சாந்தி' என்கிற பெருமை.

இந்தப் பெருமை சாந்திக்கல்ல. அவள் உத்தியோகத்துக்கு. அவள் சம்பாதித்து வரும் காசுக்கு.... தரும் பரிசுகளுக்கு... அதன் பிறகு?

புவனாவுக்குச் சாந்தி முகூர்த்தம்.

கல்யாணமாகாத சாந்தி, அக்காவின் சாந்தி முகூர்த்தத்துக்குக் கட்டில், மெத்தையும் வாங்கிப் போட்டாள்.

மாப்பிள்ளைப் பிள்ளையாண்டானுக்கு பிரமோஷன் ஆகப் போகிறதாம். அதனால் அவன் அந்தஸ்து உயர்ந்து விட்டதாம்.



சாம்பார், கூட்டு போன்றவைக்கு கடலை பருப்புக்கு பதிலாக கொத்து கடலையை வறுத்து அரைத்து விட்டால் சாம்பார் மிகவும் சுவையாக இருக்கும்.

ஜெயலக்ஷ்மி

தரையில் படுத்தால் குழந்தை பிறக்காதா என்ன?

மாப்பிள்ளை கட்டில் கேட்டார்.

சாந்தி வாங்கிப் போட்டாள்.

அடுத்து தலை தீபாவளிக்கு வருகிறேன் என்று லெட்டர்.

மாடாக உழைக்க ஒருத்தி அகப்பட்டால் மற்றவர்கள் எப்படி விரட்டுகிறார்கள்!

''என்னமோடிம்மா... புவனாவுக்குச்செய்ய வேண்டியதைச் செஞ்சுட்டா அப்புறம் பொறுப்பில்லை. உன் கல்யாணம்தான்... நல்லபடியா முடிஞ்சுடும்!''

அம்மா ஏன்னவோ தான் கஷ்டப்பட்டுக் கல்யாணம் பண்ணின மாதிரி பேசினாள்.

தீபாவளி வருவதற்குள்?

கடிதம் வந்தது.

பெரியக்காவிடமிருந்து...

அவள் மாமனார் இறந்து போனாராம். வீட்டுக்கு மூத்த பிள்ளை இவள் கணவன் தானாம். காரியங்கள் செய்ய வேண்டுமாம். சம்பந்தி அம்மாளாக வட்சணமாக மாப்பிள்ளைக்கு மோதிரம் பண்ணித் தர வேண்டுமாம். சம்பிரதாயங்களை விட்டுவிடக்கூடாதாம். ஒரு முழுத்துக்குக் கடிதம் மாலாவிடமிருந்து!

தன் கையிலிருந்த பவழ மோதிரத்தைப் பார்த்தாள் சாந்தி.

ஆசைப்பட்டு வாங்கிக் கொண்டதுதான்.

இப்போது அவசரத்துக்கு ஆகட்டும்.

கடிதத்தைப்படித்து விட்டுத் தன் பெண்ணைக் கவலையுடன்பார்த்தாள்அம்மா.

மோதிரத்தைக் கழட்டித் தந்தாள் சாந்தி.

முதல் நாள் வாங்கிய சம்பளம் ஹாண்ட் பாக்கில் இருந்தது. அதையும் தந்தாள். சம்பிரதாயங்களை விடாமல் சீர் செய்ய, அம்மாவையூருக்கு அனுப்பி வைத்து விட்டுதான் தனிமையில் அழுதாள்.

அதன் பின்—

தலை தீபாவளி... தலை கார்த்திகை...

சம்பிரதாயம், சீர், செனத்தி என்கிற பெயரில் வழிப்பறி... கொள்ளை!

எல்லாம் ஒரு வழியாக ஓய்ந்த மாதிரி இருந்த போதுதான் தன் திருமணத்தைப் பற்றி நினைத்துப் பார்த்தாள் சாந்தி.

இளமை வற்றுவதற்குள் இல்லறம் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டாமோ?

சம்பிரதாயங்களை மீறக் கூடாது என்பதற்காகத் தான், சம்பிரதாயங்களுக்காக வாழ்கிறவள் சம்பிரதாயத் திருமணம் செய்து கொள்ள வேண்டாமோ?

தன் கல்யாணத்தைப் பற்றி தானே எப்படிப் பேசுவது?

அம்மா ஆரம்பிப்பாள் என்று பார்த்தாள்.

ஊஹூம்... அம்மா ஆரம்பிக்கவே இல்லை ஏன்?

இவள் சும்மா இருந்தாலும் தெரிந்தவர்கள் சும்மா—இருக்கவில்லை.

அம்மாவைத் தேடி வந்து ஜாதகம் வாங்கிச் சென்றார்கள்.

முதல் ஜாதகம் வந்த போது மனம் நிலை கொள்ளாமல் சந்தோஷப்பட்டது.

இவளையும் ஒருவன் பெண் பார்த்து, இவளுக்கும் ஒரு கல்யாணம் நடந்து... மற்றவர்களுக்கு இவள் பண்ணிப்



பார்த்த நிகழ்ச்சி நிஜமாகவே இவளுக்கும் நடக்கப் போகிறதா?

''இப்பத்தான் புவனுவோட கல்யாணக் கடனேயே அடைச்சுண்டு வரே... மறுபடியும் உன்னால உன் கல்யாணச் செலவை ஏத்துக்க முடியுமா?''

அம்மா மெதுவாகக் கேட்டாள் ஒரு நாள்.

தான் உத்தியோகம் பார்த்து, தனக்குக் கல்யாணத்துக்குச் சேமித்து, தனக்காக எல்லாம் பண்ணிக் கொண்டு . . . சே... என்ன வாழ்க்கை . . . ஆனால் வேற வழி?

''பரவாயில்லேம்மா... ஆபிஸிலே லோன் கொடுப்பா. தெரிஞ்சவா கிட்டே கொஞ்சம் வாங்கிக்கலாம். சமாளிச்சுடலாம்.''

''எனக்குக் கல்யாணம் பண்ணி வை'' என்பதை வேடிக்கையாகக் கேட்டு மறைமுகமாக சொல்ல வேண்டிய கட்டாயம்.

அதன் பிறகுதான் அந்த முதல் வரன் பெண் பார்க்க வந்தான், தன் பரிவாரங்களுடன்.



கேசரி, பஜ்ஜி, இட்லி, வடை என்று எக்கச் சக்கச் செலவு!

பையன் அப்பர் டிவிஷனல் கிளார்க். கல்யாணத்துக்கு இரண்டு தங்கைகள் காத்திருந்தனர்.

வரதட்சிணை ஐயாயிரமும், ஐந்து பவுன் செயினும் கேட்டார்கள்.

அம்மா மகளைப் பார்த்தாள்.

''மொத்தம் பத்தாயிரம் தந்துடறோம். அவாளையே கல்யாணம் கில்யாணம் எல்லாம் பண்ணித் தொலைக்கச் சொல்லு'' என்றாள் சாந்தி எரிச்சலுடன்.

எப்படியாவது பத்தாயிரம் புரட்டலாம் என்கிற நம்பிக்கை.

அம்மா சொன்னாள். அதற்கு அந்தப் பையனின் அம்மாள் கேட்டாள்—

''அதெப்படி? எங்க மனுஷா நிறையப் பேர் வருவா. கல்யாணத்துக்கே பத்தாயிரம் செலவழிக்கணும். சாப்பாட்டுச் செலவு நிறைய ஆகும். என்னோட பிள்ளையைச் சேர்ந்த ஆபீஸ் ப்ரண்ட்ஸே நிறையப் பேர் வருவா. அப்புறமா அஞ்சு பவுன் செயின் என்னறது?''

இவளுடைய பையனுடைய ப்ரண்ட்ஸ் எல்லாம் என்ன பக்கி பன்னுடைகளா? அவனுடைய கல்யாணத்துக்கு வந்து கொட்டிக்கறதுக்குத்தான் காத்துண்டு இருக்காளா? மாப்பிள்ளையோட ப்ரண்ட்ஸுக்கு எல்லாம் ஹோட்டல்லே ரூம் எடுத்துத் தரணுமாம். வேற வேலே இல்லே!

அம்மா மறுத்து விட்டாள்.

''இன்னிக்கே இத்தனை பேச்சுப் பேசறவா நாளைக்கு என்ன பேசுவாளோ? தவிர இவளோட சம்பாத்தியத்திலே ரண்டு பெண்கள் கல்யாணத்துக்குக் காத்திண்டு இருக்கா. அந்த அஞ்சு பவுன்கூட அவாளுக்குத்தான் போய்ச் சேரும். எனக்குப் பிடிக்கல்லே.''



குடி தண்ணீர் ரொம்பவும் கலங்கி இருந்தால் 4 (அ) 8 துவரம் பருப்பை நன்றாக அரைத்து தண்ணீருடன் கலந்தால் தண்ணீர் தெளிவாகி விடும். (1 குடம் நீருக்கு 4 (அ) 8 துவரம் பருப்பு போதும். துவரம்பருப்புவிழுது கலப்பதால் தண்ணீரின் சுவை மாறுவது இல்லை.) -ஜெயா

அம்மா சொல்வதிலும் நியாயம் இருப்பதாகத்தான் தெரிந்தது.

அதன் பின் அடுத்து வந்த வரன்?

அதுவும் இப்படித்தான் ஏதோ பேச்சு வார்த்தையில் முறிந்து போனது.

எல்லோருக்கும் சாந்தியைப் பிடித்திருந்தது.

அவள் உத்தியோகம் செய்வது பிடித்திருந்தது.

ஆனால் வரதட்சிணை வாங்காமல் கல்யாணம் செய்து கொள்வதுதான் பிடிக்கவில்லை.

இதற்கிடையில்—

புவனாவுக்குக் கல்யாணமாகி, அவன் புள்ளை உண்டாகி, மசக்கை சீராடப் பிறந்தகம் வந்து, வளைகாப்பு, சீமந்தம் என்று வந்து... ஒவ்வொன்றுக்கும் சீர், செனத்தி... என்று சம்பிரதாயங்களை விட்டுக் கொடுக்காமல் அம்மா சொன்னபடி சாந்தி உழைத்துக் கொட்டி எல்லாச் சீர்களையும் செய்து விட்டாள்.

கூடக் கூடவே மாலாவின் தொந்தரவு.

அவள் மட்டும் என்ன உசத்தி? நானும் உசத்திதான் என்று போட்டி போட ஆரம்பித்தாள்.

பாதி நாட்கள் தன் வீட்டிலே சாப்பிடாமல் அம்மா வீட்டிலேயே சாப்பிட ஆரம்பித்தாள்.

குழந்தைகளை இங்கேயே அனுப்பிவிட்டாள்.

டிபன் காப்பி என்று செலவு ஏறிக் கொண்டே போனது.

போதாக் குறைக்குப் புவனாவின் பிரசவம் வேறு.

புவனாவுக்குத் துணை இருக்கிறேன் என்ற பெயரில் மாலா குடும்பத்தைச் சுரண்ட ஆரம்பித்தாள்.

பிள்ளத்தாச்சிப் பெண்ணுடன் மாலா அவள் குழந்தைக்கும் சேர்த்து பால் ஹார்லிக்ஸ் என்று இரட்டிப்புச் செலவு

அம்மா சாந்தியின் கல்யாணத்தை மறந்த மாதிரிதான் தோன்றினாள்.

இதற்கிடையில் வந்த இரண்டொரு ஜாதகங்களையும் சேரவில்லை என்று ஜோஸ்யர் சொன்னதாக அம்மா கூறிவிட்டாள்.

அம்மாவுக்கு என்றுமே சாஸ்திர சம்பிரதாயங்களை மீறத் தெரியாது. ஜாதகம் சேராவிட்டால் அவள் பெண் தரச் சம்மதிக்க மாட்டாள் என்றுதான் சாந்தியும் ஆரம்பத்தில் நினைத்திருந்தாள். ஆனால்?

போன மாசத்தில் ஒரு நாள் இவர்கள் வீட்டு குடும்ப ஜோஸ்யரை தற்செயலாகச் சந்தித்தபோது—

''என்னம்மா சாந்தி? உங்கம்மா உனக்கொரு ஜாதகம் கொண்டு வந்தாளே... அது செட்டில் ஆச்சா? பஸ்ட் க்ளாஸ் ஜாதகம். பத்துப் பொருத்தமும் திவ்யமா இருக்கு. அம்மா கிட்ட சொன்னேனே... பெண் பார்க்க வந்துட்டாளா?'' என்று அவர் சொன்ன

போதுதான் முதன் முதலாகத் தன் தாயின் மீதே சாந்திக்குச் சந்தேகம் வந்தது.

தனக்கு இப்போது கல்யாணம் ஆவதை அம்மா—விரும்பவில்லையோ?

இவளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டால் இந்தச் சம்பாத்தியம் குறைந்து போய் விடுமே என்று பயப்படுகிறாளோ? இன்னும் செய்ய வேண்டிய பாக்கி சீர்களையும், குழந்தை பிறந்த நாள், காது குத்து, அப்புறமாக படிக்க வைத்தல், பூணூல் போடுதல்... இப்படி எல்லாச் சீர்களையும் சம்பிரதாயமாகப் பண்ணி முடித்துவிட்டு, அப்புறமாக இவள் கல்யாணத்தைப் பற்றிச் சிந்திக்கலாம் என்று நினைத்து விட்டாளோ?

சாந்திக்குக் கோபம் வந்து விட்டது. அம்மாவிடம் விவரம் கேட்டபோது....?

ஒரு கணம் ஆடிப்போன அம்மா பின் சமாளித்து—

''அதுவா? ஜோஸ்யர் அப்படியா சொன்னார்? அவர் சொன்னதை நான்தான் புரிஞ்சுக்கலியா? சரி... சரி... அந்தத் திருச்சிப் பையனைப் பத்தி மறுபடியும் நான் விசாரிச்சுட்டு லெட்டர் போடறேன்'' என்று மழுப்பியபோது—

சாந்திக்கு எல்லார் மீதும் கோபம் கோபமாக வந்தது.

மூளியாகிப் போன தன் விரல்,
காலியாகிப் போன பாங்க் பாலன்ஸ்!
நிராசையாகிப் போன மனம்?

இன்று அந்தத் திருச்சிப் பையன்தான் பெண் பார்க்க வரப் போகிறான்...

அம்மா கர்ம சிரத்தையாக நினைவுபடுத்துகிறாள்.

இவர்களை எப்படித் தட்டிக் கழிக்கப் போகிறாள், பார்க்கலாம்....

தன் சிந்தனைகளின் வேகத்தில் ஆபீஸ் வந்ததே தெரியவில்லை.

''குட்மார்னிங்''—

சிரித்தபடி இவளுடன் வேலை செய்யும் மணி இவளை வரவேற்றான்.

''குட்மார்னிங்'' என்றவள் தன் 'ஸீட்'டில் உட்கார்ந்தாள்.

## 2

சம்பிரதாயச் சடங்குகள் முடிந்துவிட்டன.

நிஜமாகவே பையன் அழகாக இருந்தான். எம். எஸ்.ஸி. பாஸ் செய்திருந்தான். ஒரு பாக்டரியில் நல்ல பதவியில் இருந்தான்.

பையன் பெயர் கைலாஷ்.

அழகான பெயர், அளவான குடும்பம்.

அவன் அம்மா கூட நல்லமாதிரியாகத்தான் தெரிந்தாள்.

அதிகமான பேச்சு வார்த்தை ஏதுமில்லை.

''எனக்குப் பெண்ணைப் பிடிச்சுடுத்து. என் பையனுக்கும் அப்படித்தான். நாங்க அதிகமா எதிர்பார்க்கல்லே. உங்களால முடிஞ்சதைச் செய்யுங்கோ. ஆறு ரெட்டைவடச் செயின் மட்டும் ஒண்ணே ஒண்ணு போட்டுடுங்கோ. ஏன்னா, என்னோட மூத்த நாட்டுப் பொண்ணுக்குப் போட்டிருக்கா. அதே மாதிரி ஒண்ணு இருக்கணும்னு சொல்றேன்.''

அந்த அம்மாள் நிதானமாகவே சொன்னாள்.

''நான் உங்களுக்கு என் பொண்ணை விட்டு விபரமா லெட்டர் போடச் சொல்றேன்'' என்றாள் அம்மா.

அவர்கள் கிளம்பி விட்டார்கள்.

போகு முன் கைலாஷ் சாந்தியிடம் வந்து 'நான் வரேன்' என்று விடை பெற்றுக் கொண்டான்.

சாந்திக்கு 'குபுக்'கென்று வியர்த்தது.

அம்மா இரண்டு நாட்களாகப் பேசவில்லை.




அதிக வரட்சியின் காரணமாக தாகம் ஏற்படும் போது ஒரு ஸ்பூன் தேன் பருகினால் தணியாத தாகமும் அடங்கும்.
-லக்ஷ்மி

சாந்தியும் பேசவில்லை. ஏதோ ஒரு முடிவுக்கு அம்மா வந்துதானே ஆகவேண்டும்?

என்ன முடிவு?

''என்ன சாந்தி... அவாளுக்கு லெட்டர் எழுதலியா?'' என்றாள் அம்மா.

''நீ சொன்ன அந்த மாதிரி எழுத வேண்டியதுதான்.... எனக்கு இந்த சம்பிரதாயங்களெல்லாம் தெரியாது....''

''ஒண்ணுமில்லே... உள்ளூரா இருந்தாப் பரவாயில்லே... திருச்சியா இருக்கேன்னு பாக்கறேன். பாக்கி ரெண்டு பேரையும் பக்கத்திலேயே தந்திருக்கேனே... அதான் ஒரு கவலே.''

''அதுல என்ன? கோயமுத்தூர்லேருந்து திருச்சி 125 மைல்தானே? ஸ்டேட் பஸ்ஸிலே ஏறி உட்கார்ந்தா அஞ்சரை மணி நேரத்திலே கொண்டு போய் விட்டுடுவான். ஒவ்வொருத்தர் டெல்லி, கல்கத்தான்னு பொண்ணைக்கொடுக்கிறா... நீயென்னடான்னா''

அம்மா கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தாள்.

''ஆமாம்... கல்யாணத்தை என்னமோ பண்ணேரும்... ஆறு ரெட்டை வடச் சங்கிலி கேக்கறுளே... இப்போ இருக்கிற பவுன் விலையிலே எப்படிப் பண்றது? அஞ்சு பவுனுக்குக் குறைஞ்ச ரெட்டை வடச் சங்கிலி போட்டா நன்ரு இருக்காது...''

சாந்தி பேசவில்லை.

அம்மா கழுத்தில் மின்னும் ரெட்டை வடச் செயினை முதன் முறையாக உற்றுப் பார்த்தாள் சாந்தி.

தனக்குக் கிடைத்த போனஸ் பணத்துடன் கொஞ்சம் சேர்த்து வாங்கிப் போட்டவளே சாந்திதான்.

## வெங்காய மகிமை

வயிறு முட்ட சாப்பிட்டுவிட்டு அஜீரணக் கோளாறினல் அவஸ்தைப் படுகிறீர்களா? கவலை வேண்டாம்! பச்சை வெங்காயத் துண்டத்தைச் சாப்பிடுங்கள். ஜீரணமாகிவிடும்.

—அம்புஜா பாலகிருஷ்ணன்

தன் பெண்ணுக்காக ஒவ்வொருத்தர் என்னென்னமோ தியாகம் பண்ணுகிறுர்கள்; தான் ஒரு கவரிங் செயினை வாங்கிப் போட்டுக்கொண்டு இந்த இரட்டை வடத்தைக் கழட்டிப் பொண்ணுக்குப் போடக் கூடாதோ இந்த அம்மா?

மனம்தான் கேட்டது. வாய் கேட்கவில்லை.

ஏனெனில் 'உன் காலம் வரை அது உன் கழுத்தில் இருக்கட்டும்' என்று சொன்ன வாயே இந்த வாய்தானே!

அம்மாவின் மனநிலை இவளுக்குப் புரிந்தது.

இப்போதைக்கு சாந்தி தங்க முட்டை போடும் வாத்து.

இதை வீட்டை விட்டு அனுப்ப அம்மா விரும்பவில்லை.

அம்மாவின் மனம் புரிந்த பின்பு இதை டெஸ்ட் செய்து கொண்டிருப்பதில் அர்த்தமில்லை.

''நான் சம்பிரதாயங்களை மீற மாட்டேன், சட்டங்களை மீற மாட்டேன்'' என்று சொல்கிற அதே தாய், சுயநலம் என்று வரும்போது சம்பிரதாயங்களை எப்படி மீறுகிறுள்?

இருபத்து ஐந்து வயதாகியும் தன் பெண்ணுக்குக் கல்யாணம் செய்து தரவேண்டும் என்கிற பிரக்ஞை எப்படித் தோன்ருமல் போயிற்று?

அது மட்டும் சட்டம் மீறல் இல்லையா? சம்பிரதாய மீறல் இல்லையோ?

''என்னடி பேசாமல் இருக்கே? இப்போ உன்னுல பவுன் நகைன்னு ஏழாயிரம் ஒதுக்க முடியுமா? ஆச்சு... புவனவைப் புக்ககத்தில் கொண்டு விடறதானு செலவு ஆகும். குழந்தைக்கு ஒரு பவுன்லே செயின் வாங்கணும்... வெள்ளி அரைநாண் வாங்கணும்... சீர் செய்யணும்... ஏதோ பொன் வைக்கிற இடத்திலே பூவாவது வைக்கணும்.'' —அம்மா சொன்னுள்.

ஒரு பொண்ணுக்கு பொன் வைப்பதற்காக மற்றொரு பொண்ணைப் பூவாகக் கசக்குகிறுள் இந்த அம்மா.

சாந்தியின் கல்யாணமா இப்போ முக்கியம்?

புவனவின் குழந்தைக்கு செயின் வாங்க வேண்டும்.

சாந்தியின் திருமண நாளுக்கா இப்போது அவசரம்?

புவனவைச் சீர் செனத்திகளுடன், சம்பிரதாயச் சடங்குகள் குறையாமல், புக்ககத்துக்குக் கொண்டு விடும் நாளுக்குத்தான் நல்ல நாள் பார்க்க வேண்டும்!

சாந்தி உள்ளே போய் படுத்துக்கொண்டு விட்டாள்.

## 3

''மிஸ் சாந்தி...உங்களுக்குப்போன்...''

மணி கண்களை சிமிட்டியபடி ரிஸீவரை சாந்தியிடம் தந்தான்.

சாந்தி வியப்புடன் ரிஸீவரை எடுத்தாள். போஞ? எனக்கா? யாரா இருக்கும்?

''நான் நினைக்கிறேன்... அன்னிக்கு உங்களை யாரோ பொண் பார்க்க வரப்போறதாச் சொன்னீங்க இல்லே... அவராத்தான் இருக்கும்னு நினைக்கிறேன். கைலாஷ்னு சொன்னர்... அவர் தானே?''

சாந்தி படபடக்கும் இதயத்துடன் போனை எடுத்தாள்.

''ஹலோ... சாந்தி ஸ்பீக்கிங்.''

''ஹாய்... நான் கைலாஷ்... தெரியறதா? கைலாஷ்னவுடனே எங்காவது சொர்க்கம்

ஒர்க்கம்னு நினைக்கடாதே... நான்தான்...''

''தெரியறது... சொல்லுங்கோ...''

''லெட்டர் போடறதாச் சொன்னளே உங்கம்மா... ஏன் லெட்டரே போடலே? பிஸியா?''

''வந்து....வந்து....''

''என்ன... என்ன ப்ராப்ளம்? லுக் சாந்தி. ஐ லைக் யூ... ஐ லவ் யூ... அதனுல எதுவா இருந்தாலும் நீ என்கிட்டத் தாராளமாகச் சொல்லலாம்.... என்ன?''

''ஒண்ணுமில்லே... அந்த ரெட்டை வடச் செயினைப் பத்தித்தான் அம்மா கவலைப் படறுள்.''

''வாட் சில்லி... எப்படியாவது சமாளிச்சு கல்யாணத்துக்கு அந்த ரெட்டை வடச் செயினை மட்டும் போட்டுடச் சொல்லு. பாக்கி நான் பார்த்துக்கறேன்...''

''அதில்லே....வந்து... இப்போ பவுன் விக்கிற விலையிலே....''

''ரெட்டை வடச் செயின் ஒண்ணுதானே? இதைக்கூடப் போட மாட்டாளா உங் காத்துலே?''

சாந்தி ஒரு நிமிடத் தயக்கத்துக்குப் பின் பேசினுள்.

''ஆரம்பத்திலே சொன்னேளே... ஐ லைக் யூன்னு... நிஜமாவே நீங்க என்னை விரும்பினு இந்த ரெட்டை வடச் செயின் இல்லாம என்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டேளா?''

''அது....அது அம்மாவோட ஆசை.''

''அப்போ கொஞ்ச நாளாகும்.''

''காத்துண்டு இருக்கேன்.''

''வேண்டாம். வேறே கல்யாணமே பண்ணிக்கோங்கோ....''

''சாந்தி....''

'டக்'கென்று போனை வைத்துவிட்டாள் சாந்தி.

மணி அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

லஞ்ச் டயமாக இருந்ததால் எல்லோரும் சாப்பிடப் போயிருந்தனர்.

''இப் யூ டோன்ட் மைன்ட், விபரம் என்னன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

சாந்திக்கு அழுகை வந்தது.

''வேண்டாம்னு நான் வற்புறுத்தலே.''

இல்லே...சொல்ல வேண்டும்.... யாரிடமாவது சொல்லித் தொலைக்க வேண்டும்.

ஓரளவுக்கு மணிக்கு இவளைப் பற்றிய சில தகவல்கள் தெரியும்.

குடும்பத்துக்கு உழைக்கும் இவள் மனதைத் தெரியும்.

பெண் பார்க்க வந்த கைலாஷைப் பற்றித் தெரியும்.

அரை குறையாகத் தெரிந்து கொள்வானேன்... அத்தனையும்தான் தெரிந்துகொள்ளட்டுமே!

சொன்னுள்.

மணி பேசாமல் அமர்ந்திருந்தான்.

''இந்தச் சமூகத்தோட பழக்க வழக்கமே எனக்குப் புரியவில்லே. உங்க ஜாதியிலே வரதட்சிணை தந்தாத்தான் பொண்ணுக்குக் கல்யாணம் ஆகும். எங்க ஜாதியிலே நாங்க பரிசம் போட்டுத்தான் பொண்ணைக் கட்டிக்கணும். உங்களாலே வரதட்சிணை தர முடியவில்லே. உங்களுக்குக் கல்யாணம் ஆகலே. என்னுலேயும் பரிசம் போட முடியவில்லே. எனக்கும் கல்யாணம் ஆகவில்லே.... நல்ல சாதி, நல்ல சம்பிரதாயம்!''

கோபமாகப் பேசிய மணி போய்விட்டான்.

மணி போன திசையையே பார்த்தாள் சாந்தி.

'உங்களாலே வரதட்சிணை தர முடியவில்லே. உங்களுக்குக் கல்யாணம் ஆகலே. என்னுலேயும் பரிசம் போட முடியவில்லே



பிரசவித்த பெண் கர்ப்பவலியால் கஷ்டப்பட்டால் அடிவயிற்றில் தேனைத்தடவுங்கள். கர்ப்ப வலி நீங்கிவிடும்.

-எஸ். வனஜா

எனக்கும் கல்யாணம் ஆகல்லே... நல்ல சாதி... நல்ல சம்பிரதாயம்!''

''உங்களுக்கும் கல்யாணம் ஆகல்லே... எனக்கும் கல்யாணம் ஆகல்லே...''

வார்த்தைகள் எதிரொலித்தன.

## 4

''அடேடே... வாங்க வாங்க... கரெக்டா சொன்ன டயத்துக்கு வந்துட்டீங்களே? வீடு அடையாளம் தெரிஞ்சுதா?''

சிரித்தபடி மணியை வரவேற்றுள் சாந்தி.

''இதென்ன பிரமாதம்...? உங்க பேர் சொன்னவுடனே அத்தனை பேரும் சொல்லி வச்சாப்பலே வழி காட்டறுங்களே... அத்தனை பேமஸ்.''

சாந்தி சிரித்தாள்.



## யோசனை

காலில் பித்த வெடிப்பு ஏற்பட்டு நடக்க முடியவில்லையா..?
ஐந்து நாட்களுக்குத் தொடர்ந்து வேப்ப எண்ணெய் தடவுங்கள்: ஆறுமாதம் வரை இந்தத்தொல்லையே வராது. இது என் அனுபவத்தில் கண்டது.

எஸ். எஸ். மணியம்

---

''அத்தனை பேர் கிட்டே கடனும் வாங்கி இருக்கலாம் இல்லையா?''

மணி,கூடச் சிரித்தான்.

''அம்மா... டிபன் கொண்டா... மணி வந்துட்டார்...''

சாந்தி இரைந்து குரல் கொடுத்தாள்.

'யாரோ ஆபீஸ்லே கூட ஒர்க் பண்ற வர்னு சொன்னா. ரவா கேசரி, பஜ்ஜின்னு பொண் பார்க்க வர்ர மாதிரி ஏக அமர்க்களம் பண்ணினாளே... இந்தப் பையனுக்கா?'

தனக்குள் முணு முணுத்தபடி அம்மா தட்டிலே ஆபனுடன் சமையல் அறையிலிருந்து வெளியே வந்தாள்.

''இதுதான் என்னோட தாயார்... என் குடும்பத்துக்கே ஒரு ஆதாரம். அந்தக் காலத்து மனுஷி. வெரி ஆர்த்தடாக்ஸ்... சம்பிரதாயங்களை மீறத் தெரியாத பழைமையிலேயே இளைக்கப் போனவங்க...''

சாந்தி தன்னைப் பாராட்டுகிறாளா, பரிகாசம் பண்ணுகிறாளா?

அம்மா குழம்பினாள்.

மணி வணக்கம் சொன்னான். அம்மாவும் பதிலுக்கு ஒரு கும்பிடு போட்டாள்.

''சாப்பிடுங்க மணி... எங்கம்மா பண்ணினது. ரொம்ப நல்லா சமைப்பாங்க... எங்க வீட்டிலே சாப்பிடக் கொடுத்துவைக்கணும்.''

மணி சாப்பிட்டான்.

சற்று நேரம் ஏதோ பேச்சுக்கள். ஆபீஸ் விஷயங்கள், கணக்கு வழக்கு, பாலன்ஸ்ஷீட் பேச்சுக்கள்...

மணி கிளம்பினான்.

'சட்'டென்று சாந்தி—

''அம்மா... இவர் நாளைக்கு ஒரு பரீக்ஷை எழுதப் போறார். உங்கிட்டே ஆசீர்வாதம் வாங்கிக்கணுமாம். உன்னை நமஸ்காரம் பண்ணணுமாம்.... வந்து நில்லேன்...'' என்றபோது மணி குழம்பிப்போனான்.

பரீக்ஷையா? நானா? என்ன பரீக்ஷை? ஏன் இப்படி என்னைக் குழப்புகிறாள் சாந்தி? ஏதோ வீட்டுக்கு வாருங்கள் என்றாள், வந்தேன். டிபன் சாப்பிடச் சொன்னாள், சாப்பிட்டேன். தப்பில்லை... பெரியவர்களை நமஸ்காரம் பண்ணலாம், ஆனால் என்ன பரீக்ஷை?

இதே கேள்வியைத்தான் அம்மாவும் கேட்டாள்.

''என்ன பரீக்ஷை?''

''ஏதோ டிபார்ட்மெண்டல் எக்ஸாம்.''

சாந்தி கூறினாள். தப்பித்தேன் என்று அந்த அம்மாவின் காலில் சரணாகதி அடைந்தான் மணி.

அவள் வாழ்த்தினாள்.

''மகாராஜனா நன்னா இரு.''

மணி போய்விட்டான்.

''ஆமாம்... கூட ஒர்க் பண்றார்னு சொன்னே... உனக்குப் பரீட்சை இடையாதா?''

மணி போன பிறகு அம்மா சாந்தியிடம் கேட்டாள்.

''நானும்தான் கூட எழுதணும். பரீட்சைக்குப் பணம் கட்டிட்டேன். இன்னும் பரீட்சையிலே கலந்துக்கறதா வேண்டாமான்னு ஒரு குழப்பம். முடிவு பண்ணல்லே''

''என்னமா இது... ஒரு தீர்மானம் பண்ணியாச்சுன்னா முடிவை மாத்தாதே.''

''நீ சொன்னா சரிதான். டிபார்ட்மெண்டுக்குள்ளே ஆயிரம் சண்டை! இந்தச் சண்டையிலே சில சட்டம், சம்பிரதாயங்களை மீறணும்... அதான் பார்க்கறேன்.''

'அவசியம்னு வந்துட்டா சட்டமாவது, சம்பிரதாயமாவது?'

அன்று இரவு முழுவதும் சாந்தியின் கனவில் அம்மாவின் முகம் வந்து வசனம் பேசியது—

அவசியம்னு வந்தா சட்டமாவது, சம்பிரதாயமாவது?

மறு நாள்—

ஆபீஸை அடைந்தபோது மணி அவளை அழமாட்டாத குறையாக வரவேற்றான்.

''என்னங்க இது, இப்படிப் பண்ணிட்டீங்களே? நேத்திக்கு என்னைத் திணற அடிச்சுட்டீங்களே! அதென்ன டிபார்ட்மெண்டல் எக்ஸாம்? அம்மாவை ஒழுங்கா நமஸ்காரம் பண்ணச் சொன்னா பண்ணிட்டுப் போறேன். அதுக்கு... இப்படியா?''

சாந்தி சிரித்தாள்.

''நேத்திக்கு மட்டுமில்லே...இன்னிக்கும் உங்களைத் திணற அடிக்கக் கங்கணம் கட்டிட்டு வந்திருக்கேன்.''

''என்ன?''

''என்னை உங்களுக்குப் பிடிச்சிருக்கா?''

மணி நிஜமாகவே திணறிப் போய்விட்டான்.

''நீ.....நீங்க.....''

''நோ... கேட்கிற கேள்விக்குப் பதில்... என்னைக் கல்யாணம் பண்ணிக்கச் சம்மதமா?''

''சாந்தி.... நீ....?''

''நிஜமாகத்தான் கேட்கிறேன்... விளையாடலே.''

''உங்க ஜாதி, சம்பிரதாயம்... சட்டம்... கட்டுப்பாடு....''

சாந்திக்குக் கோபம் வந்தது.

''சம்பிரதாயம்... என்னோட பணத்தைப் பிடுங்க ஒரு சம்பிரதாயம். வரதட்சிணை கேட்க ஒரு ஜாதி. எங்கிட்டப் பணம் பேரம் பேசற சம்பிரதாயத்துக்கும், ஜாதிக்கும் என்னோட கல்யாணத்தைப் பற்றி அக்கறை இல்லே. எங்கிட்டே சட்டம் பேசற ஜாதிக்கு என் வயசும், இளமையும் சட்டத்தை மீறிடுமோங்கற பயம் இல்லே! எங்கிட்டே பணம் புடுங்கித் திங்க ஒரு கூட்டமே காத்திருக்கு. ஆனா என்னோட கல்யாணத்தைப் பத்திக் கவலைப்பட ஒரு தனி மனிதன் கிடையாது. இந்த உளுத்துப்போன சம்பிரதாயங்களுக்காக நானும் இனியும் உளுத்துப் போகத் தயாரா யில்லே... எங்கிட்டேயும் பணமில்லே, உங்ககிட்டேயும் பணமில்லே. நம்ம கல்யாணத்துக்காக நாம யார் கிட்டேயும் கடன்பட வேண்டாம். நான் பெண், நீங்க ஆண், கல்யாணம் பண்ணிக்கற தகுதிகள் நம்மகிட்ட நிறையவே இருக்கு. இதை விடச் சட்டத்துக்கும், சம்பிரதாயத்துக்கும் முக்கியத்துவம் தரணும்னு நினைக்கிறீங்களா?''

மணி சாந்தியை நெருங்கினான்.

சாந்தி நிமிர்ந்து பார்த்தாள்.

''ஏன் ... என்னைப் புடிக்கலையா? எதுவானாலும் தைரியமாச் சொல்லுங்க.''

''உன்னோட இந்தத் தைரியத்துக்காகவே உன்னை நிறையப் புடிச்சிருக்குன்னு தைரியமாச் சொல்லுவேன்.''

''அப்போ ஏன் தயக்கம்? பெரியவங்க யாராவது....?''

''எனக்கு யாரும் பெரியவங்க கிடையாது. ஆனா நான் பெண் கேட்ட இடத்துலே நிறையப்பெரியவங்கஇருந்ததாலத்தான் என் கல்யாணமும் தடைபட்டுப் போச்சு. இப்பத் தடை விதிக்க நம்ம ரெண்டு பேருக்குமே பெரியவங்க இல்லே... தைரியமா நிக்கலாம். ஆனா?''

''என்ன ஆனா?''

''ஒண்ணுமில்லே... நீ ஓடிப்போனவள்ங்கிற மாதிரி நிகழ்ச்சி அமையக் கூடாது. உன் அம்மா வெளியூர் போற நாளா ஒரு நாள் பார்த்துச் சொல்லு. அன்னிக்கு நானே முறைப்படி உன்னை, உங்க வீட்டுக்கே வந்து கூட்டிட்டுப் போறேன். டாக்ஸியோட மாலைகளோட வரேன். முதல்லே நேரே ரிஜிஸ்தர் ஆபீஸ்.. அப்புறம் கோயில், அப்புறமா அடியேனுடைய அரச மாளிகை''

''ஓகே.''

சாந்தி சிரித்தாள்.

மணி தன் கைகளை நீட்டினான். அவளும் தன் கைகளைத் தந்தாள்.

## 5

**சா**ந்தி பெட்டியில் துணி மணிகளை அடுக்கிக் கொண்டிருந்தாள்.

''ரெண்டே நாள் போயிட்டு வந்துடறேன் பாவம் குழந்தை ஆசைப்படறா.. இதோ



இருக்கிற சாயி பாபா காலனிக்குப் போக-எனக்கு ஒழியலே... மாப்பிள்ளை ஊர்லே போறாராம். அங்கே கம்மாத்தானே இருக்கே இங்கே வாவான்னு புவனு நச்சரு... கைக் குழந்தைக்காரி. அவளைச் சிரமப்படுத்த முடியாது... அதான் நான் போயிட்டு வரேன்.''

''பேஷா... போயிட்டு வா...''

''ஏண்டி... அப்புறமா அந்தத் திருச்சி வரனைப் பத்திக் கேட்கவே இல்லையே...''

''நீயும் சொல்லல்லே...''

''அந்தப் புள்ளை ஒரு மாதிரியாம்... கேள்விப்பட்டேன்....''

''அப்படியா?நானும் கேள்விப்பட்டேன்.''

''என்னன்னு?''

''நான் ஒரு மாதிரின்னு எனக்கே போன் பண்ணினான்.''

''என்னடி சொல்றே?''

''ஆமாம்மா... ஏன் உங்கிட்டே இருந்து லெட்டரே வரலேன்னான்?''

''என்ன சொன்னே?''

''என்ன சொல்றது? இப்போதைக்கு எனக்குக் கல்யாணம் வேண்டாம்னு சொல்லிட்டேன்.''

''என்ன துணிச்சல் இருந்தா இப்படி ஆபீஸுக்குப் போன் பண்ணி யிருப்பான்? தடி ராஸ்கல்.''

''அது போகட்டும்... இப்படி சாஸ்திரம் பார்த்து, சம்பிரதாயம் பார்த்து, எல்லாமே தட்டிப் போறதுக்கு எதுவுமே பார்க்காம மணி மாதிரி ஒருத்தனை கல்யாணம் பண்ணிண்டா எப்படி இருக்கும்?''

''புத்தி போறது பார்... நம்ம குலம் என்ன? கோத்திரம் என்ன?''

''அந்தப் பேரைச் சொல்லி நாம யாரையும் உயர்த்தல்லே. தாழ்ந்துண்டுதான் வரோம்.''

''சரி...சரி... நான் போயிட்டு ரெண்டே நாள்லே வந்துடறேன்... ஆத்தைப் பார்த்துக்கோ. பருப்புப் பொடி பண்ணி வச்சிருக்கேன்... நிறைய முறுக்கு, சீடை எல்லாம் பண்ணி வைச்சிருக்கேன்.''

இதெல்லாம் பண்ணியது சரி... எனக்கு எப்போ கல்யாணம் பண்ணி வைக்கப் போறே? கேட்க முடியுமா?

அம்மா அடிக்கடி சொல்லும் கதைதான் இப்போது நினைவுக்கு வருகிறது. ஒரு குழந்தை தன் அம்மாவிடம் ஆசையாய் முறுக்கு, சீடை பண்ணித் தரச் சொன்னதாம்.

அதற்கு அம்மாக்காரி சொன்னாளாம்—

''ஆகட்டும் போகட்டும்
அம்பி பொறக்கட்டும்!
ஸ்ரீ ஜயந்தி வரட்டும்
சீடை வாரித் தாரேன்.''

இந்தக் குழந்தையின் அம்மா பிள்ளையுண்டாகி, அவளுக்குத் தம்பி பொறந்து, கிருஷ்ண ஜயந்தி வந்து, இந்தக் குழந்தை சீடை சாப்பிடுவதற்குள்....?

இவள் கல்யாணம் கூட இப்படித்தானோ?

''என்னடி சிரிக்கிறே?'' — அம்மா கேட்டாள்.

''ஒண்ணுமில்லே... நீ அடிக்கடி ஒரு பாட்டுச் சொல்லுவியே... 'ஆகட்டும் ஆகடும்... அம்பி பொறக்கட்டும்னு' — அந்தப் பாட்டு நினைவுக்கு வந்தது.''

அம்மாவும் சிரித்தபடி கிளம்பிவிட்டாள்.

அம்மாவுக்கு 'டாடா' சொன்னபோது மனம் அழுதது.

சின்னக் குழந்தை மாதிரி விக்கி விக்கி அழுதது.

இதுதான் அம்மாவைப் பார்க்கிற கடைசி சந்தர்ப்பம் என்று மனக் குறளி கூறியது.

அம்மா இந்தப் பக்கம் கிளம்பியதும் அந்தப் பக்கம் மணிக்கு 'போன்'பண்ணினாள்.

மணி வருவதற்குள்—

அம்மாவுக்கு,

அநேக நமஸ்காரம். சின்னக் குழந்தை சீடை கேட்ட மாதிரி நானும் என் கல்யாண ஆசைகளை உன்னிடம் கேட்டுப் பார்த்துவிட்டேன். சம்பிரதாயங்களை மீறக் கூடாது என்பதற்காகவே உன்னிடம் பிச்சையாக கேட்டுப் பார்த்தேன். நீயும் சம்பிரதாயங்களை மீறாமல், 'ஆகட்டும் போகட்டும்'— என்று பாட்டுப் பாடிவிட்டாய். இனி நானும் கல்யாணம் செய்துகொள்ளத்தான் போகிறேன். நீ இல்லாமல்! உன் சம்பிரதாயங்களை மீறிக்கொண்டு, ஜனவாசம் இல்லாமல், நலுங் இல்லாமல், சம்பந்தி சண்டை இல்லாமல், வரதட்சிணை இல்லாமல், சீர் இல்லாமல், நாள் நட்சத்திரம் பார்க்காமல் ஒரு கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறேன்! இத்தனை இல்லாமல் இருந்தும், இதில் 'வாழ்க்கை' இருக்கிறது....!

மாப்பிள்ளை யார் என்று கேட்கிறாயா? அன்று உன்னை நமஸ்கரித்து, பரீக்ஷை எழுத ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டு போனாரே மணி... அவர்தான் மாப்பிள்ளை! நானும் கூட பரிட்சை எழுதப் போகிறேன். என்னையும் சேர்த்து ஆசீர்வாதம் பண்ணு. இது தான் நீ எனக்குச் செய்யும் பிறந்தகத்து சீர்!

ஒரு நாள் நீ என்னைத் தேடிக் கொண்டு வருவாய். கட்டாயம் வருவாய்.. எனக்குத் தெரியும்... உன் சம்பிரதாயப் போலிகளை உடைத்தெறிந்துவிட்டு, என் நிழலைத்தான் தேடி வரப் போகிறாய்! அதுவும் எனக்குத் தெரியும். அன்று நீ வரும்போது உன் கழுத்தில் இரட்டை வடச் செயின் காணாமல் போயிருக்கும்! ஆனால் நான்தான் மறுபடியும் உனக்குப் புதுச் செயின் பண்ணிப் போடப் போகிறேன்! அந்த நாளுக்காக நான் காத்திருக்கிறேன்.

அன்புடன் சாந்தி

கடிதத்தை எழுதி வைத்த சாந்தி காரின் வரவுக்காகக் காத்திருக்கிறாள்.

---

கசப்பான மருந்தைக் குடிப்பதற்கு முன்னர் நாக்கில் ஐஸ் நடவிக் கொண்டால் கசப்பு தெரியாது.

-எஸ். வனஜா



# என் கதையால் எனக்கு வந்த பிரச்னை(கள்)

உஷா சுப்ரமணியம்

படிப்புக்கும், பேச்சுக்கும் கிடைத்த வெள்ளி, தங்கப் பதக்கங்கள் விளையாட்டுக் கோப்பைகள், மிக உன்னதமான ஸ்காலர்ஷிப், பழகிப்போன நடன உடை, டென்னிஸ் மட்டை, தூரிகை, வண்ணங்கள் அத்தனையையும் தானாகவே தூக்கி எறிந்துவிட்டு, ஒரு சின்னச் சமையலறை, அதையொட்டிய காற்றோட்டமில்லாத சாமான் அறை, மாடிப்படி அடிமழைச் சாரலில் கைப் பம்பு, மன் ஏஜில் துவங்கிய இனப் பெருக்கம் இவை மட்டுமே வாழ்க்கை என எண்ணி மயங்கிக் கிடந்தபோது, என்னையே எனக்கு உணர்த்தியது என் எழுத்துத்தான், நானே எனக்குப் பிரச்னையாகிவிடாமல், என்னைக் காத்த என் எழுத்து. அவ்வப்போது சின்னச் சின்னப் பிரச்னைகளையும் கிளப்பத் தவறவில்லை.

முதல் கதையிலேயே மனோ தத்துவப் பட்டதாரியான எனக்கு, ஒரு திருமணமான ஆணின் ''செக்ஸ்'' உணர்ச்சியைப் பற்றி எழுதுவதில் எந்தத் தயக்கமும் இருக்கவில்லை. 'வடிகால்' முத்திரைக் கதையாக ஆனந்த விகடனில் என் புகைப்படத்துடன் வெளி வந்தது. நாலு நாளைக்குள் கட்டுக் கட்டாகக் கடிதங்கள், விகடன் ஆபீஸிலிருந்து 'டைரக்ட் செய்யப்பட்டது. தாங்க முடியாத இன்ப அதிர்ச்சி... மார்பு படபடக்க மெய் நடுங்க, ஒரு கடிதத்தைப் பிரித்தேன், திகைத்து நின்று விட்டேன்.

''டேய்! பெண் பெயரில் ஒளிந்திருக்கும் பேடியே... பெண்சாதி போட்டோவை போட்டுக்கிட்டு பச்சைக் கதையா எழுதறே.. உதைப்பேன்...'' என எழுதியிருந்தது.

''ஏம்மா நீ என்ன 'லெஸ்பியனா'... பொம்பளையை இப்படி வர்ணிக்கிறியே?'' என்று மற்றொன்று. ஒன்றா இரண்டா? எத்தனை கண்டனக் கடிதங்கள்! நான் ஆண் என்று கண்டுகொண்டதான சாதிப்புகள், பல புத்திமதிகள், எழுதுவதைத் தொடர வேண்டாம் என மிரட்டல்கள். முதலில் பயமாக இருந்தது. தெருவில் யாராவது அடையாளம் கண்டுகொண்டு உதைப்பார்களோ என்று. நல்லவேளை, உறவினர்கள் கூட ''விகடனில் உன் போட்டோ மாதிரி இருந்தது. ஆனா, நீ இந்த மாதிரியெல்லாம் அசிங்கமா எழுத மாட்டியே'' என்று நழுவினார்கள்.

என் சாரமற்ற வாழ்வில் இத்தனை கண்டனங்களும் ஒரு வக்ரமான உந்துதலை அளித்திருக்க வேண்டும்.. அடுத்த கதை அப்போது இளைஞர்களை ஆக்ரமிக்கத் தொடங்கியிருந்த 'ஹிப்பிகல்ட்' மையமாக வைத்து எழுதினேன். இது வெளி வந்தது 1976ம் வருடம் ஜனவரி மாதம். ப்ளேயர்கள் கையொப்பமிட்ட விகடன், டெஸ்ட் மாட்ச் பார்க்க வந்த அனைவர் கையிலும் இருந்தது. சாப்பாட்டு இடைவெளியின்போது இரண்டு இளைஞர்கள் 'மனிதன் தீவல்ல' கதையைப் பற்றி பலத்த வாதம் செய்யத் துவங்கினர். கூட்டம் சேர்ந்து படிக்காதவர்கள் கூட அவசரமாகக் கதையைப் படித்தனர். கூட்டம் இரு பிரிவாகப் பிரிந்து உஷ்ணம் ஏற, வாய்ச் சண்டை கைச்சண்டையாக மாறியது. பெரிய அடிதடி துவங்கும் சமயம் போலீஸ் குறுக்கிட்டு, நெற்றியிலும், கையிலும் முஷ்டியிலும் சிராய்த்துக் கொண்டிருந்தவர்களைப் பிரித்து விட்டார்கள்.

சுகமாய் மத்தியான உறக்கத்தில் ஆழ்ந்திருந்த என்னை 'வடிகாலு'க்குப் பிறகு நிமிர்ந்து பார்க்கத் தயங்கிக் கொண்டிருந்த உறவினர் ஒருவர் போன் உலுக்கி எழுப்பியது. ''கன்க்ராட்ஸ்... உன்னால் இன்று என்ன கலாட்டா தெரியுமா?'' என்று மகிழ்ந்து போனார். இளைஞர்களுக்குப் பிரச்னையான கதை என் வாழ்வில் ஒரு திருப்பு முனையாயிற்று. அடுத்த விகடன் இதழில் டெஸ்ட் மேட்ச் நிகழ்ச்சி பற்றிய செய்தி வந்திருந்தது.

கணையாழியில் "நீயுமா ப்ருடஸ்" என்று ஒரு நாவல் பாக்டரி தொழிலாளிகளை மையமாக வைத்து எழுதினேன். தொழிலாளர்கள் மீது எனக்கு மிகவும் அன்பும், பிணைப்பும் உண்டு. அவர்கள் பிரச்னைகளுக்காக நான் நிறைய வருத்தப்பட்டதுண்டு. ஆனால் நடந்ததென்ன? 'நீயுமா ப்ருடஸ்' தொடர் முடிந்தவுடன், கொள்கை சார்புள்ள பல நல்ல நண்பர்களை இழந்தேன். சென்னையில் ஒரு கட்சியினர் தங்கள் கூட்டங்களில் என் 'போர்ஜ்வாத்'தனத்தை ஏசினார்கள். கண்டனக் கடிதம் எழுதி வீட்டுக்கே அனுப்பினார்கள். மார்க்ஸில் ஊறிப் பதமான எனக்குக் கொள்கைக்கும், தனி மனித உணர்வுகளுக்கும் வித்தியாசம் தெரியும் என்று எடுத்துக் கூறியும், என்மீது முதலாளித்துவத்தைச் சுமத்தி, என் சுமைக்குக் காரணமும் காட்டி நகையாடினார்கள். கணையாழியில் பல மாதங்கள் தொடர்ந்து அந்தக் கதையை எழுத எனக்குத் தகுதி உண்டா, இல்லையா என்று வாக்கு வாதம் நடந்தது. 'இதயத்தில் எழுதும் உஷாவுக்குக்கணையாழியில் இடமா?' என்று சீறினார்கள். பிரச்னை என்னிடமிருந்து வாசகர்கள் கைக்கு மாறிவிட்டதால், நான் என் தகுதியையோ, இடப் பொருத்தத்தையோ நிலைநாட்ட முடியவில்லை.

"காக்கைச் சிறகினிலே" கதாநாயகன் கந்தர் நான் அறிந்தவன். ஆனால் எத்தனை ஆண்கள் "நான்தான் கந்தர்" என்று கூறிக் கொண்டார்கள். "நர்ஸ் ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டு செட்டில் ஆகி விட்டேன் — கந்தர்" என்று பம்பாயிலிருந்து' ஒரு தந்தி! டில்லியிலிருந்து வழவழப்பான ரோஜா நிறத் தாளில் கவிதையான ஆங்கிலத்தில் ஒரு கடிதம்... ஒன்றல்ல இரண்டல்ல... முப்பத்திரண்டு பக்கங்கள்! எழுதியவர் முப்பத்தெட்டு வயதான உயர்தர விமானப் படை அதிகாரி. "நான் வழக்கமாகத் தமிழ்ப் புத்தகங்கள் படிப்பதில்லை. கரோல் பாக் கடை ஒன்றில் நான் பார்த்த உன் அட்டைப் படம், ஜன்மாந்திரத் ஜன்மாந்திரத் தொடர்பாக என்னை அடையாளம் கண்டுகொள்ள வைத்தது. எனக்குத் தெரியும் நீதான் ப்ரியம்வதா என்று. அதனால் தான் உனக்கு என் வாழ்க்கையின் ஒவ்வொரு சம்பவமும் தெரிந்திருக்கிறது. இத்தனை வருடமாக உனக்காகத்தான் காத்திருந்தேன். நேரே எப்போது வரலாம்?" எனக் கேட்டிருந்தார். அவர் வாழ்க்கையைப் பற்றி, விருப்பு, வெறுப்புக்களைப் பற்றி, லயிப்புக்களைப் பற்றி, அவர் கனவு கண்டுகொண்டிருந்ததைப் பற்றி....

பதினெட்டு ஆண்டு தாம்பத்தியத்தையும் மீறி ஒரு கிளுகிளுப்பு... மிகவும் இளமையாக உணர்ந்தேன். மாலையில் கணவர் ஆபீஸிலிருந்து வந்ததும் "எனக்குக் காதல் கடிதம் வந்ததே!" என மகா மகிழ்ச்சியுடன் மூச்சு விடாமல் சொன்னேன். ஒரு உம்... ஒரு முறைப்பு... அவ்வளவுதான். நாலைந்து நாள் பேச்சு மூச்சில்லை. கொஞ்சம் கொஞ்சமாக அடி மனம் உறுத்த இந்த 'மன் ஏஜ்' துள்ளலெல்லாம் எத்தனை அர்த்தமற்றது என்று புரிய கொஞ்சம் கண்ணீர், கொஞ்சம் கெஞ்சல், கொஞ்சம் கொஞ்சல், கொஞ்சம் கத்தல்... "வோன்ட் யூ எவர் க்ரோ அப்?" "யெஸ் ஐ வில்... தௌ யூ மிஸ் மீ..." அப்பாடா ஒரு வழியாய்ச் சமாதானம் ஆச்சு.

மிகச் சமீபத்தில் இதயத்தில் பூணூல் பற்றி ஒரு பிரச்னைக் கதை எழுதியிருந்தேன். பொள்ளாச்சியிலிருந்தும், கோவையிலிருந்தும் இரண்டுமாணவர் குழு வீடுதேடி வந்தார்கள்.

"நீங்க ஏன் ப்ராமின்ஸை சப்போர்ட் செய்து எழுதறீங்க? நீங்க ப்ராமின் என்பதாலா?" என்று கேட்டார்கள்.

"நான் யாரையும் சப்போர்ட் செய்யவில்லை. எனக்கு ஜாதியில் நம்பிக்கை இல்லை. இன்றைய ஒரு சமுதாய நிலையை எழுதினேன். அவ்வளவுதான்" என்றேன்.

என்னுடன் ஆவேசமாக விவாதம் செய்தார்கள். பார்ப்பனராகப் பிறந்தவர்களில் நல்லவர்களே கிடையாது என்றார்கள். பார்ப்பனர்களையும், பார்ப்பனீயத்தையும் அழித்து நசுக்க வேண்டும் என்றார்கள். ஆத்ம பாஷை பேசுபவர்களை அடிக்க வேண்டும் என்றார்கள்.

"தம்பி.... நீங்க சின்னப் பசங்க. ஜாதிக்கு அப்பால் சிந்திக்கும் மனப் பக்குவம் வர வேண்டும். வெறுப்பில் உங்களைக் குறுக்கிக் கொள்ளாமல், அன்பால் வளர்த்துக்கொள்ளுங்கள்" என்று கூறி மாவாட்டிக்கொண்டிருந்த லக்ஷ்மியை அழைத்தேன். "எனக்குச் சமையலறையில் உதவும் இவள் சக்கிலியப் பெண். கக்கூஸ் கழுவும் வேலைக்கா அனுப்பப்பட்டவள்" என்றேன்.

என் பேச்சைக் காது கொடுத்துக் கேட்காமல் தங்கள் போக்கில் பார்ப்பனத் துவேஷம் பேசினார்கள். இரண்டு மணி நேரப் பேச்சில் பசி வயிற்றைக் கிள்ளியது. பேச்சை எப்படி முடிப்பது? "என் தாத்தா ஒரு பிராமணர். ஹரிஜனப் பெண்ணை எங்க பாட்டியைக் கட்டிக்கிட்டார். ஜாதி என்னங்க ஜாதி?" என்றேன் அலட்சியமாக.

ஒரு நிமிடம் பேச்சை நிறுத்திவிட்டு அனைவரும் வியப்புடன் நிமிர்ந்து பார்த்தார்கள். "உண்மையாகவா? அதுதாங்க, நீங்க இவ்வளவு பரந்த நோக்கோடு இருக்கீங்க. வீட்டில் லோ காஸ்டை(!) சமையல் செய்ய அனுமதிக்கிறீங்க. உங்க எழுத்து, அறிவு, சிந்தனை இதெல்லாம் பார்த்தபோதே நீங்க வெறும் 'ப்ராமின்' இருக்க மாட்டீங்கன்னு நெனைச்சேன்" என்று ஒருவர் ஆரம்பிக்க, ஒவ்வொருவராகப் புகழ் மாலை சூட்ட ஆரம்பித்தார்கள். காப்பி குடித்துவிட்டு (லக்ஷ்மி தயாரித்தது) மகிழ்ச்சியாக விடை பெற்றார்கள்.

நான் இன்னும் சிரித்து ஓய்ந்தபாடில்லை

# வேலைக்குப் போகும் பெண்ணே!

நித்யா மூர்த்தி



அன்புள்ள வனிதா,

முந்தாநாள், கறிகாய் மார்க்கெட்டில், அநுசூயாவைச் சந்தித்தேன். நிறைய காய் கறிகளை வாங்கி இரண்டு பிளாஸ்டிக் பைகளில் திணித்துக் கொண்டிருந்தாள்.

''என்ன வீட்ல விசேஷம் வருதா?'' வம்பு விசாரித்தேன்.

அசட்டுச் சிரிப்புடன், ''விசேஷம் ஒண்ணுமில்லே. நான் வேலைக்குச் சேர்ந்திருக்கேன். அதனால, வாராந்திரமாக காய் கறிகளை வாங்கி 'பிரிட்ஜில்' வைத்துவிடுவேன்'' என்று இழுத்தாள்.

நான் பதில் பேசாமல் நகர்ந்தேன். ஏனெனில் இதே அநுசூயா, ஒரு காலத்தில் பெண்கள் வேலைக்குச் செல்வதை எதிர்த்தவள். திருமணமாகி விட்டால் வேலைக்குப் போகவே கூடாது. வீடுதான் முக்கியம் என்று வாதித்தவள். இப்போது நீ ஏன் வேலைக்குப் போகிறாய் என்று கேட்டால்?

''பொழுது போகலே'' என்று ஏதேனும் சொல்வாள். அதைவிட, அறிந்துகொள்ளத் துடித்த விஷயம், அவளுடைய வளர்ந்த குழந்தைகளை எப்படிச் சமாளிக்கிறாள்? வீட்டில் பெரியவர்கள் யாருமில்லை. பள்ளி சென்று திரும்பும் குழந்தைகளை வேலைக்காரி, பால்காரிகள் இத்யாதிகளை என்ன செய்வாள்?

அநுசூயாவை விடு. பொதுவாகவே, வளர்ந்து வரும் குழந்தைகள் இருக்கும் தாயார்கள் வேலைக்குச் செல்வது அவசியமாகும்போது பல பிரச்னைகள் எழத்தான் செய்கின்றன.

''காலைப் பொழுது எண்டாப்பா விடியுதுன்னு இருக்கு. சமைச்சு, குழந்தைகளைத் தயார் செய்து பள்ளிக்கூடம் அனுப்பி, ஆபீஸ் புறப்படறதுக்குள்ளே... அப்பப்பா'' சலித்துக் கொள்கிறார் ஒரு தாயார்.

''நான் ஆபீஸ்லே இருந்து திரும்பு முன்னமேயே குழந்தை வீடு திரும்பிடறாங்க. அவங்களை எப்படிக் கட்டி மேய்க்கிறதுன்னே புரியறதில்லே'' இது மற்றொரு அலுவலகத் தாயின் வாதம்.

வீட்டில் கவனித்துக்கொள்ளப் பெரியவர்களோ, அல்லது நம்பகமான வேலையாட்களோ இல்லாவிட்டால்...? சிறிது யோசிக்க வேண்டியதே.

பொதுவாக கம்பெனி நேரங்களும் பள்ளி நேரங்களும் ஒத்து வருவதில்லை. வேலையிலிருந்து தாயோ, தகப்பனோ வீடு திரும்பு முன் குழந்தைகள் பள்ளியிலிருந்து திரும்பிவிடலாம். தாய், தகப்பன்—இவர்களில் யாராவது ஒருத்தர் முன்னால் வீடு திரும்பிவிடலாம். ஆனால் அதுவரை குழந்தைகளை என்ன செய்வது?

அடுத்த வீட்டுக்காரர் நல்ல மனது படைத்தவர்களாக இருந்தால், அவரை அங்கே இருக்கச் சொல்லலாம். அதே சமயம் நமது குழந்தைகள், விஷமக் கொடுக்குகளாக இராமல், அவர்களது வேலைகளுக்குத் தடங்கலோ, தொல்லையோ தராத வகையில் இருப்பது நல்லது. இல்லாவிட்டால், ''ஆமாம், இது ஆபீஸ் போறதாம். இது குழந்தைகளை, தினமும் நாம பாத்துக்கறதாம்'' என்று பழிக்கும்படி ஆகலாம்.

சிறிது விவரம் தெரிந்த குழந்தைகளானால் வீட்டுச் சாவியைக் கொடுத்து வைக்கலாம். சாப்பாட்டு மேஜை மீது அவர்களுக்குத் தேவையான பலகாரத்தை வைத்து மூடி வைக்கலாம். பிளாஸ்கில் பால் காப்பி போன்றவற்றையும் வைத்து விட்டால் பசியாறிக் கொள்வார்கள்.

வீட்டிலேயே குழந்தைகள் தங்கினால், சில எச்சரிக்கைகளில் அவர்களைப் பழக்கப் படுத்தி வைக்க வேண்டியது மெத்த அவசியம்.

1. வாயிற் கதவைத் திறந்து வைக்காதே.

2. எந்த மனிதரானாலும் கதவைத் திறந்து கொண்டு பேசாதே. விவரத்தை ஜன்னல் மூலம் கேட்டுக் கொண்டு அனுப்பிவிடு.

வீட்டில் உள்ள மின்சார சாதனங்களை உபயோகிக்காதே.

4. அடுப்பு போன்றவற்றை பற்றவைத்து காப்பி, டீ போடும் வேலையைச் செய்யாதே.

5. எல்லா வீட்டுக் குழந்தைகளைக் கூப் பிட்டு வைத்துக் கொண்டு விளையாடாதே.

6. யார் கூப்பிட்டாலும் அப்பாவோ, அம்மாவோ வந்தால் ஒழிய வரமாட்டோம் என்று கூறு.

வாயிற் கதவைக் கவனமாக மூடா விட்டால் என்ன நேரும் என்று சொல்லத் தேவையில்லை. அதே போல, வேலைக்குப் போகிறவர்கள் வீடு என்று தெரிந்து வைத் துக்கொண்டு குழந்தைகள் தனித்திருக்கும் சமயம் விரோதிகள் உள்ளே நுழைந்துவிட வாய்ப்பு ஏற்படுமல்லவா?

தனியே விடப்படுகிற குழந்தைகளுக்குத் திடீரெனத் தாங்கள் பெரியவர்களாகிவிட் டது போல ஒரு மனப் பிரமை ஏற்படுவது இயல்பு. எனவே, துணிகளுக்கு இஸ்திரி போடுகிறோம் என்றோ, அடுப்பில் டீ போடு கிறோம் என்றோ ஆரம்பிக்கலாம். மின்சாரம், தீ போன்ற அபாயங்களிலிருந்து அவர்கள் விலகி இருப்பது சிறிது காலத்துக்கு நல்லது. அவர்களே வளர்ந்து, பெரியவர்களான பிறகு வீட்டை நிர்வகித்துக் கொள்வார் களே!

"அடுத்தாத்து அரவிந்தோட காரம் விளையாடிக் கொண்டிரு. அம்மா ஆபீஸி லேருந்து ஓடி வந்துடுவேன்" என்று சொல்லி வைத்தல் தவறு.

குழந்தைகள் வீட்டினுள்ளேதானே நேரம் விளையாடப் போகிறதுகள் என்ற தைரி யத்தில் தாயார் இருப்பாள். சிறிது நேரம் விளையாடி சலித்து விடுவது குழந்தைகளின் மன இயல்பு. பிறகு? ஏதேனும் விஷம விளையாட்டில் ஈடுபட்டு, அதிலும் அடுத்த வீட்டு அரவிந்தனுக்கு ஆபத்து ஏற்பட்டால் பொறுப்பாளி யார்? அரவிந்தன் தாயாரின் சாபத்துக்கும் நமது மனதினுள் சதா நெரு டும் குற்ற உணர்வுக்கும் நாம் ஆளாகி விடுவோமல்லவா?

அக்கம் பக்கம் அனுசரணையாக இருந்து சாவியைக் கொடுத்து வைத்துவிட்டு, குழந் தைகள் வந்தால் பெற்றுக் கொள்ளச் செய்ய லாம். சாப்பாட்டு மேஜை மீது குறிப்பு எழுதி வைத்து விட்டு, தின்பண்டங்கள் இத்யாதிகளை வைக்கலாம்.

எனக்குத் தெரிந்த தோழி ஒருத்திக்கு இரண்டு குழந்தைகள். ஏழு, எட்டு வகுப்பு களில் படிப்பவர்கள். மாமியார், நாத்தனார் என்று பெரிய குடும்பமாக வசித்தபோது அவளுக்கு வேலைக்குப் போவது எளிதாக இருந்தது.

திடீரென அவள் தனிக் குடித்தனம் போக வேண்டி வந்தது. வீட்டில் குழந்தை களை விட்டு விட்டு ஆபீஸிலிருந்து திரும்பும் வரை என்ன செய்வது?

அவளது கணவர் சற்று முன்னதாகவே வீடு திரும்பி விடுவார். ஆனால் அவளுக்கு பின்னும் நேரமாகும். தோழி யோசித்தாள். முடிவு?

பெண்ணை அருகிலிருந்த நாட்டியப் பள்ளி யில் சேர்த்தாள். அங்கேயே சங்கீதமும் சொல்லித் தர ஏற்பாடு செய்தாள். பிள் ளையை அவன் படிக்கும் பள்ளியிலேயே பிற மொழி வகுப்பொன்றில் சேர்த்து விட்டாள். குழந்தைகள் வகுப்புகள் முடியும் சமயம், தந்தை வீடு திரும்பிவிடுவார். பிறகு கவலை இல்லையே.

பள்ளிக்கூடம் முடிந்ததும், சில குழந் தைகள், தங்கள் பெற்றோர்களுக்காக, பள்ளி யிலேயே காத்திருப்பதைப் பார்த்திருக்கிறேன். ஆபீஸிலிருந்து அந்த வழியாக வீடு திரும் பும் பெற்றோர்கள் குழந்தைகளை உடன் கூட்டிச் செல்லலாம். ஆனால், 'பிள்ளை பிடிப் பவர்கள்' கதைகள் பராபரியாக உலவிடும் இந்தக் காலத்தில் குழந்தைகளை அப்படியே காத்திருக்கும்படி செய்ய எத்தனை பெற்றோர் களுக்கு மனம் வரும்? எனவே, இதற் கெனவே வேலைக்கு அமர்த்தப்படும் ஆயாக் களின் உதவியை நாடுவது நல்லது.

பொதுவாகவே, குழந்தைகளை வீட்டில் தனியாக அவர்களுக்குப் பொறுப்புத் தெரி யும்வரை விட்டு வைப்பது நல்லதல்ல.

குழந்தைகளை நல்ல விதமான விளையாட் டிலோ, அல்லது பொழுது போக்கிலோ ஈடுபடுத்தி விட்டால், பெற்றோர்கள் வீடு திரும்பும் வரை கவலையின்றி இருக்கலாம்.

---

மாமிசம் சாப்பிடுபவரின் சிறுநீரில் அமிலம் அதிகமாக வெளியேறுகிறது! இதனால் ரத் தத்தின் ரசாயன சமநிலை வேறுபடுகிறது. இதனைச் சரிக்கட்ட இரத்தம் எலும்புகளி லிருந்து சில உப்புக்களை உறிஞ்சிக்கொள் கிறது. இதனால் எலும்புகள் வலுவிழக்கின்றன!

—டாக்டர் ஏ. வாட்சமன்
(ஹார்வர்டு யுனிவர்சிடி)
தகவல்: மிஸஸ் கிரிஜானந்த்

உல்லாசமாய் ஊர் சுற்றிப் பார்க்க வந்த இடத்தில் விமலாவுக்கு இப்படி ஒரு அவஸ்தை நேரவேண்டாம். தவித்துப் போய்விட்டாள்.

''இப்ப என்ன செய்யறதும்மா...''

அம்மாவைக் கலக்கத்துடன் ஏறிட்டுப் பார்க்கும் மீனுவைப் பார்க்கையில் பரிதாபமாய் இருக்கிறது. இடிந்துபோய் உட்கார்ந்து விட்டாள் விமலா.

எங்கேயோ ஊர் விட்டு ஊர் வந்து, ஓட்டலில் அறை எடுத்துத் தங்கியிருக்கும் இந்தச் சமயத்திலா — மீனு பூப்படைய வேண்டும்?

இப்படி ஒன்றை இதுநாள்வரையில் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை அவள். மீனுவுக்கு பத்து வயதுதானே ஆகிறது?

எத்தனை உற்சாகமாய்க் கிளம்பினாள் குழந்தை... விமலாவும்தான் இந்தப் பயணத்தை எத்தனை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தாள்? சென்னையில் ஆளும் படையும், வீடும் வாசலும் இருக்க — எங்கோ ஒரு மூலையில் கன்னியாகுமரியில் வந்துதானா இந்த வைபவம் நிகழ வேண்டும்?

இந்த ஊரில் கால் வைத்து இரண்டு மணி நேரம்தான் ஆகிறது. இதோ — ரகு, விமலாவின் கணவன், இப்பொழுதுதான் ஓட்டல் மானேஜரிடம் உணவு விவகாரங்களைக் கேட்டு வரச் சென்றிருக்கிறான். அவனுக்கு இன்னமும் இந்த விஷயம் தெரியாது.

இவர்களுடன் வந்திருந்த மற்ற சிநேகிதர்கள், அவரவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்த அறைகளில், பெட்டி படுக்கைகளைக் கொண்டு வைப்பதும், அமர்க்களமாய்ச் சிரிப்பதும் காதில் விழ... 'சட்'டென இத்தனை சந்தோஷங்களிலிருந்தும் ஒதுக்கப்பட்டவள் போல உணருகிறாள் விமலா.

இது மாதிரியான ஒரு உல்லாசப் பிரயாணத்துக்காக நாலு வருஷமாய்த் திட்டம் போட்டு — திட்டம் போட்டுக் கடைசியில் எல்லாம் கூடி வரும்போது இப்படி ஒரு இக்கட்டா....

''நாலு நாள் லீவு, ஆபிசில் ஒர்க் பண்ணற அத்தனை பேரும் குடும்பத்தோட கிளம்பறோம். இந்தத் தடவையாவது நீங்களும் உங்க ஃபாமிலியோடு வந்துதான் ஆகணும் சார்'னு அத்தனை பசங்களும் ரொம்பவும் வற்புறுத்தறாங்க விமலா...''

''எனக்கு மட்டும் ஆசை இல்லையா... நமக்குத்தான் வீட்டை விட்டுக் கிளம்ப முடியாம ஆயிரம் கால்கட்டு இருக்கே...''

விமலா குத்தலாகச் சொன்னாள். அவள் கால்கட்டு என்று குறிப்பிட்டது யாரை என்பது புரிந்தும், புரியாத ஜடம் மாதிரி நின்றான் ரகு.

அவனுக்குத் தெரியாதா — விமலாவின் எரிச்சல் முழுவதும் யார்மீது அருவியாய்ப் பொழிகிறது என்று?

அதற்கென்ன செய்வது? பெண்டாட்டிக்காகப் பெத்தவளைக் கழுத்தை நெறித்துக் கொன்றுவிட முடியுமா? அம்மாவிடம் ஏகப்பட்ட பிரியம் உண்டு ரகுவுக்கு. இந்த நிலை என்பதனால் ஏற்பட்ட பச்சாதாபம்...

உண்மையில் ரகுவைப் பெற்றபோது ஏற்பட்ட வலிப்பு நோயினால் — காலிரண்டும் முடங்கிப் போனவள்தான் லட்சுமி. அவளது காலத்தில் பிரசவத்துக்காகப் பெரிய டாக்களிடம் போகும் பழக்கமில்லை. மருத்துவச்சியிடம் அஜாக்கிரதையினால் அறியாமையினால் அவள் பெற்றுப் பிழைத்ததே அதிசயம்... லட்சுமியின் பதின்மூன்றாவது வயதில் கல்யாணம். பதினாலாவது வயசில் — புக்ககம் வந்தாள், பெரிய மனுஷியாய்... பதினாறுவது வயசில் ரகு பிறந்தான் — அம்மாவின் கால்களை அபகரித்துக் கொண்டு...

ரகுவைப் பெற்றவர், இதற்குப் பின் மறுமணம் செய்து கொண்டிருக்கலாம். இதெல்லாம் அந்தக் காலத்தில் சகஜம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. பெண்டாட்டியை உட்கார்த்தி வைத்து சிசுருஷை செய்தார். அவளது ஊனத்தைப் பாராட்டாது தான் வெளியூர் போகும்போதெல்லாம் சக்கர நாற்காலியின் துணையுடன் அவளையும் தன்னுடன் அழைத்துப் போவார்.

''அவ ஒரே இடத்துலே இருந்தா மனசு சும்மா ஊனத்தைப் பத்தியே நினைக்கும். நான் போகிற இடத்துக்கு அவளும் வரட்டுமே... எனக்கு அவ ஒண்ணும் பாரமில்லே''

இப்படிச் சொல்லி, எதிராளியை ஒரே வார்த்தையில் அடங்கிப் போகச் செய்து விடுவார்.

லட்சுமிக்குத்தான் இந்த அன்பான கணவருடன் வாழக் கொடுத்து வைக்கவில்லை. அவளின் இருபத்தைந்தாவது வயசிலேயே விதவையாகி விட்டாள். ரகுவை வளர்த்து ஆளாக்கும் பொறுப்பை முகச் சுளிப்புடன் ஏற்ற அவளின் புக்ககத்து மனிதர்கள்—இவளை ஒரு அநாவசியச் சுமையாய் மூலையில் தள்ள...

அன்று, ஓரகத்திகளின் அலுப்பான பார்வைகளையும் எரிச்சல் மிகுந்த வசைமொழிகளையும் தாங்கிக் கொண்டவள் — இன்று



மருமகளின் கோப தாபங்களுக்கும் பொறுப் பேற்க வேண்டிய நிலை.

இன்று ரகுவின் அந்தஸ்துக்கு வீடு நிறைய வேலைக்காரர்கள் இருக்கிறார்கள் தான். மாமியாருக்காக ஒரு துரும்பைத் தூக்கி அந்தண்டை போட்டவள் இல்லை விமலா. நாலு வருடங்களாய் இந்த உல்லாசப் பயணத்தில் கலந்து கொள்ளாததற்கு மாமியார் லட்சுமி ஒரு காரணமேயில்லை.

பாவம்... அவள் பாட்டுக்குப் போட்டதைத் தின்று, கட்டிலோடு முடங்கிக் கிடக்கிறாள். அவளுக்கென ஒதுக்கப்பட்ட அறையை விட்டு வெளியே வந்து வருடக் கணக்காகிறது. ரகுவின் கல்யாணத்துக்கு முன் எப்பொழுதாவது சக்கர நாற்காலியில் அமர்ந்தபடி வீட்டை, தோட்டத்தை, வேலைக்காரியின் உதவியுடன் சுற்றி வந்தவள்— விமலாவின் வருகைக்குப் பின் சுத்தமாய் வெளி உலகத் தொடர்பையே அறுத்துக் கொண்டு விட்டாள்.

சக்கர நாற்காலியின் 'கிறீச்'சிடும் சத்தம் மருமகளுக்குத் தலை வேதனையாய் இருக்கிறது என்பதால்...

லட்சுமியின் பொழுது போக்கு கட்டிலருகில் உள்ள ஜன்னல் வழியே கண்ணுக் கெட்டிய மட்டும் தெருவைப் பார்ப்பது தான்.

# ஜன்னல்



அனுராதா ரமணன்

இவளால் விமலாவுக்கு ஒரு சிரமமும் இல்லாவிட்டாலும் — கோபம் வந்தால் சொல்லடி படுவதற்கு மாமியார்தான் அகப்படுவாள்.

நாலு வருடங்களுக்கு முன்பு — ஆபீஸில் டூர் கிளம்பியபோது விமலாவின் தங்கைக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருந்தது.

அதற்குத் தகுந்தாற் போல ஒவ்வொரு தடவையும் ஏதோ ஒரு தடங்கல்... அண்ணன் பிள்ளைக்கு ஆண்டு நிறைவு, விமலாவுக்குத் தொல்லை தந்த மஞ்சள் காமாலை, லேடீஸ் க்ளப்பின் ஆண்டு விழா, இது மாதிரி...

ஆனால் கேட்பவர்களுக்கெல்லாம் தன்மாமியாரின் தலையைத்தான் உருட்டுவாள்.

''இப்படி ஒரு கால்கட்டு இருக்கறப்ப— நான் எங்கே போறது, எங்கே வர்றது.... அதுக்கெல்லாம் கொஞ்சம் அதிர்ஷ்டம் வேணும். என் தலையெழுத்து — நான் என்னிக்கு இந்த வீட்டில காலடி வச்சேனோ, சனீஸ்வரன் கெட்டியாப் பிடிச்சுண்டாச்சு! இதோ பக்கத்துல இருக்கிற மாம்பலத்துல தான் என் பிறந்த வீடு. வாரத்துக்கு ஒரு தடவை போய் எட்டிப் பார்த்துட்டு வரலாம்னா முடியலே...'

ரகு, இத்தனையையும் கேட்டுக்கொண்டு 'தெய்வமே' என உட்கார்ந்திருப்பான். விமலாவை ஒரு வார்த்தை அதட்டிப் பேசினாலும் தாங்க மாட்டாள். பொல பொலவென அழுது விடுவாள்.

''அம்மா, அவ பேசறதை யெல்லாம் ஒரு பொருட்டா நினைக்காதே... என்னமோ சொல்லிட்டுப் போறான்னு ஒதுக்கிடு...''

''எனக்குத் தெரியாதாடா குழந்தே... இதுக்குப் போய் ஏன் வீணா மனசை அலட்டிக்கிறே... உன் பாட்டியும், அத்தைகளும் சித்திகளும் சொன்ன வார்த்தைகளை விட இவ என்னத்தைப் பெரிசாச் சொல்லிட்டா, அவளும் சின்னவதானே....''

லட்சுமி மகனுக்கு ஆறுதலாகச் சொல்லியபடி சிரித்து வைப்பாள்.

அவளை அழைச்சுண்டு எங்கேயாவது ஊருக்குப் போய் பத்து நாள் சந்தோஷமா இருந்துட்டு வாயேன். இந்த வயசுல சுத்திப் பார்க்காம , அப்புறம் எப்பப் பார்க்கறது''— அவ்வப்பொழுது மகனுக்குப் புத்தி சொல்லி இருவரையும் அனுப்பி வைப்பாள்.

இந்த முறைகூட ரகு, தாயின் யோசனையின்படிதான் கிளம்பியிருக்கிறான்.

வந்த இடத்தில் இது மாதிரி....

ரகுவுக்கு மினு ஒரே பெண். ரொம்பவும் செல்லம். மகளை வீட்டில் விட்டு விட்டு தம்பதியர் வெளியூர் கிளம்ப விரும்பவில்லை.

'குழந்தைக்கு நாலு இடத்தைக் காண்பிக்கணும்'

இப்படி ஆசைகளைச்சுமந்துகொண்டு வந்தவர்கள் செய்வதறியாமல் திகைத்து நின்றனர்.

''இப்போ என்ன செய்யறது விமல்...''

ரகு தவித்துப் போகிறான்.

''என்ன செய்ய... எல்லாம் சாமி கோயிலாப் பார்த்து வந்திருக்கோம். இன்னிக்கு முழுக்க இங்கே... நாளைக்கு திருச்செந்தூர். அடுத்த நாள் சுசீந்திரம்... குழந்தையை அழைச்சுண்டு கோவிலுக்குப் போக முடியாது.. தனியா ரூம்ல விட்டுட்டு நாம மாத்திரம் கோவில் குளம்னு போகவும் மனசு வரல்லே....''

விமலாவுக்கு அழமாட்டாத குறை.

''அப்பவே நினைச்சேன். உங்க அம்மாவோட வயித்தெரிச்சல்தான் நாம இப்படி இத்தனை தூரம் வந்தும் எதையும் என்ஜாய் பண்ண முடியாமப் போயிடுத்து...''

வாய் ஓயாமல் புலம்புகிறாள்.

கூட வந்திருப்பவர்கள் அத்தனை பேரும் கடற்கரையைப் பார்க்க, கன்னியாகுமரி அம்மனைத் தரிசிக்கக் கிளம்பி விட்டனர். போகிற போக்கில் விமலாவைத் துக்கம் விசாரிக்காத குறையாக விசாரித்துவிட்டுப் போக....

''நீ வேணா இவங்களோட போய் சாமி பார்த்துட்டு வா விமலா. நீ வரவரைக்கும் மீனுவுக்குத் துணையா நான் இருக்கேன்.''

''போதுமே... குழந்தையைத் தனியா விட்டுட்டு எனக்கு என்ன கோவிலும் குளமும் வேண்டிக் கிடக்கு... உங்க ஃப்ரெண்ட்ஸோட நீங்களாவது போய் எல்லாத்தையும் பார்த்துட்டு வாங்கோ. எனக்குக் கொடுத்து வச்சது அவ்வளவுதான்...''

ரகுவுக்கு இவர்களை விட்டுப் போக மனசில்லைதான். இருந்தாலும் நண்பர்களின் வற்புறுத்தலுக்காக— கடைத் தெரு வரையில் போய் வருகிறான்.

''கோவிலுக்கு வேணா போக வேண்டாம். பீச்சுல காலாற நடந்துட்டு வரலாமே... அப்படியே குழந்தை மீனுவுக்கும் கடைத் தெருவைச் சுத்திக் காண்பிச்ச மாதிரி இருக்கும்....''

ரகு.. சாதாரணமாய்ச் சொல்லப் போக விமலா சீறுகிறாள்.

''நீங்க பேசற பேச்சு உங்களுக்கே நல்லாயிருக்கா...அவளை அழைச்சுண்டு எங்கே போறது... பாவம், அதுவே 'டிமர்'னு ஏற்பட்ட இந்த 'ஷாக்'கைப் புரிஞ்சுக்க முடியாமல் அழறது... அவளால ஒரு அடி கூட நடக்க முடியாது. நான் அவளுக்குத் துணையா இருக்கேன். நீங்க போயிட்டு எங்களுக்கு காப்பி, டிபன் ஏதாவது வாங்கிண்டு வாங்கோ...''

அந்த நான்கு நாட்களாக சிறையில் அடைபட்ட பறவைகளாக விமலாவும் மீனுவும்...

விமலாவாவது தான் தங்கியிருந்த லாட்ஜின் போர்டிகோவில், அல்லது எதிர்த்தாற் போல இருந்த வெற்றிலை பாக்குக் கடைவரையில் போய் நின்றுவிட்டுவருவாள். மீனு — அறையோடு அடைந்து கிடக்கிறாள். விமலா ரொம்பவும் வற்புறுத்தினால் அறையின் ஜன்னலருகே வந்தமர்ந்து புதிய ஊரின் தினுசு தினுசான மனிதர்களை ஏக்கத்துடன் பார்ப்பாள்.

விமலாவுக்கு மகளைப் பார்க்கையிலேயே துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது.

அவளின் வயதையொத்த குழந்தைகள், குதூகலமாய் ஊரைச் சுற்றிப் பார்க்க குதித்துக்கொண்டு கிளம்பியபோது, இந்தக் குழந்தைக்கு மட்டும் இது என்ன சோதனை?

பெண்ணைப் பார்த்துப் பெருமூச்செறிந்தபடி அறைக்குள்ளேயே உலவி, அவளுக்குப் புதுசாய் அறிமுகமாகியுள்ள மாற்றத்தை சகஜமாய் ஏற்றுக்கொள்ளக்கற்றுக்கொடுத்து மகள் வயிற்று வலியால் அழும்போது தானும் கூடச் சேர்ந்து அழுது, இனிமேல் அவள் எப்படி, பெரிய மனுஷியாய் லட்சணமாய் மற்றவர்களிடம் பேசிப் பழக வேண்டுமென்பதைச் சொல்லிக் கொடுத்து...

ஐந்தாம் நாள் காலையில் ஊர் திரும்பும்போது நெஞ்சம் முழுக்க ஏமாற்றம்...

'அத்தனை காசைக் கொட்டி அவ்வளவு தூரம் போய்... கடைசியில் அங்கேயிருந்த லாட்ஜ் ரூம்லே அலுக்கச் சலிக்க இருந்துட்டு வந்தாச்சு... லேடீஸ் கிளப்... ஃப்ரெண்ட்ஸ் எல்லாரும் நாளைக்குக் கேட்பா... எங்கேயெல்லாம் போனேள், என்னென்னவெல்லாம் பார்த்தேள்னு...''

கணவனிடம் சொல்லும்போதே துக்கம் தொண்டையில் முள்ளாய் உறுத்த—

கண் முன் நாலு நாட்களாய் சிறைபட்டிருந்த லாட்ஜ் அறையின் அழுக்கு படிந்த பச்சை வண்ணச் சுவரும், கடகடவெனச் சத்தமிடும் கட்டிலும், கிணற்று ராட்டினம் போல கிறீச்சிடும் மின் விசிறியும், அறை மூலையில் எந்தக் காதலர்களோ நகத்தால் கீறிச் சென்ற பெயர்களும், ரகு அவ்வப்போது வாங்கி வரும் வாயில் வைக்கச் சகிக்காத உணவு வகைகளும், ஜன்னல் வழியே தெரிந்த பலதரப்பட்ட மனிதர்களும், கிளிஞ்சல்—சங்கு வியாபாரிகளின் கூக்குரலும், கடலின் 'ஓ'வென்ற இரைச்சலும்... இத்தனைக்கும் மேலே மீனுவின் ஏக்கம் நிறைந்த பார்வையும்....

அலுப்புடன் காரை விட்டு இறங்கியவளின் கண்களில் முதலில் தென்பட்டது – மாமியார் லட்சுமியின் அறைதான்.

ஜன்னலை ஒட்டிய கட்டிலில், சாய்ந்து உட்காருவதற்குச் சௌகரியமாய் முதுகுப் பக்கம் தலையணைகளை வைத்து, உட்கார்ந்திருக்கிறாள் லட்சுமி. அவளின் பார்வை தோட்டத்தில் பூத்திருக்கும் மலர்களின் மீது சந்தோஷமாய் ஒரு கணம் படிந்து, அடுத்த கணம் விண்ணில் வட்டமிடும் வண்ணத்துப் பூச்சிகளின் மீது ஆச்சரியமாய் நிலைக்கிறது.

விமலாவின் தலையில் ஓங்கி அறைந்தாற்போல அதிர்ச்சியைத் தருகிறது இந்தக் காட்சி.

நாலு நாள்—ஒரு ரூம்லே சேர்ந்தாற்போல உட்கார்ந்திருந்ததுக்கே எனக்கு இத்தனை எரிச்சலா இருக்கே... இருபத்தியஞ்சு வயசுலேருந்து இதோ – இந்த நிமிஷம் வரைக்கும் வெளி உலகத்தைக் கண்ணால் பார்க்க முடியாம ஜன்னல் வழியா தெரியற உலகத்தைப் பார்த்துத் திருப்திப்பட்டுண்டு—ஆத்திரத்தோட வேண்டா வெறுப்பா நான் போடற சோத்தைத் தின்னுண்டு... வருஷக் கணக்கா அறைச் சுவரையும், அதிலே மாட்டியிருக்கிற படத்தையும், அந்தப் படத்துக்குப் பின்னாடி ஓடி ஒளியற பல்லியையும் பார்த்துண்டு எப்படித்தான் காலத்தைத் தள்ளறா....'

நெஞ்சுக்குள் இந்தக் கேள்வி முளைத்ததும் ஸ்தம்பித்து நின்றுவிட்டாள் விமலா. மறுபடியும் தலையை நிமிர்த்திப் பார்த்தபோது லட்சுமி தங்களையே பார்ப்பது தெரிந்தது.

முதன் முதலாக மாமியாரைப் பார்த்துச் சிநேகிதமாய்ச் சிரித்தாள் அவள். லட்சுமி அதிசயத்தில் கண்களை அகல விரிக்க.

''மீனு, முதல்லே பாட்டிக்குப் போய் நமஸ்காரத்தைப் பண்ணு... போ....''

❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀

பேன் சீப்பு, ஈர்கொல்லி ஆகிய ஆயுதங்களைக் கொண்டு போர் தொடுத்தும் ஒழிக்க முடியாத பேன் வர்க்கத்தை ஒழிக்க வேண்டுமா?

தலைக்குத் தேய்க்கும் எண்ணெயுடன் சம அளவு மண்ணெண்ணெயைக் கலந்து படுக்கப் போகுமுன் தலையில் தடவிக்கொள்ளுங்கள். பேன், ஏன் என்று கேட்காமல் ஓடிவிடக் காண்பீர்கள்! —மிஸஸ் கிரிஜானந்த்



❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀

மகளிடம், விமலா கூறிய வார்த்தைகளை நம்பு முடியாமல் மலங்க மலங்க விழிக்கிறான் ரகு.

இப்பொழுதெல்லாம் – வருடா வருடம் அவர்கள் உல்லாசப் பயணம் செல்லும் பொழுது லட்சுமியையும் கூட அழைத்துச் செல்கிறார்கள். இது தவிர – லட்சுமியின் விருப்பத்துக்கிணங்க காசி, ராமேசுவரம்கூட.

எல்லாம் சக்கர நாற்காலியில் லட்சுமியை உட்கார வைத்துத்தான். மகனும் மருமகளும் மாற்றி மாற்றி வண்டியைத் தள்ள சிறு குழந்தை போல – வாய் கொள்ளாத சிரிப்புடன் வலைய வருகிறாள் அந்த அன்னை.

விமலா மட்டும் மனசுக்குள் தனக்கு ஞானோதயம் அளித்த அளித்த கன்யாகுமரி லாட்ஜ் அறையையும் அந்த அறையின் சின்னஞ் சிறு ஜன்னலையும் அடிக்கடி நினைத்துக்கொள்வதுண்டு!



### யோசனை

ஆரத்தி கரைக்க மஞ்சள் பொடியுடன் சுண்ணாம்பு கலக்க வேண்டும். ஆனால் பல வீடுகளில் வெற்றிலை போடும் பழக்கம் இல்லை. அதனால் சுண்ணாம்புக்காக அக்கம் பக்கத்தார் வீட்டுக்கோ, கடைக்கோ அந்த வேளைக்கு ஓடவேண்டியிருக்கிறது. என்ன செய்யலாம்?

ரொம்ப சுலபம்! கடுகளவு சோப்பை எடுத்துத் தாம்பாளத்தில் மஞ்சள் நீருடன் கரையுங்கள். செக்கச் செவேல் என்ற மங்கள ஆரத்தி தயாராகிவிடும்!



### யோசனை

முற்றின வெண்டைக்காய்களை விதைகளை அகற்றிக் காம்புப் பகுதியிலிருந்து 2 செ.மீ. நீளத்தில் கத்தரித்து விடவும். நார்த்தங்காய் அல்லது வேறு நீளமான முள்ளுடன் இருக்கும் குச்சியில் ஒவ்வொரு முள்ளிலும் கத்தரித்த ''வெண்டைப் பூ''வைச் செருகி வைக்கவும். நடுவில் ஒரு ப்ளாஸ்டிக் மணியை செருகி வைத்து பூக்களுக்கு கலர் அடித்துப் பூச்சாடியில் வைத்தால் அழகாக இருக்கும்.

-சாரு

சமையல் குறிப்பு

## ராகி கோவா மால்ட்

### தேவையான பொருட்கள் :

ராகி 1 கிலோ
பார்லி 100 கிராம்
சர்க்கரை 50 கிராம்
ஏலக்காய் 10

### செய்முறை :

ராகியை நன்றாக நீரில் ஊறவைத்துச் சுத்தம் செய்த பின் ஆட்டு உரலில் போட்டு நன்றாக அரைத்து அதன் பால் முழுவதையும் எடுத்துக்கொள்ள வேண்டும். அதை ஒரு பாத்திரத்தில் வடிகட்டி எடுத்துக்கொள்ள வேண்டும். அதை அப்படியே ஆடாமல் அசையாமல் வைத்திருந்து அடுத்த நாள் பார்த்தால் நீர் மட்டும் மேலே வந்து இருக்கும். மாவு முழுவதும் அடியில் தங்கி இருக்கும். அந்த நீரை வடித்துவிட்டு மாவை எடுத்து சுத்தமாக வெயிலில் நன்றாக உலர்த்தி எடுக்க வேண்டும்.

பின் பார்லியை லேசாக வறுத்துஅதையும் இடித்துச் சலித்து ராகி மாவுடன் கலக்கவும். பின் 50 கிராம் சர்க்கரையை வறுத்து கொஞ்சம் பிரவுன் நிறம் வந்ததும் எடுத்து ஏலத்தையும் இதையும் நன்றாகப் பொடித்து மாவில் கலக்கவும். பின் டின்னில் போட்டு வைத்துக் கொள்ளவும்.

ஒரு டம்ளர் தண்ணீரை நன்றாகக் கொதிக்க விட்டு ஒரு ஸ்பூன் மாவை நீரில் கலக்கி தேவையான அளவு பால், சீனி சேர்த்து பருகவும். காலை மாலை இரு வேளைகளிலும் காப்பிக்குப் பதிலாக பலவீனமான குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் கொடுக்கலாம். நல்ல பலன் கிட்டும்.

-திருமதி லீலா பாண்டியன்



# அஞ்சனப் பெட்டி!

## பொன்னாங்கண்ணி கண்மை

கண்களில் அடிக்கடி நமைச்சலாக இருக்கிறது என்றாலோ, பார்வை கலங்கி, அடிக்கடி கண்களைத் துடைத்துக்கொள்ள வேண்டியிருந்தாலோ கீழ்க்கண்ட முறையில் கண்மை தயாரித்துப் படுக்கப் போகு முன் கண்களுக்கு இட்டுக்கொண்டால் குணம் தெரியும்.

கண்மை தயாரிக்கும் முறை: பொன்னாங்கண்ணி இலைகளைப் பறித்து நன்றாகத் தண்ணீரில் அலசி, ஈரம் காய்ந்த பின்னர் சுத்தமான உரலில் போட்டு நன்கு இடித்து சாறு எடுத்துக்கொள்ள வேண்டும். சுத்தமான மெல்லிய வெள்ளைத் துணியை சிறு சிறு சதுரங்களாகக் கிழித்து அந்தச் சாற்றில் முக்கி எடுத்து நிழலிலே காய வைக்க வேண்டும். நன்கு காய்ந்த பிறகு எடுத்து வைத்துக் கொள்ளவும்.

தேவையான அளவு துணியை (பொன்னாங்கண்ணி சாற்றில் தோய்த்தது) திரி போன்று திரித்து விட்டில் காய்ச்சிய பசு நெய்யில் இந்தத் திரியைப் போட்டு மேலே, சற்று உயரத்தில் சிறுமண் பாத்திரத்தை கவிழ்த்துப் பிடித்து எரிய விட வேண்டும்.

பசும் நெய்யில் பொன்னாங்கண்ணி சாறு தோய்ந்த திரி எரிந்து மேலே உள்ள பாத்திரத்தில் கரிய புகை படியும். அந்தக் கரியைச் சேமித்து ஒரு துளி நல்ல விளக்கெண்ணெய் விட்டுக் குழைத்து மைச் சிமிழில் வைத்துக் கொண்டு உபயோகித்து வரவும்.

சிறு குழந்தையிலிருந்தே இந்த முறையில் தயாரித்த மையை உபயோகித்து வந்தால் கண் பார்வை தீர்க்கமாக இருப்பதோடு கண் சம்பந்தப்பட்ட தொந்தரவுகளும் இரா.

செய்து பார்த்து எழுதியவர்:
**எஸ். இ. பாத்திமா**



## கலபமாக கருகமணியை வேறு நூலில் கோர்க்க-

தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட முஸ்லிம் சகோதரிகள், பொடி கருகமணியைத் தனித் தனியாக மூன்று நூல்களில் கோத்து மூன்றையும் ஒன்றாக முறுக்கி, ஒற்றை வடமாக்கி, அதன் நடுவில் தங்கமும், பவழமும் சேர்ந்த பூசாந்திரத்தை கோர்த்து மணமான பெண்களுக்குத் தாலியாக அணிவிப்பது அனைவரும் அறிந்ததே! வேறு சில சாதியினரும் இது போல அணிகிறார்கள்.

இதற்கென்று விற்கும் உயர் ரக நூலில் கோர்த்தாலும், நூல் இற்றுப் போய், கருகமணியைப் புதிய நூலில்–ஒன்று ஒன்றாக எடுத்துக் கோர்ப்பது என்பது மிகவும் சிரமமானது. காலவிரயமும் அதிகம் ஆகும்.

மிக சுலபமான, எளிய முறையை வெகு காலமாகக் கடைப்பிடித்து வருகிறோம். அதாவது புதிய நூலின் நுனியையும், அறுந்து போன கருகமணியின் நூல் நுனியையும் (பஞ்சாக இருக்கும்) எதிரும் புதிருமாக வைத்து ஒரு வெள்ளைப் பூண்டின் பல்லை லேசாக நசுக்கி, அந்தப் பூண்டின் சாறை விரலால் தொட்டு, நூலின் முறுக்கு உள்ள பாகத்தை உத்தேசமாகப் பார்த்து திரித்து விடவேண்டும். இரண்டு நூலும் ஒரே நூல் மாதிரி சேர்ந்து கொள்ளும். ஒரு சில விநாடிகளில் உலர்ந்து விடும். பிறகு எடுத்து பழைய நூல் பகுதியிலிருந்து புதிய நூலுக்குக் கருகமணியைச் சுலபமாகக் கடத்திவிட்டு பழைய நூலை வெட்டிவிட வேண்டும். சுமார் 2, 3 நிமிடங்களில் 2 சாண் நீளமுள்ள கருகமணியைப் புதிய நூலில் கோர்த்து விடலாம். இப்படி மற்ற இரு பகுதிகளையும் செய்து முறுக்கினால் புதிய கருகமணி அணிவதற்குத் தயாராகிவிடும். நன்கு கைப் பழக்கமுள்ள பெண்கள் இதற்கு எடுத்துக் கொள்ளும் மொத்த நேரமே 20 நிமிடங்கள் தான்!

**-பாத்திமுத்து**





● அக்டோபர் இதழ் முழுதும் பல்வேறு வகையான பயனுள்ள யோசனைகளும் — துணுக்குகளும் நிறைந்து காணப்பட்டன. 'ஏனோதானோ' என்றில்லாமல் பொறுப்புடன் இல்லத்து மங்கையர்க்குத் தேவையான சங்கதிகளை மங்கையர் மலர் வழங்குவது குறித்து மிகவும் சந்தோஷம்!

பெங்களூர் ப. மூர்த்தி

● பியூன் வீட்டுக் கல்யாணத்துக்குக்கூட வந்துவிடுவார் திரு சங்கர் ஐ.ஏ.எஸ்.! அங்கு கிடைக்கும் ராஜ உபசாரத்தையும், முக்கியத்துவத்தையும் அனுபவிப்பதில் உள்ள சுகமே அலாதி என்று ஆரம்பமான இதமான, நயமான, நகைச்சுவை எந்தவிதமான தடங்கலும் இன்றி, நான்கு பக்கங்களுக்குத் தொடர்ந்து இனிதே முடிந்தது. ஆசிரியை ரமாமணி சுந்தர் (வரதட்சிணை வராத திருமணம்!) நிச்சயம் பாராட்டுக்களுக்கு உரியவர்!

நந்தனம் சி. பூபால் சிங்

● மங்கையர் மலர் விளம்பரங்களில் வெளியிடும் கோலங்கள் 'பளிச்'சென்று புதுமையாக இருப்பதைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

பெங்களூர் லட்சுமி குமார்

● 'காதல் என்பது புனிதமானது. அதை அனுபவித்துத்தான் உணர முடியும்...' என்ற சுந்தரி பாயின் வரிகளைப் படித்தபோது இக்கால இளசுகளின் நடிப்பை நினைத்துச் சிரித்துக்கொண்டேன். உண்மையிலேயே சுந்தரி பாய் போன்றவர்கள் திறனறிந்து, செயலறிந்து, பாத்திரமறிந்து நடித்துள்ளார்கள். அதனால்தான் அவர்கள் பெயரும் புகழும் இன்றும் போற்றும் வகையில் உள்ளது.

பெங்களூர்-1 அரசு

● 'பிரசவம் ஆனவுடனே வேலை செய்யலாமா கூடாதா?' என்று பலரிடம் யோசனைகள் கேட்டுக் குழம்பிப் போகும் பெண்களுக்குக் கிடைத்த அருமையான சுவையான பிரசாதம்தான் ''பிரசவம் ஆன உடனே வேலை செய்யலாமா?'' என்ற நரசிம்மனின் கட்டுரை. பெண்கள் ஒவ்வொருவரும் கட்டாயமாகப் படிக்க வேண்டிய கட்டுரை.

மேட்டுப்பாளையம் மு. கல்யாணசுந்தரம்

● என்னைப் போன்ற இடியாப்பப் பிரியர்களுக்குத் திமர் இடியாப்ப யோசனை மிகவும் மகிழ்ச்சி தருகிறது. சென்ற முறை இடியாப்பம் செய்யும் உழக்குடன் சண்டை போட்டு என் தோள்கள் வலியெடுத்துவிட்டன. இத்தனைக்கும் உழக்கு நகராமல் பிடித்துக்கொள்ள இரண்டு பேர் உதவிக்கு. அதிலிருந்து வீட்டில் இடியாப்பம் கேட்டால் காத தூரம் ஓடுகிறார்கள். யோசனைக்கு நன்றி.

சங்கரன்கோவில் என். குருநாதன்

● விழிப்பு கதையில் ராகவனுக்குக் கடிதம் அப்படி என்ன அக்கறை மங்கையர் மலர் ஆசிரியருக்கு? ஏதாவது காதில் கழுத்தில் இருந்ததா?

● நம்பினால் நம்புங்கள், நம்பாவிட்டால் விடுங்கள்... 'டக்'கென்று அட்டையைப் பார்த்ததும், சகோதரியுடன் அமர்ந்திருக்கும் வித்யாவை, நடிகை சுந்தரி பாயின் இளம் வயதுத் தோற்றம் என்று நினைத்து ஏமாந்தேன்! முகத் தோற்றத்தில் ஒற்றுமை தோன்றுகிறது இல்லே?

நயினார்பாளையம் என். தேன்மொழி



# ஹோமியோபதியும் குழந்தைகளும்!



எம்.வி.எல்.நரசிம்மன்

ஹோமியோபதி முறை நிகற்றது: நிச்சயமான பலனைத் தரக்கூடியது: அப்போதைக்கு நிவாரணம் கொடுத்துவிட்டு மறுபடியும் வியாதியைக் கொண்டு வந்துவிடும் என்ற நிலைமை அதற்கு இல்லை என்பதை ஏற்கனவே கூறியுள்ளேன். இப்படிப்பட்ட வைத்திய முறைதானே குழந்தைகளுக்கு ஏற்றதாக இருக்க வேண்டும்? ஏற்கனவே வந்துள்ள கட்டுரைகளைப் படித்த பல தாய்மார்கள் வீடுகளில் அவசரத்துக்குத் தயாராக என்னென்ன மருந்துகளை வாங்கி வைத்துக் கொள்ளலாம் என்று கேட்டுக் கடிதம் எழுதியிருக்கிறார்கள்.

ஒவ்வொரு வீட்டிலும் ஹோமியோபதி மருந்துப் பெட்டகம் இருப்பது அவசியம். முக்கியமாக குழந்தைகள் உள்ள இல்லங்களில் அவ்வாறு இருப்பது மிக மிக அவசியம். குழந்தைகள் தங்களுக்கு உள்ள வியாதியை, வேதனையை, வலியை என்னவென்று விளக்கமுடியாத நிலையில் உள்ளவை. ஆகவே குழந்தைகளின் அழுகையையோ செய்கைகளையோ கவனித்து நாம்தான் மருந்து கொடுக்க வேண்டும்.

குழந்தை 'வீல்வீல்' என்று கத்துகிறது. தோளில் தூக்கி வைத்துக் கொண்டால் அழுகையை நிறுத்துகிறது. கீழே விட்டால் மீண்டும் கத்தத் தொடங்குகிறது என்று கூறிக்கொண்டே குழந்தையை எடுத்துக் கொண்டு ஒரு தாய் வந்தாள். இந்த மாதிரி அறிகுறி உள்ள குழந்தைக்கு Chamomilla என்ற மருந்தைக் கொடுக்க வேண்டும். இது விசேஷ அறிகுறி. அந்த மருந்தை அக் குழந்தைக்கு அங்கேயே வாயில் போட்டேன். பத்தே நிமிடத்தில் குழந்தை சரியாகி விட்டது. நன்கு விளையாடத் தொடங்கி விட்டது.

இதே போல், இரண்டு மூன்று நாட்களாக குழந்தை மலம் கழிக்கவே இல்லை, ஒரே கவலையாக இருக்கிறது என்று ஒரு தாய், குழந்தையைக் கொண்டு வந்தாள். Broyonia என்ற மருந்தைக் கொடுத்தேன். அரை மணி நேரத்தில் குழந்தைக்கு மலம் பிரிந்தது. குழந்தையும் நன்கு தூங்கத் தொடங்கி விட்டது.

இதேபோல குழந்தை அளவுக்கு அதிகமாகச் சாப்பிட்டு விட்டது. அஜீர்ணத்தால் வாந்தி எடுக்கிறது என்றால் Antim Crud என்ற மருந்தைக் கொடுத்தால் உடனடி நிவாரணம் கிடைக்கும்.

உணவில் ஏதோ விஷப் பொருள் கலந்து விட்டது. 'கலாய்' பூசாத பாத்திரத்தில் சமைத்தாலோ, சமைத்த சமையலை வைத்தாலோ உணவு விஷமாகி விடுகிறது. இந்த உணவை உட்கொண்டால் குழந்தைகளுக்கு வயிற்றுக் கோளாறு உண்டாகி மலச்சிக்கலும் ஏற்படும். அந்த நேரத்தில் Alumina என்ற மருந்தைக் கொடுக்க வேண்டும். குழந்தை ரொம்பவும் கஷ்டப்படுகிறது என்றால் இந்த மருந்தை திரவக் கரைசலாக வைத்துக் கொண்டு ஒரு மணிக்கு ஒரு முறை சிறிது சிறிது கொடுக்க வேண்டும்.

நிறையக் குழந்தைகளுக்கு இருக்கக் கூடிய இன்னொரு கோளாறு டான்ஸிலைடிஸ் என்று கூறப்படுகிற தொண்டை அடைப்பு. இப்படிப்பட்ட கோளாறு உள்ள குழந்தைகளுக்கு அடிக்கடி ஜலதோஷம் பிடிக்கும். தொண்டையில் விழுங்க முடியாமல் வலி இருக்கும். காது வலி இருக்கலாம். தலைவலி, முதுகு வலி ஏற்படலாம். வாயில் துர்நாற்றம்வீசும். நல்ல காய்ச்சலும் இருக்கலாம். சில சமயங்களில் தொண்டையில் பார்த்தால் வெள்ளை வெள்ளையாக (லேசாக மஞ்சளாகவோ) புள்ளிகள் தெரியும். புண் புரையோடி இருப்பதற்கு இதுவே அடையாளம். அந்தக் குழந்தை வாயினால் சுவாசம் செய்யும்.

இப்படிப்பட்ட கோளாறு வந்தால் ஆபரேஷன் செய்து Tonsilsஐ அகற்றிவிடுவது வழக்கமாக இருந்து வருகிறது. ஆனால் சமீப காலமாக அலோபதி மருத்துவர்களே



ஆபரேஷனால் ஏற்படக்கூடிய பாதகத்தை உணர்ந்து ஆபரேஷன் கூடாது என்று சொல்லத் தொடங்கியிருக்கிறார்கள். உண்மையில் Tonsils என்கிற உறுப்பு மனிதனின் தொண்டையில் இயற்கை அமைத்துக்கொடுத்துள்ள அரண் என்றே சொல்லலாம். வியாதிக் கிருமிகள் விரைவில் உட்புகாமல் தடுக்கும் பணியை இந்த அரண் செய்கிறது. இந்த அரணை நீக்கிவிட்டால் நோய்க் கிருமிகளுக்குக் கட்டியம் கூறி வரவேற்புக் கொடுப்பது போல் ஆகிவிடும். ஆகவே தான் இதை அகற்றக் கூடாது. ஆபரேஷன் கூடாது என்பதில் ஒருமித்த கருத்து மருத்துவத் துறையில் உருவாகி வருகிறது.

இந்தக் கோளாறைச் சரிசெய்ய ஹோமியோபதியில் அற்புதமான மருந்துகள் உள்ளன. இதுவரை நான் சிகிச்சை அளித்த நோயாளிகளில் பாதிக்கு மேற்பட்டவர்கள் இந்த நோயினால் அவதிப்பட்ட குழந்தைகள் அனைவருக்குமே ஹோமியோபதி மூலம் என்னால் குணமளிக்க முடிந்திருக்கிறது என்பதைப் பெருமையோடு சொல்லிக் கொள்கிறேன்.

இந்தக் கோளாறு ஆரம்ப கட்டமாக இருந்தால் Baryta Carb என்ற மருந்தை வைத்தே முற்றிலும் குணமாக்கிவிடலாம்.



காய்ச்சலுக்கு Aconite என்ற மருந்தைக் கொடுத்துச் சிகிச்சையைத் தொடங்க வேண் வேண்டும்.

என்னிடம் சிகிச்சைக்கு வந்த 12 வயதுச் சிறுவன் ஒருவனுக்குத் தொண்டை பூராவையும் அடைத்துக் கொண்டு இந்த சதை வளர்ந்திருந்தது. ஆறு மாத காலம் இடைவிடாத சிகிச்சைக்குப் பின் அவனது தொண்டை சாதாரண நிலையை அடைந்தது. இன்று அவன் ஐஸ்கிரீமும் ஐஸ் வாட்டரும் சாப்பிட்டாலும் ஒன்றும் ஆவதில்லை.

தொண்டைப் புண்ணில் சீழ் பிடித்திருந்தால் Hepar Sulph என்ற மருந்தைக் கொடுக்க வேண்டும்.

இந்த Tonsilit s காரணமாக ஆஸ்துமா என்ற நோய் ஏற்படக்கூடிய வாய்ப்பும் உண்டு. ஆஸ்துமா நோயாளி ஒருவருக்கு டான்ஸிலிடிஸுக்கு மருந்து கொடுத்து அது சரியானவுடன் ஆஸ்துமாவும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்ட அதிசயத்தை நானே பார்த்திருக்கிறேன்.

இந்தக் கோளாறுக்குக் காய்ச்சல், தொண்டைக் குத்தல், வலி என்பன போன்ற இதர அறிகுறிகளைக் கருத்தில் கொண்டு Belladona, Calccorb, Lycopodium முதலிய மருந்துகளையும் பயன் படுத்த வேண்டும்.

---

## மாமிசம் சாப்பிடுவது பற்றி...

மாமிசத்துக்காக விலங்குகள் கொல்லப்படும்போது அவை பயத்தினால் மிரண்டு சாகின்றன. இந்தப் பயம் காரணமாக அவற்றின் உடலில் தீவிர ரசாயன மாற்றம் ஏற்படுகிறது. விவரமறியாதவர்கள் இதைச் சாப்பிடுவதால் உடலுக்குத் தீங்குதான்.



—டாக்டர் ஹென்றி டால்பட்

**ஸ்ரீ**மான் ராமையா சர்க்கார் உத்தியோகம் ஒன்றுக்கு மனுப் போட்டார். எம்.ஏ. பரீட்சையில் நிறைய மார்க் வாங்கியிருக்கப் போய்ப் பேட்டிக்குக் கூப்பிட்டார்கள். 'நியூயார்க்கில் இருக்கும் தந்திக் கம்பங்களின் எண்ணிக்கை என்ன?' 'ஆஸ்திரேலியப் பழங்குடிகளின் சராசரி உயரம் என்ன?' போன்ற புத்திசாலித்தனமான கேள்விகளுக்கு அவர் டாண் டாணென்று பதிலளிக்கப்போய் உத்தியோக உத்தரவு தந்தார்கள் — ஆனால் ஒரு நிபந்தனை. அவர் மெடிகல் பரீட்சை தேறியாக வேண்டும்.

மெடிகல் பரீட்சைக்குத் தன்னம்பிக்கையுடன்தான் சென்றார் ராமய்யா. டி.எம்.ஒ. ஸ்தானத்தில் வீற்றிருந்த அழகிய வனிதையைக்கண்டதும் கொஞ்சம் சங்கடப்பட்டார். அந்த அம்மாள் அவரை ஒரு தனி அறைக்கு அழைத்துச் சென்று சட்டையைக் கழற்றச் சொன்னபோது ராமையாவுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. தொடர்ந்து 'பாண்டை'யும் கழற்றும்படி அம்மாள் உத்தரவு இடவும்,—ராமையா மெடிகல் பரீட்சையை அப்படியே அந்தரத்தில் விட்டு விட்டு வீட்டிற்கு ஓடிவிட்டார். இனி சர்க்கார் வேலைக்கு மனுப் போடுவதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டார்.

'ஆபத்தில்லாத' கல்லூரி வேலைக்கு மனுப் போட்டார். விரிவுரையாளர் வேலை கிடைத்தது. மெடிகல் பரீட்சை உண்டா என்று முன்னெச்சரிக்கையுடன் விசாரித்துக்கொண்டார். 'குடும்ப டாக்டரிடமிருந்து ஒரு 'சர்டிபிகேட்' கொண்டு வந்தால் போதும், என்றார்கள் கல்லூரி நிர்வாகிகள்.

அந்தக் கல்லூரியில் ஆண்பிள்ளைகள் மட்டும்தான் படித்துவந்தார்கள் என்று தெரிந்ததில் ராமையாவுக்குப் பரம திருப்தி. ஒரு வருடம் பெண்கள் தொல்லை எதுவுமின்றி வாழ்ந்தார் கல்லூரியில் அடுத்த வருடத்தி

# கண்களே, பெண்களைப் பார்க்காதே!



ஜெயா பாலசுப்ரமணியன்

லிருந்து பெண்களைச் சேர்த்துக் கொள்ளப் போகிறார்கள் என்ற செய்தி மற்ற இளம் ஆசிரியர்களுக்கெல்லாம் ஜாங்கிரியாட்டம் இனித்தது. ஆனால் ராமையாவைக் கவலை வாட்டித் தின்றது. வகுப்பு நடக்கையில் எப்படியாவது சமாளிக்கலாம். ஆனால் வகுப்பு முடிந்த பின் 'பாடத்தில் சந்தேகம்' என்று பெண்கள் பட்டாளம் தன்னை முற்றுகையிட்டால் என்ன செய்வது? அந்தக் காட்சியைக் கற்பனை செய்து பார்த்தபோதே ராமையாவுக்குப் பாதி உயிர் போய்விட்டது.

கனவிலிருந்து விடுபட்ட ராமையா கல்லூரிக்கு விரைந்தார். மற்ற இளம் ஆசிரியர்கள் கன குஷியாக இருந்தார்கள்.

''மிஸ்டர் ராமையா, இனிமேல் உம்ம லெக்சர் பிரமாதமாக அமையும்?''

''ஏன்?''

''பெண்கள் வகுப்பில் இருந்தால் யாருக்குத்தான் குஷி கிளம்பாது?''

ராமையா பதில் சொல்லவில்லை.

''என்னங்காணும் ராமையா தந்திக் கம்பமாட்டம் நிற்கிறீர்? புதுசாக டிரெஸ்லாம் தைக்கக் கொடுத்து விட்டீரா? இந்தப் பத்தாம் பசலி டிரெஸ்ஸை யெல்லாம் எவனாவது குடுகுடுப்பைக்காரனுக்குத் தந்துவிடும்''

கல்லூரி திறந்தது. மாணவர்கள் எல்லாம் ரொம்ப ரொம்ப ஜாலியாக இருந்தார்கள். கண்ணுக்குக்குளிர்ச்சியாகஎத்தனை பெண்கள். சிலர்ஸாரியில்ஒயிலாகக்காட்சியளித்தார்கள். சிலர் அசல் ஆண்பிள்ளைகளாட்டம் முழுக் கைச்சட்டையும் பாண்டும் அணிந்தபடி, அழகெல்லாம் தெரிய வராண்டாவில் மேலும் கீழும் உலாவினார்கள். சிலர் ஜெயராஜ் சித்திரங்களை விட அழகாய் இருந்தார்கள். சிலர் முதுகெல்லாம் தெரிய சைக்கிளில் பறந்தார்கள். இத்தனை நாளும் தூங்கி வழிந்து கொண்டிருந்த கல்லூரிக் கட்டிடம் பட்டாம்பூச்சிகள் பறப்பது போல் புது ஒளியுடன் திகழ்ந்தது. பியூன் ஜயாவு முகத்தில் கூடப் பழைய சிடுசிடுப்பில்லை. ராமையா என்ற ஒரே ஒரு அப்பாவி ஆத்மா மட்டும் தனியாய்த் தவித்தது.

கல்லூரிப் பிரின்ஸிபால் திடீரென்று ஒரு பெரிய குண்டைத் தூக்கிப் போட்டார்.

''மிஸ்டர் ராமையா!''

''ஸார்...''

''உமக்கு ஒரு புதுப் பொறுப்புத் தரப் போகிறேன்.''

''ஆகட்டும் ஸார். கல்லூரிக்கு உழைப்பதை நான் பெருமையாகக் கருதுகிறேன்.''

''நம் கல்லூரியில் பெண்களின் எண்ணிக்கை அதிகமாகி விட்டது.''

''ஆமாம் ஸார்.. இவர்களுக்கென்று தனியாக ஒரு கல்லூரி தொடங்குவது நல்லது.''

''நான் சொல்ல வந்ததை நீர் காதில் போட்டுக் கொள்ளவில்லை.''

''சொல்லுங்கள் ஸார்.''

''பெண்களுக்குத் தனியாகஒரு ஹாஸ்டல் ஏற்படுத்துவது என்று முடிவு செய்திருக்கிறோம்.''

''நல்லது ஸார்.''

''அதற்குப் பொறுப்பான ஒரு வார்டன் தேவை. அந்தப் பொறுப்பை உம்மிடம் ஒப்படைக்கலாம் என்றிருக்கிறேன்.''

''நானா ஸார்? எனக்கு வேண்டாம் ஸார்! வேறு யாரையாவது போடுங்கள்.''

''எனக்கு வேறு யாரையும் போடுவதில் விருப்பமில்லை.''

''ஆனால்...''

''ஆனால் கீனல் என்று எதுவும் சொல்லாதேயும். உம்மை வார்டனாகப் போடுவது என்று முடிவு செய்து ட்டேன். இனிமேல் மாற்றுவதற்கில்லை.''

''எல்லோரையும் விட்டு விட்டு என்னை ஏன் ஸார் தேர்ந்தெடுத்தீர்கள்?''

''நீர் குணக்கொழுந்து என்பதால்.''

''விளக்கமாகச் சொல்லுங்கள் ஸார்.''

''மாணவிகளிடமிருந்து எனக்குப் புகார் வந்திருக்கிறது. — நீர் அவர்கள் பக்கம் திரும்பாமல் லெக்சர் செய்வதாக! மற்ற இளம் ஆசிரியர்களில் பலர் மாணவிகளைக் கண்டு பல்லிளிக்க, நீர் மட்டும் முற்றும் துறந்த முனிவராக நடந்து கொள்வதைக் கண்டு நான் பெருமைப்படுகிறேன்.''

---

பம்பாய் ''நிருத்ய கீதாஞ்சலி'' பரத நாட்டியப் பள்ளியைச் சேர்ந்த மாணவி, குமாரி பார்வதி தண்டபாணி, சமீபத்தில் இரண்டு நடன நிகழ்ச்சிகளை நடத்தினார்.

மிகப் பிரசித்திபெற்ற நடன மணியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட குமாரி பார்வதி, பிரசித்தி பெற்ற புலாபாய் மெமோரியல் இன்ஸ்டிடியூட்டின் ''ஸ்காலர்ஷிப்'' பெற்றிருக்கிறார். முறைப்படி நட்டுவாங்கத்தில் தேர்ச்சி பெற்றுள்ள இவர், கர்நாடக சங்கீதமும் தன் குருவிடமே பயின்று வருகிறார்.

''நிருத்ய கீதாஞ்சலி'' மாணவியரின் கலை நிகழ்ச்சி பம்பாய் டெலிவிஷன் நிலையத்திலிருந்தும் ஒளிபரப்பப்பட்டு ரசிகப் பெருமக்களின் சிறந்த வரவேற்பையும் பாராட்டுதலையும் பெற்றுள்ளது.



''எனக்கு இந்தப் பொறுப்பு வேண்டாம் ஸார்.''

''நீர் யார் அப்படிச் சொல்வதற்கு? நமது கல்லூரி மாணவிகள் ஒழுக்கத்தின் நிழலில் வளர்ந்து ஔவையார்களாக ஒளி வீச வேண்டுமென்றால் நீர் வார்டன் வேலையை ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும்.''

ராமையா—வார்டன் வேலையை ஒப்புக்கொண்ட ஒரு மாதம் வரையில் பிரச்னை எதுவும் தோன்றவில்லை. மாணவிகள் அனைவரும் 'மணிப் பெண்'களாகவே நடந்து கொண்டார்கள்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை. ராமையா வார்டன் அறையில் வீற்றிருக்கையில் பெண்கள் பட்டாளமொன்று அவர் அறையை முற்றுகையிட்டது. விடுமுறை தினமாகையால் யாரும் சரிவர டிரஸ் செய்து கொண்டிருக்கவில்லை. திருச்சூரைச் சேர்ந்த தேவயானி பாவாடை பிளவுஸில் காட்சியளித்தாள். பஞ்சாபிலிருந்து இவ்வளவு தூரம் படிப்பதற்காக வந்திருந்த சர்தாரிணி நிரஞ்சன் கௌர் தன் அழகெல்லாம் தெரியும் 'நைட் டிரஸ்'ஸில் வந்திருந்தாள். வேறொருவள் டென்னிஸ் கோர்ட்டிலிருந்து வருகிறாள் போலும்! இப்படியா அசிங்...ங்கமாக அரை நிஜார் அணிவார்கள்?

''என்ன வேண்டும்?'' என்று கம்பீரமாக வினவினார் ராமையா.

''பாலசந்தர் படம் பார்க்க டவுனுக்குப் போக வேண்டும்.''

'பட்டினப் பிரவேசமா? இந்த உடையிலா?' என்று ராமையா கேட்கவில்லை.

''சினிமாவுக்குப் போவதற்கு பிரின்ஸிபால் சம்மதம் வேண்டும்.''

''அவர் ஊரில் இல்லையே!''

''வந்த பிறகு போவது?''

''படம் அதுவரையில் காத்திராது. தவிர, நாங்கள் பதினைந்து ஸீட் 'ரிஸர்வ்' செய்து விட்டோம்.''

''யார் ரிசர்வ் செய்யச் சொன்னது? தியேட்டருக்குத் தகுந்த துணையின்றிப் போக நான் அனுமதிக்க மாட்டேன். நாளைக்கு ஏதாவது வம்பானால் யார் பதில் சொல்வது? மாணவர்கள் வேறு தியேட்டரைப் படையெடுப்பார்கள். உங்களைக் கண்டால் அவர்கள் சும்மா இருப்பார்களா?''.

''அந்தக் கவலை உங்களுக்கு எதற்கு? நாங்கள் கவனித்துக் கொள்கிறோம். எங்களில் இருவருக்கு 'ஜூடோ' தெரியும்.''

''டவுன் பஸ்ஸில் எத்தனை ரௌடிகள் பிரயாணம் செய்கிறார்கள்? நேற்றுக்கூட 'ஈவ் டீஸிங்'குக்காக ரெண்டு பேரை ஜெயிலுக்கு அனுப்பியிருக்கிறார் மாஜிஸ்டிரேட்.''

''நாளைக்கு 'ஆடம் டீஸிங்'கிற்காக நாலு பேரை அனுப்ப வேண்டியிருக்கும். நாங்கள் என்ன இலேசுப்பட்டவர்களா?'' என்று கேட்டு நாக்கைக் கடித்துக் கொண்டாள் ஒரு நங்கை.



**சூரியன் நுழையாத இடத்தில் வைத்தியன் நுழைகிறான்.**

—எஸ். வனஜா

''நீங்களும் சினிமாவுக்கு வாருங்களேன் ஸார். எங்களைக் கண்காணித்த திருப்தியுடன், படம் பார்த்த திருப்தியும் ஏற்படும்''

''ஆனால் அவருக்கு 'புக்'செய்யவில்லையே!''

''போன தடவை பாமாவுக்கு 'புக்' செய்யாமல் போய் 'மானேஜ்' செய்தது போல் செய்யறது'' என்று ஒருவள் கூறவும், அனைவரும் 'கொல்'லென்று சிரித்தார்கள். ஏன் சிரித்தார்கள் என்று ராமையாவுக்குப் புரியவில்லை. கேட்டே விட்டார்! மாணவிகள் மீண்டும் சிரித்தார்கள். இடமில்லாமமல் பாமாவை மாறி மாறி மடியில் வைத்துக்கொண்டோம் என்று சொல்ல யாருக்குத் துணிச்சல்?

''பாமாவுக்கு 'புக்' செய்யாமல் போய் ரொம்பத் திண்டாடி விட்டோம். கடைசியில் அவளை 'காபினி'ல் உட்கார வைத்தார் கொட்டகை முதலாளி.''

''ஸாரையும் காபினில் உட்கார வைக்கலாம்னு சொல்றியா? அடி போடி விஷமக் கொடுக்கு! நம்ம பக்கத்திலேயே ஒரு ஸீட் போடச் சொன்னால் போச்சு!''

''ஸார் ஓரத்தில் உட்கார்ந்தால் நம்மையெல்லாம் எப்படிக் கண்காணிப்பார்?''

''மத்தியில் உட்கார வைத்து நாம் மாறி மாறிக் 'கம்பெனி' தரலாம்.''

ராமையாவுக்கு இந்த ஏற்பாடு பிடிக்கவில்லை. ஆனால் மாணவிகளின் நல்லொழுக்கத்துக்கு மாசு ஏற்படாதபடி காப்பாற்றியாக வேண்டுமே! சினிமாவுக்குக் கிளம்பினார். மாணவிகளுக்கு ஒரே குஷி! 'லாங் லிவ் அவர் வார்டன்!' என்று கோஷம் போட்டார்கள். 'ஸார், நீங்க செஞ்ச உதவிக்குக் கடவுளாகப் பார்த்து உங்களுக்குச் சீக்கிரம் கல்யாணம் பண்ணி வைப்பார்' என்று தைரியமாக—ஆசீர்வதித்தாள் ஒரு பி.ஜி. மாணவி.

பெண்களுக்கு மத்தியில் உட்கார்ந்த தன்னைப் பார்த்து சினிமாக் கொட்டகையே சிரித்தது போல் ராமையாவுக்குத் தோன்றியது. மாணவர்களில் சிலர் பின்னாலிருந்து சீட்டி அடித்தார்களோ?

விளக்கு அணைந்தவுடன் பெண்கள் தங்கள் வாலுத்தனத்தைத் தொடங்கினார்கள். ஒருவன் ராமையாவின் கையைத் தொட்டு 'காட்

பரிஸ்' தந்தாள். இன்னொருவன் ஏதோ காதல் காட்சியை ரசித்துவிட்டு, ராமையாவின் முதுகில் 'பாருடி 'என்று ஓங்கிக் குத்திய பின் 'ஸாரி' என்றான். அக்டிகடி இடம் மாறிக் கொண்டிருந்த பெண்களின் உடம்பு தன் மீது பட்டபோதெல்லாம் ராமையா 'ராம ராம' சொல்லத் தவறவில்லை. இரண்டு பக்கங்களிலும் மாறி மாறி வீற்று வனிதைகளின் உடம்பு தன்மீது படாமலிருக்க ராமையா 'உட்டியாணா' 'நவுலி' முதலிய யோகாசனங்கள் பயின்றார்!

சினிமா அனுபவத்துக்குப் பின் ராமையாவுக்கு வாழ்க்கையே கசந்து விட்டது. கல்லூரி முதல்வர் அவரை வார்டன் வேலையை விட்டு விலகக் கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார். சினிமாக் கொட்டகைக்குக்கூடச் சென்று மாணவிகளின் ஒழுக்கத்தைக் காப்பாற்றின வார்டனை அவர் விலக அனுமதிப்பாரா என்ன?

இப்பொழுதெல்லாம் மாணவிகள் ராமையாவின் அறையை அடிக்கடி முற்றுகையிட்டார்கள். அவருடைய ஜேபியிலிருந்து பேனாவை உரிமையுடன் எடுத்துக் கொண்டார்கள். எடுத்ததற்கெல்லாம் அவர் கையைப் பிடித்துக் குலுக்கு குலுக்கு என்று குலுக்கினார்கள்.

கடைசியில் ராமையா ஒரு தீர்மானத்துக்கு வந்தார். 'வார்டன்' வேலையிலிருந்து விடுதலை கிடைக்க அந்த ஒரு வழிதான் அவருக்குப் புலப்பட்டது. வியாதியை முறியடிக்க விஷத்தைப் பயன்படுத்துவது போல், வார்டன் வேலையிலிருந்து விடுதலை கிடைப்பதற்காக அவர் கல்யாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்தார். மனைவி என்று ஒருவள் வந்து விட்டால் ஹாஸ்டலில் பெண்களுடன் வாழும்படி கட்டாயப்படுத்த முடியாதல்லவா?

அம்மாவுக்கு ஒரே சந்தோஷம். எங்கே பிள்ளை வாழ்நாள் முழுவதும் ரிஷ்யசிருங்கராக இருந்து விடுவானோ என்று அஞ்சிக் கொண்டிருந்தவளுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. ராமையா குறிப்பிட்டிருந்த 'அடக்கமான, கவுன் கிவுன் போட்டுக்கொள்ளாத' கர்நாடகப் பெண்ணைத் தேடும் பணியில் இறங்கினாள்.

ஒரு பெண்ணை பௌடர் போட்டுக் கொள்கிறது என்ற காரணத்துக்காக நிராகரித்து விட்டார். இன்னொரு பெண்ணின் கொழுந்தன் மனைவி பரத நாட்டியம் ஆடுவாளாம். எங்கே அந்தக் காற்று இந்தத் திசையிலும் வீசிவிடுமோ என்று அஞ்சி அந்தப் பெண்ணையும் மறுத்து விட்டார். இன்னொரு பெண் பத்து வயது வரையில் கவுன் அணிந்த குற்றம் புரிந்திருந்தாள். அந்தப் பாழாய்ப் போன கவுன் ஆசை மீண்டும் தலைதூக்காது என்று என்ன நிச்சயம்?

கடைசியில் அம்மாளு என்ற பாவையை மணப்பது என்று தீர்மானித்தார் ராமையா. அவள் காலேஜ் பக்கம் தலை வைத்துப் படுத்தது கூடக் கிடையாது. ரயிலில் ஒரே ஒரு தடவைதான் பிரயாணம் செய்திருந்தாள். ஐஸ்கிரீம், பீச் மெல்பா போன்ற வார்த்தைகள் அவள் அகராதியில் கிடையாது. வற்றல் குழம்பு செய்வதில் 'எக்ஸ்பர்ட்' என்று மூன்று பாட்டிகள் 'சர்டிபிகேட்' தந்திருந்தார்கள். வீட்டு வேலைகள் அத்தனையும் மனப் பாடம்.

கல்யாணம் முடிந்த மூன்றாம் நாள் ராமையா அப்பொழுதுதான் காலேஜிலிருந்து திரும்பி வந்திருந்தார். தனிக் குடித்தனம். 'ஸ்வீட்' வாசனை மூக்கைத் துளைத்தது. மற்றவர்களைப் போல் அடுக்களைக்குள் ஓடி... புது மனைவியின் இடுப்பை வளைத்து... அப்படி ஏதுவும் தவறாகச் செய்து விடவில்லை ராமையா! கூடத்திலிருந்த ஸ்டூலில் வீற்றிருந்தார்.

''உங்கள் சட்டையையும் பனியனையும் கழற்றிப் போடுங்கள்'' என்றகுரல் கேட்டது. 'உங்கள் கால் சராயையும்தான்' என்ற உத்தரவு பிறந்தது.

ராமையாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அப்பொழுது மணி ஐந்து. பக்கத்து வீட்டிலிருப்பவர்கள் காதில் விழுந்தால்என்ன நினைப்பார்கள்? எல்லாப் பெண்களும் இப்படித்தானோ? சே, சே, ஏமாந்து விட்டோமே!

''விழுப்போட..ஏன் உட்கார்ந்திருக்கிறீங்க? எல்லாவற்றையும் கழற்றி விட்டீர்களா? இப்படி வீசி எறியுங்கள். குழாயில் தண்ணீர் கொட்டுகிறது. கையோடு துவைத்துப் போடுகிறேன்!''

---

உப்பு மனித குலத்தின் சத்துரு. அது கரோனரிஸ் பிணியையும் உண்டாக்கும். அதிக உப்பு உண்ட பெண்களின் கூந்தல் சீக்கிரமாக நரைத்து விட வாய்ப்புண்டு. உப்பைக் குறைத்தால் இளமையை பெறலாமாம். —எஸ். வனஜா



குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

# நீங்கள் புட்டிப்பால் கொடுக்கும் அவசியம் நேரும்போது கவனமாய் இருங்கள்.

## கீழ்க்காணும் 5 முக்கியமான குறிப்புகளைப் பின்பற்றுங்கள்...

**1.** தொற்று கிருமிகளைத் தவிர்த்திடும் வகையில் பீடிங் பாட்டில், நிப்பிள், மற்றய பாத்திரங்கள் ஆகியவற்றை நன்கு சுத்தம் செய்து நீரிலிட்டுக் கொதிக்கச் செய்யவும். இல்லையெனில் பாலில் எளிதில் கிருமிகள் தோன்றிவிடும்.

**2.** நீரை பத்து நிமிடம் கொதிக்க வைத்து, உடல் வெப்பத்தைவிட சிறிது அதிகமாகவே ஆற வைத்த பின் பால் பவுடரைக் கலக்கவும்.

**3.** அதிக நீரை கலந்திடாதீர்கள், அதனால் சத்து குறைந்து விடலாம். டின்னின் மேல் கொடுத்துள்ள பால் புகட்டும் அட்டவணையைப் பின்பற்றவும்.

**4.** ஒவ்வொரு முறையும் குழந்தைக்குப் புதிதாக பாலைத் தயாரிக்கவும். மீந்துவிட்ட பாலை குழந்தைக்கு கொடுக்காதீர்கள், அதில் கிருமிகள் தோன்றி கெட்டுவிடுகிறது.

**5.** டின்னின் மேல் கொடுத்துள்ள எல்லா விதிமுறைகளையும் பின்பற்றவும். ஏதாவது சந்தேகம் இருப்பின் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.

### வாங்குவீர் க்ளாக்ஸோ சன்ஷைன்—நம்பகமான குழந்தைப் பாலுணவு

க்ளாக்ஸோ சன்ஷைன் சரிவிகித ரீதியில் சரியான அளவு புரதம், கொழுப்பு, கார்போஹைட்ரேட், வைட்டமின்கள், தாதுப்பொருட்கள், இரும்புச்சத்து போன்றவற்றைக் கொண்டது. இது சுகாதார முறையில் தயாரிக்கப்பட்டு, டின்னில் அடைக்கப் படுகிறது. குறிப்பாக குழந்தைகளின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்றது.




க்ளாக்ஸோ

—தாய்மார்களின் நம்பிக்கைக்குரியது.




CASGLS-1R-203 TAM

# 'மிஸ் இந்தியா!'

## —சசிகலா சேஷாத்ரி



''ரமண மகரிஷியின் அருளே என் வெற்றிக்குக்காரணம் எனநம்புகிறேன்'' என்கிறார் இந்த ஆண்டு அகில இந்திய அழகிகள் போட்டியில் மிஸ் இந்தியா வாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள குமாரி சசிகலா சேஷாத்ரி.

"ஈவ்ஸ் வீக்லி'' பத்திரிகையின் சார்பில் பம்பாயில் சில மாதங்களுக்கு முன் நடந்த 'மிஸ் இந்தியா' தேர்வில் முழுமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 17 வயது அழகி சசிகலா சேஷாத்ரி.

புற அழகு உள்ளேயும் மிளிர்வதை சில நிமிடச் சந்திப்பிலும் காண முடிந்தது.

குடும்பச் சூழலும் அப்படி. சங்கீதத்தில் மூழ்கித் திளைத்த பரம்பரை. தாத்தா பி.எஸ். வி. அய்யர் ஐ.ஸி.எஸ். கர்நாடக சங்கீத ரசிகராகவும் போஷகராகவும் இருந்தார். தந்தை பி. சேஷாத்ரி, இந்திய அரசின் ரசாயனத் திட்டம், அபிவிருத்தி நிறுவனத்தின் ஜெனரல் மானேஜராகப் புதுடில்லியில் பணிபுரிந்து வருகிறார். தாயார் சுந்தரி சேஷாத்ரி கலைப் பணியாக நடத்தும் ரசிகா கலை மன்றம் எனும் சங்கீத நடனப் பள்ளி சென்ற இருபது ஆண்டுகளாக தலைநகரில் இயங்கி வருகிறது. சசிகலாவுக்கு சிறு வயது முதலே நடனக் கலை கைவந்தது. பரத நாட்டியம் தவிர, குச்சிபுடி, கதக், ஒடிஸ்ஸி இவற்றிலும் தேர்ச்சி பெற்றார். இந்த நான்கு பிரிவில் முழு நடனக் கச்சேரி செய்யக்கூடிய அளவுக்குத் தேர்ச்சி பெற்றவர் சசிகலா ஒருவர்தான் என்று சொல்லலாம்.

அழகியர் போட்டியில் பங்கேற்க வேண்டும் என்று சசிகலாவுக்கு எப்படித் தோன்றியது?

''ஸ்கூல் ஃபைனல் பரீட்சை முடிந்த பிறகு வீட்டில் சும்மாதான் இருந்தேன். 'ஈவ்ஸ் வீக்லி' அழகுப் போட்டி நடத்துகிறதே, நீயும் சேர்ந்துதான் பாரேன்' என்று என் அம்மதான் தூண்டி விட்டார். என் அக்கா நிர்மலா இதே பத்திரிகை நிறுவனம் 1973ல் நடத்திய போட்டியில் மிஸ் டில்லியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாள்; ஆனால் அகில இந்தியப் போட்டியில் கலந்துகொள்ளவில்லை. இப்போது பம்பாயில் குடித்தனம் நடத்துகிறாள்... அம்மா சொல்கிறாரே என்று விண்ணப்பித்து வைத்தேன். நான் நடன நிகழ்ச்சிகளோடு சரி. என்னை எங்கே அழகியாகப் பொறுக்கப் போகிறார்கள் என்று அசிரத்தையாகத்தான் போனேன். எனக்கே ஆச்சரியம் தாங்கவில்லை. என்னை மிஸ் டெல்லி இளவரசியாக அறிவித்தபோது! அகில இந்தியத் தேர்வுக்கு பம்பாய் போ என்று அனுப்பியும் விட்டார்கள். என்னுள் ஆர்வம் எழுந்தது. சீரியஸாக எடுத்துக் கொண்டு சிறப்பாக வெற்றி பெற முயற்சி செய்யத் தீர்மானித்தேன். பகவான் ரமண ரின் அருளால் மிஸ் இந்தியாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். சர்வதேசஅழகுப்போட்டியில் (Miss International Contest) கலந்து கொள்ள டோக்கியோ கிளம்பிக்கொண்டிருக்கிறேன் (ஆகஸ்ட் இறுதியில்).

அழகுப் போட்டியில் ரமண மகரிஷி எங்கே வந்தார்?

''ரமணா என்றாலே அழகு சொரூபம் தானே!'' என்று பளிச்சென்று பதில் வருகிறது.

ரமண மகரிஷி நூற்றாண்டு விழாவை முன்னிட்டு சென்ற நவம்பரில் சசிகலா டில்லியில் ரமண சித்தாந்தத்தைப் பற்றிய பாடல்களுக்கு ஏற்ப நடனம் செய்தார்.

''புதிய கடினமான பாடல்களுக்கு எப்படி சில நாட்களுக்குள் இசை நடன அமைப்பு உருவாக்கி, எப்போது ஒத்திகை பார்த்துப் பத்து நாட்களுக்குள் எவ்வாறு அரங்கேற்றுவது என்று அம்மா பதைத்துக் கையைப் பிசைந்தாள். நான் திகைத்தேன். விழா அமைப்பாளர்கள் கலை நிகழ்ச்சிகளுக்கு எம். எஸ். சுப்புலட்சுமியையும் பத்மா



பிரஷர் குக்கரின் 'காஸ்கெட்' பழையதாகி ஆவி வருகிறதானால் காஸ்கெட்டை 5 நிமிடம் கொதிக்கும் நீரில் ஊறவைத்து உடன் உபயோகியுங்கள். பழைய காஸ்கெட்டைக்கூட இம்முறையில் ஒரு வாரம் வரை சமாளிக்கலாம்.



சுப்ரமண்யத்தையும் நம்பி யிருந்தார்களாம். கடைசியில் அவர்களால் வர இயலாமல் போய்விட்டதாம். பேராசிரியர் கே. சுவாமிநாதன் அவர்கள் ரமணர் பற்றிய பாடல் பலவற்றை ஆங்கில விளக்கங்களோடு எனக்கு அனுப்பியும் வைத்து விட்டார்.'' என்றார் சசிகலா.

''அந்த ரமணரே சரணம் என்று ஒப்புக் கொண்டோம். பத்து நாட்கள் பம்பரமாய்ச் சுழன்றோம். பாடல்களின் கருத்துக்கள் என்னைக் கவர்ந்தன. என் தாயார் கவனமாக நடன முத்திரைகள் பதிப்பித்தார். நம்பினால் நம்புங்கள், நம்பாவிட்டாலும் பரவாயில்லை. சிறு பிசிறுகூட இல்லாமல் நடன நிகழ்ச்சி வெகு நேர்த்தியாக நடந்தேறியது.''

படிப்பு டில்லி கான்வெண்டுகளில். தமிழ் பேசத் தெரியும். படிக்கத் தெரியாது. கர்நாடக சங்கீதம் தரியும்; அதனால் தமிழிலும் படிக்க எழுத வேண்டும் என்று நிர்மானித்திருக்கிறார். இப்போது பம்பாயில் இங்கிலீஷ் ஆனர்ஸ் சேர்ந்திருக்கிறார். பாட்டு டான்ஸ் வேறு. அழகுப் போட்டி வெற்றியினால் இந்தி சினிமாவில் நடிக்க வாய்ப்பு வர ஆரம்பித்திருக்கிறது. மனோஜ்குமார், தயாரிப்பு ஒன்றில் நடிக்க ஒப்பந்தமும் ஆகியிருக்கிறதாம்.

'அழகுப் போட்டிகள் பெண் இனத்துக்கே அழிவு என்றெல்லாம் சில மாதர் முன்னேற்றஸ்தாபனங்கள்எதிர்க்கின்றனவே, நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?' என்ற கேள்விக்கு சசிகலா தயக்கமில்லாமல் பதில் தருகிறார்.

''இவ்விதப் போட்டிகளினால் பெண்களுக்கு எவ்விதத் தாழ்ச்சியும் இல்லை. இப்போட்டிகளில் வெறும் அழகை மட்டும் எடை போடுவதில்லை. ஒருத்தியின் பூரண எழிற்பாங்கு (total personality and poise) நடையுடை வாகு முதலியவற்றைச் சீர்தூக்கி, பலதுறைகளைச் சார்ந்த சிறந்த கலைஞர்கள்நிர்ணயிக்கிறார்கள். இத்தகைய போட்டிகள் ஒரு பெண்ணின் தன்னம்பிக்கையை வளர்க்க உதவுகின்றன; உற்சாகம் ஊட்டுகின்றன. பெண் என்றால் அடுப்பங்கரையில் உட்கார வேண்டும், இல்லை, வரவேற்பறைஅலங்காரப்பொருளாகவளையவரவேண்டும்என்பதில்லைஅல்லவா பாண்ட்ஸ், ஸ்லாக் போட்டுண்டு ஆம்பிளைப் பசங்க மாதிரி காச் மூச்சுனு கத்திண்டு நடந்துக்கிறதிலேயும் எனக்கு நம்பிக்கை இல்லை.

தம்மைப் பற்றியே ஏதாவது தாழ்வு மனப்பான்மை கொண்ட பெண்கள்தான் இப் போட்டிகளை எதிர்த்துக் கூச்சல் போடுகின்றனர் என்று நினைக்கிறேன்.'' என்கிறார்.

சசிகலாவுக்கு நாட்டியம்தான் முதல் காதல். 'திருமணத்தைப் பற்றி இப்போது சிந்திக்கவில்லை.' என்கிறார் யதார்த்தமாக.

பேட்டி : லா. சு. ரங்கராஜன்



# மறக்க முடியாத டூலா!

லக்ஷ்மி

தென் ஆப்பிரிக்காவில் நான் வேலை செய்த காச நோய் ஆஸ்பத்திரியில் இங்கிலாந்து, ஜெர்மனி, இதாலி, ஹங்கேரி, பெல்ஜியம் என்று பல நாட்டு வைத்தியர்களும் வேலை செய்தனர். இந்தியர், ஆப்பிரிக்கர், வெள்ளைக்காரர் என்று நர்ஸ்களும்கூட பணி செய்த ஒரு கலவையான சூழ்நிலை. எங்கள் தலைவர் எங்கள் ஆஸ்பத்திரியை 'தி யுனைடெட் நேஷன்ஸ்'' என்று வேடிக்கையாக அழைப்பது வழக்கம்.

ஆரம்பத்தில் அந்த ஆஸ்பத்திரியின் அவுட் பேஷண்ட் பகுதியான செஸ்ட் கிளினிக் என்பதில்தான் 'வேலை' பார்க்கத் துவங்கினேன். ஆஸ்பத்திரி வார்டுகளில் வேலை செய்வதற்கும் அவுட்பேஷண்ட்டில் வேலை பார்ப்பதற்கும் நேரமும் சில சலுகைகளும் வித்தியாசப்பட்டன.

அவுட் பேஷண்டில் காலை ஏழு மணி முதல் மாலை நாலரை வரை தொடர்ந்து இடையில் தேநீர் சாப்பிடும் நேரம் – உணவு நேரம் போக மூச்சு விடாது வேலை செய்து கொண்டே இருக்க வேண்டும். தினசரி எட்டு மணிக்கு மேல் செய்யும் கடும் உழைப்புக்குப் பின் வார இறுதியான சனிக் கிழமை ஞாயிறு விடுமுறை நாட்கள். கிளினிக்கை இழுத்து மூடிவிடுவார்கள். மற்ற விடுமுறை நாட்களிலும் அங்கு பணி செய்யும் டாக்டர்களுக்கு ஓய்வு.

ஆனால் வார்டு பணி தினசரி ஒருசில மணி நேரம்தான் இருக்கும். மீதிப் பொழுதை டாக்டர்கள் ஆஸ்பத்திரியின் பொது ஹாலில் பத்திரிகை – புத்தகங்கள் படித்துக்கொண்டு ஒலிபெருக்கியில் வார்டு நர்ஸ் அழைத்தால் ஒழிய எழுந்திருக்காது உட்கார்ந்திருக்கலாம். ஆனால் எமர்ஜென்ஸியில் உதவ வேண்டும். அடிக்கடி வரும் அறுவைச் சிகிச்சைக்கு அவரவர்கள் முறை பொது ஸ்பெஷலிஸ்ட் ஸர்ஜனுக்கு உதவ வேண்டும். வாரத்துக்கு ஒரு நாள் இருபத்து நான்கு மணி நேரம் வார்டுகளின் பொறுப்பை ஏற்க வேண்டும். மாதத்துக்கு ஒரு முறை இரவு பணி வேறு. நல்ல ஆழ்ந்த தூக்கத்தில் ஆஸ்பத்திரியிலிருந்து எமர்ஜன்ஸிக்கு அழைப்பு வரும். எழுந்து ஓட வேண்டும். கொட்டும் மழையானாலும் சரி... வெடவெடவென்னும் குளிரானாலும் சரி. காரை எடுத்துக் கொண்டு நடு இரவில் ஆஸ்பத்திரிக்கு ஓட வேண்டிய இந்தப் பணியை சில டாக்டர்கள் விரும்பியதில்லை.

அவர்கள் மெல்லத் தலைவரிடம் கேட்டுக் கொண்டு அவுட்-பேஷண்டுக்கு மாற்றிக் கொண்டு வந்துவிடுவது வழக்கம். பாரபட்சம் காட்டாது எங்கள் தலைவர் ஆஸ்பத்திரிப் பணியில் இத்தனை காலம் அவுட் பேஷண்டில் இவ்வளவு காலம் என்று வைத்தியர்களை மாற்றுவதும் உண்டு.

என் அதிர்ஷ்டம் நான் துவக்கத்திலேயே செஸ்ட் கிளினிக்கில்தான் வேலையை ஆரம்பித்தேன். என் வீட்டையும் கவனித்துக் கொண்டு வேலையும் செய்ய அந்த வாய்ப்பு மிகவும் வசதியாக இருந்தது.

ஒரு நாள் தேனீர் விருந்தின்போது வைத்தியர்களுக்குள் ஒரு கிசுகிசு.

டூலா ஆஸ்பத்திரியிலிருந்து இன்று இங்கே வந்து வேலையில் சேரப் போகிறாளாம்.

டூலா என்பவள் அப்படி என்ன ஒரு பயங்கரவாதி... இவர்கள் அவள் வரவைக் கண்டு அச்சப்படுகிறார்கள். என்னுள்ளே அதிசயித்துக்கொண்டிருந்தபோது வராந்தாவிலே டக் டக் என்று குதிகால் பாதணி ஓசை கேட்டது.

உயரமாக மெலிந்த தோற்றத்தில் தன் பொன்னிற முடியை வாரி உயரக் கொண்டை போட்டுக் கொண்டு முழங்கால் வரை தொங்கிய பிராக்கின் மீது ஆஸ்பத்திரிக் கோட்டை போட்டு மூடிக் கொண்டவளாக புயலாக... எங்கள் அறைக்குள்ளே வந்து நின்றாள், நாற்பது வயது வெள்ளைக்காரப் பெண்மணி ஒருத்தி. அவளது கோட்டுப் பையிலிருந்து ஸ்டெதாஸ்கோப் எட்டிப் பார்த்தது.

''மன்னிக்க வேண்டும். என் வார்டை ஏற்றுக்கொள்ள வந்த டாக்டரிடம் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லி, வார்டு பணியை ஒப்படைத்து விட்டுக் கிளம்ப நேரமாகி விட்டது....'' என்று படபடவென்று பொதுவாகப் பேசிவிட்டுத் தன் நீல விழிகளை என் பக்கம் திருப்பினாள்.

என்னவோ என்னைக் கண்டதும் அவள் முகத்தில் மகிழ்ச்சி நிறைந்ததொரு புன்னகை ஒளிவிட்டது.

''என் பெயர் டூலாகெர்ட்ரூட் பிளமிங். பெனிசிலினைக் கண்டுபிடித்த அலெக்ஸாண்டர் பிளமிங்குக்கு நான் எந்த வகையிலும் உறவில்லை.'' சிரித்துக்கொண்டே என் கைகளைப் பிடித்துக் குலுக்கினாள்.

''ஆப்பிரிக்க மொழியில் டூலா என்றால் வாயை மூடு என்று அர்த்தமாம்! கேள்விப் பட்டிருப்பீங்க'' என்று வேடிக்கையாகக் கூறிகொண்டே என்னை அறிமுகப்படுத்திக்கொண்டேன்.

''தெரியும்... அந்த அர்த்தம் ஒருவகையில் எனக்குப் பொருந்தும். ஏனெனில் நான் கொஞ்சம் அதிகமாகவே பேசிக் கொண்டிருப்பேன். சிலருக்குப் பிடிக்காது'' என்றாள்.

பொது அறையில் இருந்த அத்தனைபேரும் சிரித்து விட்டனர். சிரிப்பும் பேச்சுமாக அவள்

எங்களுடன் வேலை செய்யக் கலந்துகொண்டாள்.

பின்னர்தான் டுலா என்ற பெயரைக் கேட்டதும் ஒரு சுழல் காற்றுப் புயலைச் சந்தித்து விட்டதுபோல் மற்றவர்கள் அஞ்சிய மர்மம் புலனாகியது.

தவறுகளைக் கண்டுவிட்டால் நான்கு பேர் மத்தியில் போட்டு உடைத்துவிடும் ஒரு வெளிப்படையான குணம் அவளுக்கு. அதைக் கண்டுதான் அவளை முன்னதாகவே தெரிந்து கொண்டிருந்த வைத்தியர்கள் கொஞ்சம் பயந்தனர்.

''அப்படி உங்களிடம் மட்டும்சர்ப்பு என்ன? டுலா உங்களிடம் மிகவும் சிநேகமாக நடந்து கொள்கிறாளே?'' அவள் வந்த சில நாட்களில் என்னிடம் மற்ற வைத்தியர்கள் கேட்டனர்.

''அதுதான் முகராசி'' என்று பதிலளித்து தப்பித்துக் கொண்டேன்.

சுமார் பத்து வைத்தியர்கள் அந்தப் பகுதியில் வேலை பார்த்துக் கொண்டிருந்தோம். அவளுக்கு ஒரு விஸ்தாரமான ஏ.சி. அறை – தனி நர்ஸ் – பணியாள் – கவனிக்க வேண்டிய நோயாளிக் கூட்டம் இத்தனை என்று ஒதுக்கியிருந்தனர்.

எனக்கு இந்தியப் பெண்கள் - ஆப்பிரிக்கப் பெண்கள் – குழந்தைகள் என்ற பகுதியை ஒதுக்கியிருந்தார்கள்.

டுலா கலப்பு வர்க்கம் – ஆப்பிரிக்கர் என்ற இரு இனப்பிரிவின் ஆண் நோயாளிகளைக் கவனித்தாள்.

என்னைவிட அவள் அதிகம் பட்டம் பெற்றவள். காச நோய்ப் பகுதியில் நீண்ட காலம் வேலை செய்த அனுபவம் வேறு. இருப்பினும் சிகிச்சை முறையில் சந்தேகம் வந்துவிட்டால் என்னைக் கலந்து ஆலோசிக்க, எக்ஸ்ரே, பரிசோதனை சாலை விவரங்கள் இவற்றுடன் நோயாளியையும் அழைத்துக் கொண்டு என் அறைக்கு வந்து விடுவாள்.

''உங்களிடம் அல்லவா நான் ஆலோசனை கேட்க வேண்டும்? என்னிடம் வந்து கேட்கிறீர்களே?'' என்று நான் கூறினால் அவள் என்னை மடக்கி விடுவாள்.

''அறிவு என்பது கரையில்லா சமுத்திரம். அதன் கரையில் கூழாங் கற்களைப் பொறுக்கும் குழந்தைகள் நாமெல்லோரும். அதனால் ஏற்றத்தாழ்வு என்பது நமக்குக் கிடையாது'' என்று தத்துவம் பேசுவாள். பிறர் ஆலோசனையையும் கேட்டுத் தெளிய வேண்டும் என்றதொரு தன்னடக்கம் உடையவள்.

மற்ற வைத்தியர்களிடம் பட்டும் படாமலும் பழகிய டுலா என்னிடம் மிக நெருக்கமாக நேசமாகப் பழகினாள். சில நாட்கள் –என் வீட்டு வழியாக அவள் தன் காரை ஓட்டிச் செல்ல வேண்டியிருந்தால் தன்னுடனேயே நானும் காரில் வேலைக்கு



வந்துவிட வேண்டும் என்று வற்புறுத்தினாள். என் காரை காரேஜில் பூட்டி வைத்துவிட்டு நான் வேலைக்கு அவளுடன் போய் வந்தேன். ஆனால் குறித்த நேரத்தில் டாண் என்று கிளம்பிவிட வேண்டும். ஒரு விநாடி கூட தாமதமாக வேலைக்குப் போகக் கூடாது என்பது அவளது குறிக்கோள்.

டுலா வந்துவிடுவாளே என்று நானும் காலைவேளை பத்து நிமிடங்களுக்கு முன்னரே தயாராகி விடுவேன்.

''கௌபாய் போல வண்டியை ஓட்டுவாளே? அவளோடவா வருகிறீங்க?'' மற்ற வைத்தியர்கள் அதிசயப்பட்டனர்.

டுலா நகரத்துக்குள் போக்கு வரத்துச் சட்டத்திற்குட்பட்ட வேகத்திலிருந்து ஒரு இம்மிகூட அதிகம் ஓட்ட மாட்டாள்.

ஒரு தடவை நகரத்தை விட்டு வெளியே ஓர் இடத்துக்கு அவளுடன் போக நேர்ந்தது. அப்போதுதான் உண்மை தெரிந்தது. அவள் காரை விமானமாகப் பறக்க விட்டாள். வீடு திரும்புவதற்குள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டுதான் இருந்தேன். அது ஒரு பயங்கர அனுபவம்.

அவள் முன்கோபி — படபடவென்று கத்திவிடுவாள் என்றெல்லாம் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறேன். என்னுடன் பழகிய அந்தச் சில ஆண்டுகளில் பொறுப்பு மிக்க அன்பானதொரு நல்ல தோழியாகத்தானிருந்தாள்.

உணவில் காரம் என்றால் அவளுக்கு மெத்த நடுக்கம். ஒரு சமயம் என் வீட்டில் சாப்பிட அழைத்திருந்தேன். ''பச்சை மிளகாயைப் போட்டு விடாதீங்க'' என்று முன்கூட்டியே எச்சரித்திருந்தாள்.

'ஓ' பிரிவு இரத்தமுடைய ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொள்வார்களானால், 20 சதவிகிதத்தினருக்குக் குழந்தை பிறப்பதில்லை என்றும், அப்படிப் பிறந்தாலும் அந்தக் குழந்தைக்கு அறிவுத்திறன் மிகவும் குறைவாக இருக்கும் என்றும் மருத்துவ அறிஞர்கள் கண்டு பிடித்துள்ளார்கள். - வசந்தா



''இச்சடி சாதத்தில் ஒரே ஒரு மிளகாய் போட்டிருக்கிறேன்'' என்று வேடிக்கையாகப் பொய் சொல்லிப் பயமுறுத்தியபடி பரிமாறினேன்.

ஒரு ஸ்பூன் சாதத்தை வாயில் போட்டு விழுங்கியவள் கண்களில் கரகரவென்று கண்ணீர்வழியத்தொடங்கியது. ''ஆ! மிளகாய்!'' என்று கருவேப்பிலை இலையைக் கடித்துவிட்டு அலறினாள்.

'நான் விளையாட்டுக்குச் சொன்னேன் — கறிவேப்பிலை இலை வாசனைக்குப்போடுவது— அதில் காரம் என்பதே கிடையாது' என்று நான் விவரித்து அவளைச் சமாதானப்படுத்த பட்டபாடு!....

சாப்பாட்டிலே அவள் மிகவும் கட்டுப்பாடாக இருப்பாள். தேநீரில் கூடச் சர்க்கரை போட்டுக்கொள்ள மாட்டாள். ஆரோக்கியத்தின் அவசியத்தை முன்னிட்டு தன் உடல் எடையை ஒரே சீராக வைத்துக்கொள்வதிலே ஒரு தீவிரம். வேலையாள் உதவி இல்லாது அவள் கடற் கரை ஓரத்திலே தன்னந் தனியே ஒரு அபார்ட்மெண்டில் வசித்துக் கொண்டிருந்தாள். வீட்டின் உட்புறம் துப்புரவாக, சுத்தமாக இருக்கும். வெளிப்புற பால்கனியில் பூந்தொட்டிகளை வைத்து அவளுக்குப் பிடித்தமான மலர்ச் செடிகளைப் பயிரிட்டு வைத்திருந்தாள். வருஷத்துக்கு ஒரு முறை ஒரு மாத லீவில் தன் காருடன் தென் ஆப்பிரிக்காவுக்குத் தன்னந் தனியே ஒரு சுற்றுலாப் பயணம் கிளம்பி விடுவாள்.

'தனிமை உங்களைப் பாதிக்கவில்லையா?' என்று கேட்டபோதுதான் சொன்னாள்:

''கடந்த யுத்தத்திலே நாங்கள் வெகுவாகப் பாதிக்கப்பட்டோம். எங்கள் குடும்பம் ஒரு கான்ஸன்ரேஷன் காம்பில் இருக்க நேர்ந்தது. வைத்திய மாணவியான எனக்கு கழிவறைகளைச் சுத்தப்படுத்தும் வேலை தரப்பட்டது. நான் கல்யாணம் செய்துகொள்ள உத்தேசித்துக் காதலித்த என் வருங்காலக் கணவர் சண்டையில் உயிர்துறந்துவிட்டார். அதற்குப் பின்னர் என் குடும்பத்தினர் ஒரு குண்டுவீச்சில் இறந்து போனார்கள். தனியே நான் மட்டும் பிழைத்தேன். அன்றிலிருந்து எனக்குத் தனிமை பழகி விட்டது.'' அவள் தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டபோது நான் நெஞ்சம் நெகிழ்ந்து போனேன்.

சங்கீதம், சிற்பக் கலை, ஓவியம் வைத்தியம் மேற்கத்தியரின் பழக்க வழக்கம் என்று எதைப் பற்றிக் கேட்டாலும் தெளிவான பதில் சொல்லத் தெரியும். ஒரு நடமாடும் கலைக் களஞ்சியம் போல அவள் ஆழ்ந்த அறிவு படைத்தவளாக இருப்பதைக் கண்டு நான் பலமுறை வியந்ததுண்டு. பீதோவன் ஷுபர்ட் பிராம் மொசார்ட்...சைக்காவ்ஸ்கி... என்ற மேற்கத்திய சங்கீத மேதைகளைப் பற்றி அறிமுகப்படுத்தியவள் டுலா தான்.

ஒரு நாள் மாலை கிளினிக் மூடும் நேரம் நெருங்கியும் அவள் தீவிரமாக வேலை

செய்து கொண்டிருந்தாள். எங்களைத் தவிர எல்லோரும் வீட்டுக்குக் கிளம்பிவிட்டனர். முன்னிருட்டுப் பனிக்காலம். இருட்டத் தொடங்கி விட்டது. வேலையாட்கள் ஜன்னல்களை அடைத்துவிட்டு எங்களை இருவரையும் வெளியேற்ற ஆயத்தமாக இருந்தனர். என் கோட்டைக் கழற்றி அலமாரியில் வைத்துவிட்டு கைப் பையுடன் அவள் அறைக்குள் நுழைந்தேன். அவள் இன்னமும் ஒரு ஆப்பிரிக்க நோயாளியைப் பரிசோதித்துக் கொண்டிருந்தாள்

''என்ன டாக்டர்... மணியாச்சு... கிளினிக்கை மூடிவிட்டார்கள். இப்பப் பார்த்து இவன் வந்திருக்கிறான். நாளைக்கு வரச் சொல்லுங்களேன்'' என்று நான் சொன்னதைக் கேட்டு வெடுக்கென்று நிமிர்ந்தாள்.

அன்றுதான் அவள் முகத்தில் கோபத்தை நான் முதன் முதலாகப் பார்த்தேன்.

''நீங்க கூட இப்படிப் பேசுகிறது எனக்கு வியப்பாஇருக்கு. டாக்டர் என்பவர் கட்டடத் தொழிலாளி இல்லே. இப்படி வந்து எனக்கு உதவுங்கள். இந்த நோயாளி படிப்பு அறிவு இல்லாத கிராமவாசி — தொலை தூரத்திலிருந்து பஸ் பிடித்து- வந்திருக்கிறான் — நோய் முற்றின நிலையில் இருமி ரத்தம் கக்கிக் கொண்டு வந்திருப்பவனை உடனடியாக ஆஸ்பத்திரியில் அனுமதித்து சிகிச்சை செய்ய வேண்டாமா? மனிதாபிமானம் இல்லாதவர்கள் இந்தத் தொழிலுக்கே வரக் கூடாது... எனக்காக நீங்கள் ஆஸ்பத்திரியைத் தொலைபேசியில் கூப்பிட்டு ஒரு எமர்ஜன்ஸி வருகிறது — ஆம்புலன்ஸை அனுப்புங்கள் என்று சொல்லிவிட்டு வார்டில் ஒரு படுக்கையைத் தயாராக வைக்கச் சொல்லுங்கள் — அப்படியே வார்டு டாக்டருக்கும் தகவல் தெரிவியுங்கள்'' என்று படபடவென்று உத்தரவிட்டாள்.

எக்ஸ்ரே படம் எடுத்து ஆம்புலன்ஸ் வந்து நோயாளியை நாங்கள் பத்திரமாக ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிட்டுக் கிளம்புவதற்குள் இரவு மணி ஏழாகி விட்டது.

அன்று நாங்கள் வீடு திரும்பும்போது வழியில் அவள் எனக்கு விளக்கம் தந்தாள்.

''எங்கள் நாட்டில் கட்டடத் தொழிலாளிகள் — நேரம் பற்றி மிகவும் கண்டிப்பாக இருப்பார்கள். காலை ஏழு மணிக்கு சங்கு ஊதியதும் சிமெண்டைக் கரண்டியில் வாரிக்கொண்டு செங்கலைத் தூக்கிக்கொள்வார்கள். மாலை நாலரைக்கு வேலை ஒய்ந்தது என்று சங்கு முழங்கியதும் கையில் சிமெண்ட் நிறைந்த கரண்டியும் செங்கல்லும் இருந்தால்கூட அதைச் சுவர் மீது வைத்து வேலையைப் பூர்த்தி செய்ய மாட்டார்கள் — தொப்பென்று கீழே போட்டுவிட்டு இறங்கி விடுவார்கள். தங்கள் உழைப்பின் ஒரு வினாடியைக் கூட வீணே — கட்டடத்தைக் கட்டுகிற மேஸ்திரிக்குத் தரமாட்டார்கள். அப்படி ஒரு கண்டிப்பு... டாக்டர்கள் அவ்வாறு தங்கள் நேரத்தில் கண்டிப்பை அனுசரிக்க முடியுமா? சொல்லுங்கள்....''



பாகற்காய் பொரியல் செய்யும் பொழுது, சிறிது கடலைப்பருப்பை ஊறவைத்து, மையாக அரைத்து, பின் இந்த மாவை இட்லிதட்டில் வைத்து ஆவியில் வேகவிடவும். பாகற்காயை வதக்குகையில், இந்த மாவையும் உதிர்த்துப் போட்டுக் கிளறினால், பொரியல் மிகவும் ருசியாகவும், மணமாகவும் இருப்பதுடன், கசப்பும் குறைவாகத் தெரியும். -ரோகிணி

எனக்கு மிகவும் வெட்கமாகி விட்டது. அவளது கடமை உணர்ச்சி, தொழில் மீது இருந்த பற்று... என்னை மிகவும் பிரமிக்கச் செய்துவிட்டன. வீடு செல்ல நான் அவசரப்பட்டதற்காக மிகவும் வருந்தினேன்.

கொஞ்ச நாள் கழித்து அவள் அங்கிருந்து வேறு ஒரு மாநிலத்துக்கு மாற்றப்பட்டாள். பல ஆண்டுகள் ஒருவரை யொருவர் சந்திக்காதே கழிந்தது. ஒரு நாள் டெலிபோன் டைரக்டரியைப் புரட்டி அவளது தொலைபேசி எண்ணைக் கண்டு பிடித்து சுழற்றினேன்.

''டுலா... நீங்கள் மறுபடியும் டர்பனுக்கு வந்து விட்டீர்களா? — அவள் குரலைக் கேட்ட மகிழ்ச்சியில் விசாரித்தேன்.

''வேலையை விட்டு நான் சொந்தமாகத் தொழில் துவங்க மீண்டும் இங்கேயே வந்திருக்கிறேன்.''

''நான்கூட வேலையை விட்டு என் நாட்டுக்குத் திரும்பிப் போக நினைத்துக்கொண்டிருக்கிறேன்'' என்றேன்.

மறுநாள் அவள் என்னைப் பார்க்க ஒரு சாக்லெட் பெட்டி, ஒரு பெரிய பூச்செண்டு— ஒரு செண்ட் பாட்டில் இத்யாதிகளுடன் வந்தாள்.

''நான் என் தாய்நாடான ஜெர்மனிக்குப் போகத் திட்டமிட்டிருக்கிறேன். நீங்களும் உங்கள் பிறந்த நாட்டை நினைத்துப் புறப்பட்டுப் போங்கள்— மீதமுள்ள நாட்களில் நம் நாட்டுக்கும் நாம் கொஞ்சம் சேவை செய்ய வேண்டும் இல்லையா? எங்கே இருந்தாலும் உங்களை நான் மறக்க மாட்டேன்'' என்றாள் சிரித்துக் கொண்டு.

''நானும் மறக்க மாட்டேன்'' என்றேன். உண்மையில் மறக்க முடியாத பண்பு மிக்க ஓர் அன்பான தோழி அவள்.

# உண்மையாகவா சொல்கிறீர்கள்?

பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகள்.

பெண்ணாகப் பிறந்தவர்களில் ஒருசிலர் புகுந்த வீடுகளில் மட்டும்தான் கொடுமைப் படுத்தப்படுகின்றனர். படுத்தப்பட்டிருப்பார்கள். ஆனால் என்னுடைய வாழ்க்கையில் நான் அனுபவித்தது சற்று வித்தியாசமானது என்றே கூற வேண்டும். ஆம்! நான் சொந்தப் பெற்றோர்களாலேயேதான் சோதனைக்குள்ளாக்கப்பட்டேன் என்று யாரிடமாவது கூறினால் நம்ப இயலாதவர்களாக ''....சொந்த அப்பாவா? சொந்த அம்மாதானா? உங்களை உண்மையிலேயே பெற்றவர்களைத்தானா சொல்கிறீர்கள்?'' என்று ஐயம் தீராமல் திருப்பிக் கேட்டவர்கள்தான் அதிகம்.

என் இள வயதில் நடந்த அத்தனை நிகழ்ச்சிகளையும் கோர்வையாக எழுத எனக்கு வராவிடினும், ஒரு பானை சோற்றுக்கு ஓரிரண்டு சோறு பதம் பார்ப்பது போல், ஒருசில நிகழ்ச்சிகளை மட்டும் கோடிட்டுக் காட்டுகிறேன்...

'தாய் அடித்தால் தந்தை அணைப்பார்... தந்தை அடித்தால் தாய் அணைப்பாள்' என்பதெல்லாம் பிறவியிலேயே பாக்கியம் செய்திருப்பவர்களுக்குத்தான். தாயும் தந்தையும் சதி செய்தால் அம்மன்தான் சாட்சி என்பதுதாம் என்னைப் பொறுத்தவரை உண்மையாக இருந்தது.

அவர்களைப் பொறுத்தவரையில், நான் செய்த தவறு என்னுடைய மனம் கவர்ந்த வரை வாழ்க்கைத் துணைவராக்கித் தரும்படி கேட்டதுதான். ஆனால் அதை இன்று வரை என் தவறு என்று ஒப்புக்கொள்ள மாட்டேன்.

அப்போது எனக்கு வயது 16. எஸ். எஸ். எல். சி. படித்துக் கொண்டிருந்தேன். எங்களுக்கு எட்டிய உறவினரின் மகன் எப்பொழுதாவது எங்கள் வீட்டுக்கு வருவார். பேசிக்கொண்டிருந்து விட்டுப் போவார். நாங்கள் இருவருமே ஒரே முதலியார் வகுப்பைச் சேர்ந்தவர்கள்தான். அவருடைய நிதானம், கண்ணியமாகப் பழகும் முறை, அறிவு இவைகளால் கவரப்பட்டு, சிறிது சிறிதாகத்தான், வளர் பிறை என எங்களுக்குள் அன்பு வளர்ந்தது. 'கண்டதும் காதல்' என்னும்வகையைச் சேர்ந்ததல்ல எங்களுடைய காதல். எங்களுடைய அன்பைச் சரியாகக் கூறவேண்டுமானால் தெய்வீகக் காதல் என்றே கூறவேண்டும். எல். எம். இ. கடைசி வருஷம் படித்துக் கொண்டிருந்தார். அவர் தமக்கை வீட்டிலிருந்து படித்துக் கொண்டிருந்த-போதே அவருக்குப் பெரிய இடங்களிலிருந்து பெண் கொடுக்கப் பலர் முன்வந்தார்கள். இனியும் வாளாவிருந்தால் காரியம் மிஞ்சிப் போய்விடலாமோ என்று அஞ்சிய 'அவர்', துணிந்து என்னைப் பெண் கேட்க என் அப்பாவிடமே வந்துவிட்டார். என் அப்பா ஹெட் கான்ஸ்டபிளாக இருந்தார். அவரிடம் யாருமே தைரியமாக எதிர்த்துப் பேசவும் இயலாது. எங்கள் திருமணத்துக்குச் சம்மதம் தர மறுத்துவிட்டார். 'அந்தஸ்து, படிப்பு இருந்தும் பிள்ளை கறுப்பாக இருக்கிறார்... என் பெண்ணின் சிவந்த நிறத்துக்குப் பொருத்தமில்லை' என ஒரே வாக்கியத்தில் முடிவைக் கூறிவிட்டார்.



# உண்மை சம்பவம்

உண்மை சம்பவம்
உண்மை சம்பவம்

ஆனால் நான் மிகவும் பிடிவாதமாக இருக்கவே, வேறு வழியின்றி, பின்னே வீட்டாரே நல்ல முறையில் திருமணத்தை முன்னின்று நடத்தினார்கள். என் பெற்றோர் பாராமுகமாக இருந்த விதம், மறைமுகமாகச் செய்த கொடுமைகள், இவைகளை இன்றும் என்னால் மறக்கவும் முடியவில்லை, மன்னிக்கவும் முடியவில்லை!

எங்கள் வீட்டிலிருந்த இரு படுக்கையறைகளில் ஒன்றுக்குத்தான் தாழ்ப்பாள் இருந்தது. என் பெற்றோர்கள் எப்போதும் அந்தத் தாழ்ப்பாள் உள்ள அறையிலேயேதான் படுத்துக் கொண்டார்கள். புதுக் கல்யாணம் முடிந்த ஜோடிகள் இதில் படுத்துக்கொள்ளட்டும், மகிழ்ச்சியாக இருக்கட்டுமே என்ற எண்ணம் அவர்களுக்குத் துளியும் இல்லாததாலேயே அப்படி நடந்து கொண்டார்கள். டியூட்டியிலிருந்து லேட்டாக வரும் என் அப்பாவுக்கு அப்போதுதான் கைகால் உடம்பைப் பிடித்து விடும் சிசுருஷை நடக்கும். நாங்கள் இருவரும் வராண்டாவில் தூக்கம் கண்களை அழுத்த, கொட்டுக் கொட்டு என்று விழித்துக்கொண்டு உட்கார்ந்திருப்போம். ஆள் நடமாட்டம் இருக்கும்போது, தாழ்ப்பாள் இல்லாத ரூமில் எப்படிப் படுத்துக்கொள்வது என்பதுதான் பிரச்னையாக இருக்கும். சின்னஞ் சிறுசுகள்... அதுவும் தன் சொந்த மகள்... என்பது ஏனோ அவர்களுக்கு உறைக்காமல் இருந்தது!

எம்.எல். இ. கடைசி வருஷப் பரிட்சைக்குப் பணம் கட்டக் கையில் பணமில்லை. ரூ. 15தான் தேவைப்பட்டது. என் பெற்றோருக்கு இந்த விஷயம் தெரிந்திருந்தும் தெரியாத பாவனையில் இருந்து விட்டார்கள். கடைசியில் வேறு வழியின்றி என் நாத்தனார் கல்யாணப் பரிசாக அளித்த அரைப் பவுன் மோதிரத்தை முப்பது ரூபாய்க்கு விற்று பரிட்சைக்குப் பணம் கட்டி, ஒருவாறாக படிப்பை முடித்தார். அப்போதெல்லாம் இரண்டு நாள் லீவு கிடைத்தாலும் என்னைப் பார்க்க ஆவலுடன் ஓடி வந்துவிடுவார். மாலை நேரத்தில் ஆசையாக வெளியே போகலாம் என்று பிளான் போட்டிருப்போம். அப்போதுதான் மாவு ஆட்டவோ, முற்றத்தில் அடைத்துக் கொண்டிருக்கும் பாத்திரங்களைத் துலக்கி எடுக்கும்படியோ அல்லது வேறு ஏதாவது வேலை கொடுத்தோ எங்களுடைய மூடையும் கெடுத்து, வேறு வழியின்றி எங்கள் பிளானைக் கெடுத்து, அதில் ஒரு குரூரத் திருப்தியடைந்தார்கள் என்றே கூற வேண்டும். பல நாட்களில் எங்களுக்கு அதிகச் செலவில்லாத கடற்கரைதான் புகலிடமாக இருக்கும், மனம் விட்டுப் பேசிக் கொள்வதற்கு!

என்னை என் மாமியார் வீட்டுக்கு அனுப்பும்போதும், கல்யாணத்துக்கு முன்பே நான் போட்டிருந்த தங்க வளையல்களைக் கூட கழற்றி வாங்கிக் கொண்டார்கள். அப்போதுதான் மாமியார் வீட்டில் வெறுப்பார்களாம்! ஆனால் என் மாமியாரோ பத்தரை மாற்றுப் பசும்பொன்! என்னுடைய புன்னகையே எனக்கு அணி என ஆறுதல் கூறினார். என் கணவரோ இவை எதற்குமே சளைக்கவில்லை. கணவர் வீட்டில் எல்லோருக்குமே என்னை மிகவும் பிடித்துப் போய்விட்டது. ''சித்தாராமன் நல்ல புளியங் கொம்பாகத்தான் பிடித்திருக்கிறான்'' என்று அவர்கள் காதுபடவே கூறியிருக்கிறார்கள்.

கல்யாணமாகிப் பெண் புகுந்த வீடு போகும்போது தாய் வீட்டிலிருந்து பஞ்சு மெத்தை தைத்துக் கொடுப்பது சம்பிரதாயம். ஆனால் எனக்கோ ஒன்றுமே தரவில்லை. 'வெறும் மெத்தைத் துணி மட்டும் கொடுத்தால் போதும். நம்ம வீட்டு இலவ மரத்துப் பஞ்சு நிறையவே இருக்கிறது...' என்றார் என் மாமியார். ஆனால், 'எங்களுக்குப் படுக்க மெத்தையே தேவையில்லை. அதனால் வெறும் துணிதான் எதற்கு? அதில் கிடைக்காத சுகத்தை வெறும் பாயில் கூட



திருமதி லக்ஷ்மி, கணேசன்

# உண்மை சம்பவம்

உண்மை சம்பவம் உண்மை சம்பவம் உண்மை சம்பவம்

எங்களால் அனுபவிக்க இயலும் என்று என் பெற்றோருக்குத் தெரிந்திருக்க வேண்டும். அதனால்தான் ஏற்பாடே இல்லாமல், 'எழுதியா கொடுத்திருக்கிறோம்...' என்று சொல்லி விட்டார்கள்.

முதன் முதலாக என் கணவருக்கு கடலூரில் போஸ்டிங் ஆகி தனிக் குடித்தனம் வைத்துவிட்டுப் போகச் சொல்லி (அது அவர்களுடைய கடமை) கடிதம் எழுதியும் எட்டியே பார்க்கவில்லை. மாமியார் நாத்தனார் தந்த சாமான்களோடு ஆரம்பத்தில் சமாளித்து பிறகு என் கணவரின் சுய சம்பாத்தியத்திலிருந்து ஒரு ஸ்பூனிலிருந்து அண்டா வரை வாங்கிச் சேர்த்தோம். அவர்கள் உயிருடன் இருக்கும்போதே எங்களைப் பல வித இன்னல்களுக்கு ஆளாக்கிய பச்சை துரோகத்தை மட்டும் இன்னும் என்னால் மறக்க இயலவில்லை. பிறகு தாயென்ன... தகப்பனென்ன என்று வெறுத்து ஒதுக்கி விட்டேன்.

என் அடுத்த தங்கைக்கு என் அப்பாவே தேடிப் பிடித்த மாப்பிள்ளை என் கணவரை விடக் கறுப்பாக இருந்தும் நகை, பாத்திரம் என்று சீர் வரிசை செய்தார்கள். ஆனால் என் அப்பாவின் கடைசிக் காலத்தில் அந்த மருமகன் கொடுக்காத மரியாதையையும் அன்பையும் என் கணவர் அளித்தார். என் பெற்றோர்கள் அவர்களுடைய தவறைப் பிறகு உணர்ந்தாலும், அந்த இளம் வயதில் இன்பக் கனவுகளைக் கண்களில் தேக்கிக் கொண்டிருந்த காலத்தில் அவர்கள் என்னை நடத்திய விதம் பசுமரத்தாணியாக என் உள்ளத்தில் பதிந்து விட்டது. இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள்...

இத்தனை எதிர்ப்புக்குள்ளும் தன்னம்பிக்கையுடனும், விடாமுயற்சியுடனும் எதிர் நீச்சல் போட்டு இன்று கண் நிறைந்த அன்புக் கணவருடனும், கருத்து நிறைந்த குழந்தைச் செல்வங்களுடனும், நவீன வாழ்க்கை வசதி சாதனங்களுடனும் முடிசூடா ராணியாக இருக்கிறேன் என்றால், எல்லாம் என் அம்மனின் அருள்! தேவியின் கடாட்சம் என்றே நன்றியுடன் நினைக்கிறேன்!

-திருமதி பி. சுகுணவல்லிசீத்தாராமன்

## அத்திக்காய், காய்! காய்!

அத்திக்காய் நமது நாட்டில் நிறையக் கிடைக்கக் கூடியதே. அதை-யாரும் அவ்வளவாக லட்சியம் செய்ய மாட்டார்கள். ஆனால் அத்திக்கு மருத்துவ சக்தி உண்டு என்பது தெரியுமா? உடலுக்கு இரத்த விருத்தி வரும். ஜீரண சக்தி உண்டு பண்ணும். மலச் சிக்கலைத் தீர்க்கும். அதுவும் பெண்களுக்கு இது ஒரு வரப்பிரசாதமாகும்.

அத்திப் பிஞ்சுகளை துவம்பருப்பு கடலைப் பருப்பு இவைகள் சேர்த்து கூட்டு செய்யலாம்; சாம்பார் செய்யலாம்; அத்திக்காயை வேகவைத்து அத்துடன் வறுத்த மிளகாய், வத்தல், உளுத்தம்பருப்பு, பெருங்காயம் இவைகளுடன் புளி, உப்பு சேர்த்து துவையல் அரைத்துச் சாதத்தில் பிசைந்து சாப்பிடலாம்.

அத்திக்காய் வடை

அத்திக்காயை வேக வைத்து எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு டம்ளர் துவரம்பருப்பும் அரை டம்ளர் கடலைப் பருப்பும் தனித் தனியாக ஊறவைத்துக் கொள்ளுங்கள். ஊறிய துவரம்பருப்பை மட்டும் போட்டுக் கல்லுரலில் சற்று கரகரப்பாக அரைத்துக்கொண்டு அத்துடன் வேகவைத்த அத்திக்காயையும் சேர்த்துதேவையான-உப்பும் சேர்த்துஅரைத்துக்கொண்டு பாத்திரத்தில் எடுத்துக்கொள்ளவும். இஞ்சி, பச்ச மிளகாய், கருவேப்பிலை, கொத்தமல்லி, வெங்காயம் இவைகளைத் தேவையான அளவு எடுத்துக்கொண்டு, பொடிப் பொடியாக நறுக்கி அத்திக்காய்க் கலவையுடன் கலந்து கொண்டு ஊறிய கடலைப் பருப்பையும் தண்ணீர் இல்லாமல் ஒட்டப் பிழிந்து போட்டு நன்றாகக் கலந்து கொண்டு அடுப்பில் காயும் எண்ணெயில் வடை போல் தட்டிப் போட்டு இருபுறமும் வெந்ததும் எடுத்துச் சாப்பிடவும். சுவையாக இருக்கும்.

அத்திப்பழ அல்வா

நாட்டு அத்திப் பழத்தை ஜலம் விட்டு குழம்பாக அரைத்துக் கொண்டு சல்லடையில் வடிகட்டிக்கொள்ளுங்கள். அக்குழம்பில் கல் கண்ணும்பு நீர் கொஞ்சமாகச் சேர்த்து 12 மணி நேரம் வைத்தால் அக்குழம்பு இறுகி அல்வாவைப் போல் ஆகிவிடும். இதைத் துண்டம் போட்டு சர்க்கரையில் தொட்டுச் சாப்பிடப் பெண்களுக்கு வெள்ளை கொட்டுதல், பெரும்பாடாய் உதிரம் போதல் நின்றுவிடும்.



# உண்மை சம்பவம்

உண்மை சம்பவம்

உண்மை சம்பவம்

நான் வாழ்க்கைப்பட்டது 'பெரிய இடத்தில்'. சொத்து சுகத்தில் அல்ல. குடும்ப நபர்களின் எண்ணிக்கையில்தான். என்னைப் பெண் பார்த்த சில நாட்களில் நேரில் வந்து என் வருங்காலக் கணவர் தன் குடும்பத்தில் உள்ளவர்களின் குணங்களைச் சொல்லி நீ அவர்களுக்குத் தகுந்த மாதிரிநடந்துகொள்ள வேண்டும். அவர்களுடைய சந்தோஷம்தான் என் சந்தோஷம் என்று சொன்னார். நானும் சரி என்று ஒப்புக் கொண்டேன். டாக்டர் மாப்பிள்ளை என்றால் கசக்கவா செய்யும்? அதுவும் எந்தவித வரதட்சிணையும் இல்லாமல்!

திருமணம் இனிதே நடந்தது. மாமியார் நல்ல குணம் படைத்தவர். ஆறு மாத காலம் எனக்குச் சமைத்துப் போட்டு சமையற் கலையைக் கற்றுத் தந்தார். இன்று நான் தாளித்த சாதம் முதல் கறி பிரியாணி வரைக்கும் பாராட்டுக் கிடைக்கிறது என்றால் அந்தப் பெருமை என் மாமியாரையே சாரும். மாமியாரைப்பொறுத்தவரை நான் கொடுத்து வைத்தவள். , நாத்தனார் மூவர். முதல் நாத்தனார் நல்லவர். இரண்டாம் நாத்தனார் நன்கு பழகுவார். ஏதாவது குற்றம் கண்டால் முள் போலத் தைத்து விடுவாள். கடைசி நாத்தனார் பேசவே மாட்டார். பேசினால் பட்டாசுதான். இரண்டு கொழுந்தனார்கள். ஒருவர் வளர்ச்சி பாதிக்கப்பட்டு சாகும்வரை எங்களுடன் இருப்பவர். அவரைப் பற்றிக் கவலையில்லை. அடுத்தவர், செலவு செய்வதில் வல்லவர். இவர்களுக்கு எல்லாம் என் கணவர்தான் பொறுப்பாளர். மாமனார் கோவில் குளம் என்று இருப்பார்.

ஆரம்பத்தில் நான் தொட்டது குற்றம், பட்டது குற்றம் என்று எவ்வளவு நாள் காலம் தள்ளியிருப்பேன், அப்பப்பா! ஒரு தடவை எல்லோரும் காசு வைத்து சீட்டு விளையாடிக் கொண்டிருந்தோம். என்னிடம் தோற்றுவிட்ட என் கடைசி நாத்தனார் காசு தர மறுக்க அவர் பேச, நான் பேச.. 'உங்கண்ணாதானே சம்பாதிக்கிறார்' என்று நான் சொல்ல, 'எங்கண்ணா காசு. என்றால் என்ன? உங்க அண்ணா காசு என்றால் என்ன? எல்லாம் ஒன்றுதான்' என்றார். 'ஆமா தாயும் பிள்ளையும் ஒன்றா இருந்தாலும் வாயும் வயிறும் வேறுதானே?' என்று நான் சொல்ல வந்ததே அவளுக்குக் கோபம்! தலைக்கு குளித்து விரித்துப் போட்ட முடியை பிடித்துக்கொண்டு 'என்ன சொன்னே? முதல்ல நாங்க அப்புறம்தான் நீ தெரிஞ்சுக்க' என்று கத்தினார். நான் பயந்து நடுங்கிவிட்டேன்.

இன்னொரு முறை என் குழந்தையைக் கிழே போட்டுவிட்டார். நான் வாய்த்துடுக்காக 'இனிமேல் குழந்தையைத் தூக்கவே வேண்டாம்' என்று சொல்லி விட்டேன். அவர் வந்ததும் வீடே இரண்டு பட்டு விட்டது. என் கணவர் ரொம்பப் பொறுமைசாலி. அமைதியாகக் கேட்டு, விட்டாரே ஒரு அறை! அப்படியே திகைத்து விட்டேன். பின் அவர் தனியாக அறிவுரை சொன்னார். என் தவறை நானும் உணர்ந்து கொண்டேன். —அவருக்கு அவர் குடும்பம் மேல் அலாதிப் பிரியம் இருக்காதா? சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டு இவரை ஆளாக்கியவர்கள் இல்லையா? அதை நானும் யோசித்து யோசித்து நான் இன்று டாக்டர் மனைவி என்ற பதவிக்குக் காரணமானவர்கள் இவர்கள். இனி மனம் கோணாமல் நடக்க வேண்டும் என்று உறுதி கொண்டு என் உண்மையான அன்பில் அவர்களைத் திக்குமுக்காடச் செய்து விட்டேன்.

இன்றுவரை எல்லோருடனும் கலகலப்பாக இருக்கிறேன். 'அண்ணி, அண்ணி' என்று நாத்தனார்கள் என்னைச் சுற்றிச் சுற்றி வரும்போது பெருமையாக இருக்கிறது. ஒரு உண்மை மட்டும் நிச்சயம் தெரிகிறது. மாமியார், நாத்தனார் பிறவியில் கொடுமைக்காரிகள் அல்ல. அவர்களும் மருமகளாக இருந்தவர்கள், இருக்கப் போகிறவர்கள். நாம் துடுக்காகப் பேசினால்தானே குற்றம்? முதலில் பெண்கள் மாமியார், நாத்தனார்களைக் கவர முயற்சிக்க வேண்டும். நீ பிடி, நான் பிடி என்று இருந்தால் வாழ்க்கை முழுவதும் கசப்பாகத்தான் இருக்கும். என் அனுபவம் இதுதான். கல்யாணமான ஆரம்பத்திலேயே குடும்பப் பொறுப்பு, கணவனைக் கைக்குள் போட்டுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் வரக் கூடாது. எத்தனை சினிமா பார்க்கிறோம்? அதில்எப்படி நடந்தால் குடும்பம் பிரிந்து போகிறது என்று நாம் அறிந்துகொள்ளவேண்டும்.

நமக்கு நம் கணவர் ஒரு தாய்க்கு மகன், தங்கைகளுக்கு ஒரு அண்ணன் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். மாமியார், நாத்தனாரைக் குறை சொல்லக் கூடாது. நாம் நன்றாக மனம் விட்டுப் பழகினால் நிச்சயம் அவர்களும் நன்றாகப் பழகுவார்கள். நானும் ஆரம்பத்தில் எசகு பிசகாகத்தான் இருந்தேன். பின் என்னை நானே மாற்றிக் கொண்டேன்.

ஏன், எத்தனையோ குடும்பங்கள் மருமகள்களால் பிரிந்து, திரிந்து போயிருக்கிறது அதையும் நாம் கவனிக்க வேண்டும்.

**திருமதி லக்ஷ்மி கணேசன்**




ஜூட். ஒரு பொம்மைக்குத் தேவையான அளவு என்று கைவேலைப்பாட்டு சாமான்கள் விற்கும்கடையில் கேட்டு வாங்கலாம். வாழை நார் போன்று இருக்கும்.

**தேவையான பொருள்கள்**

பொம்மை செய்ய உபயோகப்படும் முகம் ஒன்று:
ப்ரௌன் நிற அதற்கு ஏற்ற தலைமயிர்,
ஜரிகை நூல் சற்றே தடித்தது ஒரு கண்டு,
புத்தகம் தைக்கும் ஊசி,
அழுத்தமான வெள்ளை அல்லது கிரீம் நிற நூல்கண்டு,
கொஞ்சம் பஞ்சு,
சிறிதளவு பாப்ளின்,
வெளிர் நிற அல்லது வெண்மை நிறமாக இருக்கலாம்.
பெவிகோல்,
கம்பிமத்தாப்புக் கம்பி—2.

**செய்முறை:**

ஜூட் நாரை மூன்று பாகமாகப் பிரித்து எடுத்துக் கொள்ளவும். முதல் பாகம் மிக அதிகமாகவும், நீளமாகவும், அடுத்தது சற்றே குறைவாகவும், மூன்றும் பாகம் மிகக் கொஞ்சமாகவும் இருக்கும்படி பிரித்து எடுத்துக் கொள்ளவும். அழுத்தமான பற்கள் உள்ள தலை வாரும் சீப்பால் முடிச்சுக்கள் இல்லாமல் நன்கு 'புசுபுசு'வென்று வரும்.

நீளநீள வாக்கில் மூன்று பாகங்களையும் தனித் தனியாக வாரி எடுத்துக் கொள்ள வேண்டும். இதற்கு அதிக நேரம் ஆவதுடன் சிடுக்குப் போக அழுத்திப் பிடித்து வாரும் இந்த வேலை சற்றே பொறுமையையும் சோதிக்கும்.

அடுத்தாகப் படம் 2ல் காட்டியுள்ளபடி அதிக அளவுள்ள பாகத்தை இரண்டாக மடித்து, மடித்த இடத்தை நூலால் அழுத்திக் கட்டிக்கொள்ளவேண்டும். மற்ற இரண்டு பாகங்களையும் புல் கட்டு போல நடுவில் கட்டித் தயாராக வைக்க வேண்டும். (படம்2-ஏ, 2-பி,2-சி.)

பிறகு படம் 3ல் காட்டியபடி பொம்மை முகத்தைப் பொருத்த, சின்ன உடம்பு செய்துகொள்ள வேண்டும். பிறகு துணியைச் சதுர வடிவத்தில் கட் பண்ணி 2''க்கு 2'' அளவு வரும் வண்ணம் ஒரு பையாகத் தைத்துக் கொண்டு பஞ்சால் தலையணை மாதிரி அழுத்தி அடைத்துக் கொள்ளவேண்டும். வாய்ப் பக்கத்தில் பொம்மையின் கழுத்தை அழுத்திப் புதைத்துச் சின்ன ஊசி நூலால் முகம் ஆடாமல் அசையாமல் இருக்கும் வண்ணம் தைத்துக்கொள்ள வேண்டும்.

பொம்மையின் தலையில் பெவிகோலைத் தடவி தலை மயிரை ஒட்டிப் பின் பக்கமாக இரண்டாகப் பிரித்து ரெட்டைப் பின்னலாகப் பின்னி நூலால் பிரியாமல் கட்டவும். கட்டிய இடத்தைப் பட்டு நூலால்

கட்டி மறைத்து ரிப்பன் போல் அழகு படுத்தி முன் பக்கமாக ஒரே அளவு இருக்கும்படி தொங்க விடவும். இதற்கான விளக்கம் படம் 4ல் கொடுக்கப்பட்டிருக்கிறது.

பிறகு தயாராக வைக்கப்பட்டிருக்கும் ஜூட் நாரில் பெரிய அளவு உள்ளதை எடுத்து புடவை அல்லது பாவாடை போன்று பொம்மை உடம்பில் படம் 5ல் காட்டியபடி அழுத்தி வைத்து புத்தகம் தைக்கும் ஊசியால் தைக்கவும். இரண்டாவது பாக ஜூட்டை எடுத்து பொம்மையின் கழுத்தை அங்கவஸ்திரம் போல் போர்த்திக் கொண்டு வந்து குறுக்காக இடுப்பு வடிவமாக வரும் இடத்தில் படம் 6ல் காட்டியபடி நூலால் கட்ட வேண்டும். பட்டு நூலில், நூலால் கட்டிய இடத்தை மறைத்துக் கட்டி ஒட்டியாணம் போல் அழகு படுத்தலாம்.

பிறகு படம் 7ல் காட்டியது போல் மூன்றாவது சிறிய கட்டை விரித்து கையில் பிடித்துக்கொண்டு விசிறி போல் ஊசி நூலால் இறுக்கிக் காம்புத் தையல் முறையில் தைத்துப் பொம்மையின் இறக்கைகளைத் தயாரிக்கவும். நீட்டமான கம்பி ஒன்றை (கம்பி மத்தாப்புக் கம்பியாகவும் இருக்கலாம்.) பொம்மையின் இரண்டு பக்கமும் ஒரே அளவு நீட்டிக் கொண்டிருக்கும்படி பின் பக்கம் தைத்துக் கொள்ள வேண்டும். (படம் 8ல் உள்ளது போல்) மீதியிருக்கும் ஜூட்டைக் கம்பியில் மறைத்து முறுக்கிக் கட்டிக்கொண்டே வந்தால் பொம்மையின் கைகள் தயார். முன் போலவே முறுக்கிக் கட்டிய இடத்தையெல்லாம் பட்டு நூலை கட்டி ஆபரணம் போல் அழகு படுத்த வேண்டும். இந்த முறை கஷ்டம் போல் தோன்றினாலும் ஏற்கனவே பந்து, துணி, ஸ்பான்ஜ் பொம்மைகள் செய்தவர்களுக்கு சுலபமாகவே இருக்கும். இவ்விதம் செய்து முடிக்கப்பட்ட முழு பொம்மை படம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

செய்து முடித்த பிறகு இறக்கை, மற்றும் தொங்கும் பாகங்களை மிருதுவான பிரஷ்ஷால் வாரி முடிகளைக் கத்தரித்து ட்ரிம் பண்ண வேண்டும். இதை ஆணியில் மாட்டி முன் அறைச் சுவர்களிலும், கார்களிலும் தொங்க விடலாம். பொம்மை செய்யும் ஸ்டேண்டில் பொருத்தி நிற்கவும் வைக்கலாம். கடைகளில் கிடைக்கும் நெக்லேஸ், கிரீடம் வாங்கிப் பொருத்தினால் தேவதை பொம்மை நிறைவு பெறும்.


6


7


8

# எப்போதும் பெண் 8

கார்த்திகை மாதம் பாட்டி செத்துப்போனாள். ஞாயிற்றுக் கிழமை எப்போதும் பாட்டி மத்தியானம் தூங்குவாள். தலைக்கு உசரக் கட்டையை அல்லது ஆயில் க்ளாத் தலையணையை வைத்துக் கொண்டு ஹாலுக்கும் பின்புறக்கட்டைக்கும் இடை கழியில் சற்று காற்றோட்டமாக இருக்கும் என்று படுத்துத் தூங்கிப் போவாள். அப்பா வீட்டில் இருப்பதால் பையன்கள் விஷமம் செய்யாமல் அங்கங்கே மண்ணை அல்லது காரையை நோண்டிக் கொண்டு ஈர்க்குச்சியில் அடித்துக் கொண்டு பொழுதைப் போக்குவார்கள். அப்பா எப்படா மார்க்கெட்டுக்குப் போகப் போகிறார் என்று காத்திருப்பார்கள். மத்தியான வேளையில் பாட்டியின் குறட்டை ஒலி மட்டும் வீட்டில் கேட்கும். அன்று கேட்கவில்லை. பாட்டி சாதாரணமாக இரண்டு மணிக்கே எழுந்து விடுவாள். அப்பா லைப்ரரிக்குப் போய் பவான் ஜர்னல் படிக்கலாம் என்று புறப்பட்டபோது பாட்டி இன்னும் தூங்கிக் கொண்டிருப்பதைக் கவனித்து, 'பாட்டி என்ன உடம்பு சரியில்லையா? நான் வேணா காப்பி போட்டுமா?' என்று கேட்டதற்குப்பதில்- கிடைக்காமல் போகவே அசதி போலிருக்கிறது ஓட்டலில் காப்பி சாப்பிட்டுக் கொள்ளலாம் என்று ஏறக்குறையப் புறப்பட இருந்தவர் பாட்டியின்குறட்டைஒலிகேட்காதது விநோதமாகப் பட திரும்பி வந்து படுத்திருப்பதைக் கவனித்தார். அந்தப் பக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டிருந்தாள். 'பாட்டி! பாட்டி!' என்று இரண்டு முறை கூப்பிட்டுப் பார்த்தார். பதில் கிடைக்காமல், மதுவைக் கூப்பிட்டுப் பாட்டியை எழுப்புடா என்றார். மது பாட்டியை விலாவில் இரண்டு கைகளாலும் பிடித்து அசைத்தான். சுருட்டி வைக்கப்பட்ட படுக்கை போல அசைந்தாள். அப்பா குனிந்து உட்கார்ந்து கொண்டு பார்த்தார். ''கண்ணைத் திறந்துண்டு தூங்கறாப்பா'' அப்பா கிட்டத்தில் பார்த்து ''மது நீ போய்ப் பக்கத்தாத்து ராமமூர்த்தி மாமாவைக் கூப்பிடு'' என்றார்.

''காதுலநூல் சுருட்டினா எழுந்திருவாப்பா''

''போடா ராஸ்கல்! ராமமூர்த்தியைக் கூட்டுண்டு வாடான்னா!''

மது பயந்து ஓடினான்.

பாட்டி ஒரு மணி நேரத்துக்கு முன்னாலேயே இறந்திருந்தாள். மத்தியானத் தூக்கத்தின் மத்தியில் அவளுக்கு நினைவா கனவா என்று சரியாகச் சொல்ல முடியாத வேளையில் கார்டியாக் அரஸ்ட் வந்திருக்கிறது. ஒரு கணம் அல்லது ஒரு யுகம் அவள் தன் ஏறக் குறைய எழுபது ஆண்டுகளையும் வாழ்ந்தாள். தாத்தா, பெரியண்ணா, நாத்தனார்கள், குல்லாய் வைத்த மச்சினர் எல்லோருடனும் ஒரு நாள் போட்டோ பிடித்

**சுஜாதா**



துக்கொண்டதும், போத்தனூருக்கு ரெயிலில் போனதும், தாத்தா வேஷ்டியை படேர் படேர் என்று அடித்துதுவைத்ததும், குதிரை வண்டி ஒரு முறை குடை சாய்ந்ததும், மணலில் நாலு வாசல் வைத்து கோபுரம் கட்டியதும், எச்சுமி காவேரியில் போய்விட வண்டியில் கொண்டு வந்ததும், ரோட்டோரத்தில் பூப்பறித்ததும், பாபட்லாவில் தெலுங்கு பேசியதும், முத்துக்குமாரசாமி மடியில் பெல்டு பர்ஸுக்குள் வைரத்தைப் பொட்டலமாக வைத்திருந்ததும், எக்ஸிபிஷனில் சற்று நேரம் தொலைந்து போனதும் கமாஸ் ராகத்தில் மெல்ல வீணை வாசித்ததும், பிள்ளை செத்துப் போனதும், தீபாவளி வெடி கூடத்தில் வெடித்ததும் அடுக்கடுக்காக, ஞாபகமா அல்லது ஞாபகப் பிசகா என்று

❋❋❋❋❋❋❋❋❋-❋❋❋❋❋❋❋❋

நெய் அப்பம் செய்யும்போது ஒரு ஆழாக்கு பச்சரிசியுடன் ஒரு டீஸ்பூன் உளுத்தம் பருப்பையும் சேர்த்து ஊறவைத்து அரைக்கவும். அப்பம் ரொம்ப மிருதுவாக வரும். அப்பக்காரலை உப்புப் போட்டுத் தேய்த்து அடுப்பில் ஏற்றி குழிகளைச் சிறிது நல்ல எண்ணெய் விட்டுத் துடைத்து பின் நெய் விடவும். இப்போது அப்பம் சுலபமாக எடுக்க வரும்.



❋❋❋❋❋❋❋❋❋-❋❋❋❋❋❋❋❋

சொல்ல முடியாமல் அவளுக்குள் வரிசையாக உலவ எல்லா விளக்குகளையும் அணைத்து விட்டது போலவும் எலும்பெல்லாம் ரப்பர் போலவும், அல்லது வெறுமைக்குள் ஒரு ஒன்றுமில்லாத் தன்மைக்குள் கரைவது போலவும் உணர்ந்தாள். மது விஷமம் செய்வதும், ரோடில் ஈயம் பூசுபவனின் சப்தம் கூடக் கேட்டாற் போல் இருந்தது. அதன் பின் மூச்சுத் திணறலிலிருந்து விலகி எங்கோ சாஸ்வதத்தைப் பார்த்து மிதந்தாள். அதற்கப்புறம் அவள் இல்லை!

''பாட்டி! பாட்டி! என்ன பண்றது? என்ன பண்றது?'' என்று அப்பா கேட்டுக் கொண்டு நாடி பிடித்துப் பார்த்தார். ராமமூர்த்தி மெல்லத்தான் வந்தார். ''என்னய்யா'' என்றார்.

''இத பாருங்க... பாட்டி போய்ட்டாள்னு நினைக்கிறேன்.''

அவர் அருகில் குனிந்து பார்க்க, மது வாசற்பக்கம் வைத்திருந்த சர்க்குச்சியில் வில்லைப் பொறுக்கிக் கொள்ள ஓடினான்.

நமச்சிவாயம், தன் மனைவியைப் பார்த்து ''பாட்டி போயிட்டாங்களாம் பார்வதி'' என்றார்.

''அடடா!''

''நான் வேணாப் போயி விசாரிச்சுட்டு வந்துரட்டுமா?''

''எல்லாம் பத்து நா கழிச்சுப் போய்க்கலாம். இப்ப என்ன அவசரம்?''

''எதுக்கும் ஒரு நடை போய் விசாரிச்சுட்டு வந்துர்றேன். நல்லா இருக்காது.''

''போயிட்டு அரை மணிலே வந்துருங்க. செக்கப்புக்குப் போவணும். பொண்ணு ராத்திரி இருமுது டன் டன்னுனு. இரும்பால அடிச்ச மாதிரி சத்தம் கேக்குது.. போய்ட்டு அந்தப் புள்ளைகளை எதையாவது கூட்டுட்டு வந்துடாதீங்க. போன முறை வந்தபோதே கக்குவான் இருமல் அதுங்களுக்கு.''

''ஆனா அங்கே போனாப் பிடிச்சுக்கும் என்னை. தங்கச்சிப் பாப்பா எப்படி இருக்குன்னு.''

''தங்கச்சியுமில்லே. பாப்பாவும் இல்லே. அதெல்லாம் பழக்காதீங்க. என்னடி கண்ணு!'' என்று தொட்டிலிலிருந்து அவனை எடுத்துக் கொண்டாள். அவன் நன்றாக, புஷ்டியாக வளர்ந்திருந்தான். முலைப் பாலிலிருந்து விலக்கியாகி விட்டது. சற்று கெட்டியான ஆகாரம் கொடுக்கத் துவங்கியாயிற்று. அவனுக்குள் இன்னும் அந்தக் குழப்பம் இருந்தது. அம்மா என்பதின் வடிவம் இன்னும் கிடைக்காத குழப்பம். அந்தக் கரிய முகந்தான் அம்மா என்று ஒரு வடிவமைத்து முடிப்பதற்குள் கரிய முகத்தைக் காணோம். வைரம் பளிச்சிடும் எப்போதும் என்னைப் பார்த்துச் சிரிக்கும், விளையாட்டுக் காட்டும் இந்த முகம்தான் அம்மாவோ? பல முறை அவள் மார்பை நாடியிருந்தும் அந்த உஷ்ணமும் போஷாக்கும் கிடைக்காமல் அவன் வாயில் ரப்பர் திணிக்கப்பட்டதில் அவனுக்கு ஆத்திரம் தான் வந்தது. இருந்தும் இந்த முகத்தைத் தவிர இப்போது அவன் அதிகம் வேறு எதையும் பார்ப்பதில்லை.

அவனுக்கு உயர்ந்த துணிகள் அணிவிக்கப் பட்டிருந்தன. தலை வாரப்பட்டு, நெற்றியில் பொட்டிடப்பட்டு, கன்னத்தில் திருஷ்டி இடப்பட்டு, அறை பூராப் பொம்மைகள் வாரி இறைக்கப்பட்டு உறுத்தாத படுக்கையில் சிங்காரமாகத் தூங்கிப் போய் வளர்ந்திருந்த கன்னங்கள் எல்லாம் புஸு புஸு வென்று உப்பியிருந்தான். மார்பிலும் வயிற்

நிலும் வளையம் வளையமாகச் சதைகள். உட்கார்த்தி வைத்தால் தன் கனத்திலேயே அமுங்கி விடுவாள் போலத் தோன்றினாள். அவளுடைய 'நான்' இப்பொழுது முழுவதும் உருவாகிவிட்டது. அவளுக்கென்று ஒரு பிம்பமும் உருவாகிவிட்டது. தன்னிலிருந்து வேறுபட்ட ஒரு தானை தனக்கு வெளியே அமைத்துக்கொள்ளும் உணர்வு பெற்றுவிட்டாள். இப்போது அவளை ஒரு நிலைக்கண்ணாடி முன் காட்டினாள், அது 'நான்' என்று எங்கோ உள்ளுக்குள் அடையாளம் கண்டு கொள்வாள். பேச்சுக்கு முன்னும் உருவான முதல் உணர்வுகளில் ஒன்று இது. ஆனால் இன்னும் தான் பெண் என்று தெரியாது. அதற்கான அடையாளங்கள் தன் உடலில் இருப்பதை அவளால் இனம் கண்டு கொள்ள முடியாது. இந்த ஆறு மாதத்தில் அவள் எப்போதும் தன் கூடவே இருக்கும் தாயையும், 'தகப்பனை'யும் அவர்கள் அசைவுகளையும் முயன்று பார்க்கத் துவங்கிவிட்டாள் என்றே சொல்லலாம். அவர்கள் அன்புப் பார்வையின் நிழலில் தன்னை ஒரு பொருளாகக் கருதத் துவங்கி விட்டாள். அவள் இப்போதே தன்னிச்சையான பிரஜை. வெளி உலகத்துக்குத் தயாராகிவிட்ட ஒரு சுயாட்சி சுந்தரி.

''என்னடி- கண்ணு! என்னடி கண்ணு!'' என்று பார்வதி கொஞ்ச அதோ என்ன வசிகரமாகச் சிரிக்கிறாள் பாருங்கள்'' ''அப்ப நீங்க போயிட்டு வந்துருங்க. ஏதோ பாட்டி போயிருச்சு. அதும் நமக்கும் நல்லதுதான். வளக்கறதுக்கு இனி ஏது ஆளுங்க?''

நமச்சிவாயம் அப்பாவைப் பார்க்கப் போயிருந்தபோது வீட்டில் பாட்டியின் சுவடுகள் அத்தனையும் நீங்கிப்போய் வாயிற்பக்கத்து அறையில் மட்டும் தரையில் ஒரு அகல்விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பிள்ளைகள் அவரைப் பார்த்ததும் ''பாப்பா வல்லையா?'' என்றார்கள்.

''இல்லை தம்பி! பாப்பாவுக்கு உடம்பு சரியில்லேப்பா.''

''மாமா! நான் வந்து பார்க்கட்டுமா?'' என்றான் மது.

சின்னவன் உள்ளேயிருந்து சிரத்தையாக தூசியுடன், பச்சைத் திரவத்துடன் இருந்த பாட்டிலை எடுத்து வந்து, ''பாப்பாவுக்கு மருந்து'' என்றான்.

நமச்சிவாயம் சிரித்து, ''பொல்லாத பசங்களப்பா'' என்றார். அப்பா ஈரத் துணியுடன் வந்தபோது, ''என்னங்க! பாட்டியம்மா போயிட்டாங்களாமே!'' என்றார்.

''ஆமாங்க.''

''ரொம்ப நாள் படுத்திட்டிருந்தாங்களா?''

''இல்லேங்க நமச்சிவாயம், பொசுக்குனு போயிட்டா. புண்ணியவதி. ஜாஸ்தி ஸ்ஃபர் பண்ணலே.''

''அப்பா, பாட்டி எங்கே போயிருக்கா?''

''மேலேடா.''

''அப்பா, நாம எல்லாரும் தங்கச்சிப் பாப்பாவைப் பார்க்கப் போறோமா?''

''பேசறதா மாமா?''



ஏலக்காய் பொடிக்கும்போது சிறிது சர்க்கரையுடன் பொடித்தால் நன்றாகப் பொடியும். எள்ளை வறுத்துப் பொடிக்கும்போது சிறிது உப்பைச் சேர்த்துப் பொடித்தால் கசக்காது.

''பேசலை. ஆனா நிறைய ஜாடை காட்டுது. நமக்குப் புரியாம நிறையச் சத்தம் போடுது.''

''சிரிக்கிறதா?''

''நிறைய.''

''அப்பா, வாப்பா பார்க்கலாம்.''

''ஏதாவது ஹெல்ப் வேணுங்களா?''

''என்னத்தைக் கேப்பேன் நமச்சிவாயம். பாட்டி இருந்துசமைத்துபோட்டுண்டிருந்தா! மூணு புள்ளைகளை வெச்சிண்டு எப்படிப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிச்சு எப்படி சமைச்சு....''

''நா வேணா ஒரு அய்யரு, சமையக்கார அய்யரைப் பார்த்து ஏற்பாடு பண்ணித்-தரவா?''

''பாருங்க. ஏகப்பட்ட செலவாகும்.''

''செலவு இருக்கட்டுங்க. சாப்பிட்டீங்களா?''

''...ம்... ராமமூர்த்தி ஆத்திலே கொண்டு வந்து கொடுத்தா...''

''அப்பா! பாப்பாப்பா!''

''இர்ரு எழவு பிடிச்சவனே... எப்படி இருக்கா குழந்தை?''

''நல்லாருக்குதுங்க. சாவகாசமா வந்து பாருங்க. நல்லா வளர்ந்திருக்கு.''

''ஊர்ல இருந்து யாரையாவது வரவழைக்கத்தான் ஆகணும் போல இருக்கு.''

''பாட்டிக்கு நீங்க கவிகாரங்களா?''

''அந்த மாதிரிதான். கடைசி காலத்திலே யாரும் இல்லாம எங்க கூட இருந்தா. கொஞ்சம் ஏக்கரா உண்டு. குத்தகைக்காரன் இட்ட மாட்டிண்டு வருஷத்துக்கு ஒரு மூட்டை உளுந்து வரது. பாக்கியெல்லாம் அவன் சாப்பிடறான். வித்துத் தொலைக்கவும் முடியாது. வீடு ஒண்ணு இருக்கு. பாட்டி ஏதோ உயில் மாதிரி எழுதி வச்சிருப்பான்னு நினைக்கிறேன். இல்லைன்னா அதுக்கும் தகராறுதான். எல்லாத்தையும்இனிமேத்தான்பார்க்கணும்''

''நீங்க கவலைப்படாதீங்க. எல்லாத்தையும் நான் செட்டில் பண்ணி வெக்கறேன்.

''நமச்சிவாயம்... எனக்கு ஒரு சின்ன ஒத்தாசை செய்ய முடியுமா?''

''சொல்லுங்க. தாராளமா செஞ்சு தர்றேன்.''

''ஒண்ணுமில்லே. ஒரு பத்து நாளைக்கு இந்தப் பசங்களை உங்காத்திலே வெச்சுக்க முடியுமா? பர்மனெண்டா ஒரு ஏற்பாடு பண்றவரைக்கும் இவங்களை எப்படிச் சமாளிக்கறதுன்னு எனக்கு ஐடியாவே வல்லே. ஏண்டா மாமாவோட அவாத்திலே போய் இருக்கீங்களாடா? அவாத்திலே தங்கச்சிப் பாப்பா இருக்கு. பொம்மையெல்லாம் இருக்கு''

மூவரும் ''ஓ!'' என்று தலையாட்டினார்கள் உற்சாகம் கொப்பளிக்க.

சின்னவன் அப்போதே போய் ஒரு ஸ்லேட்டையும், பாதி காய்ந்த டிராயரையும் எடுத்துக்கொண்டு ''அய்யா! பாப்பா... அய்யா! பாப்பா'' என்று குதிக்க ஆரம்பித்து விட்டான்.

நமச்சிவாயம் சற்றுத் தின்றிப்போய், ''நீங்க சொல்றது வாஸ்தவம்தான். எதுக்கும் அவகிட்ட ஒரு வார்த்தை கேட்டுக்கிட்டு உடனே வந்து தகவல் சொல்றேன்.''

''இல்லீங்க. கூட்டிட்டுப் போயிடுங்க... என்ன ஒரு பத்து நாள்தானே!''

''வாஸ்தவங்க. எதுக்கும் ஒரு முறை அவளைக் கேட்டுக்கிட்டு உடனே வரேனே!''

''சரி. மாட்டேன்னு சொல்லிராதீங்க.. எனக்குப் பெரிய ஒத்தாசை செஞ்சாப்பல இது.''

''இதோ வரேங்க.''

''மாமா கார்ல போப்பறமா?''

''இல்லேடா தம்பி, இத ஊட்டுக்குப் போயிட்டு உடனே வரன்!''

''என்னையும் கூட்டிக்கிட்டுப் போ மாமா!''

''கட்டாயம்! கொஞ்ச நேரம் இரு!''

''மருந்து?'' என்று சின்னவன் மறுபடி அழுக்குப் பாட்டிலைக் காட்டினான்.

நமசிவாயம், ''வீட்டுல நிறைய மருந்து இருக்குது தம்பி'' என்றார்.

சற்று வேகமாகவே புறப்பட்டு விட்டார்.

---

வெல்லத்தில் செய்யும் பாயஸம் ரொம்ப நீர்த்துப்போய்விட்டால் சிறிது கடலை மாவை ஒரு கரண்டி பாலில் கரைத்துவிட்டு நன்றாகக் கொதிக்க விடவும். பாயஸம் கெட்டியாவதுடன் மிகவும் மணமாகவும் இருக்கும்.



பின் வாசலில் நிறுத்தப்பட்டு, செருப்பு அலம்பப்பட்டு தலையில தண்ணீர் கொட்டப்பட்டபோது மனைவியிடம் சொன்னார்: ''பார்வதி. அந்தாளு ரொம்பத் தவிக்கிறாரு. புள்ளங்களைப் பத்து நா நாம வெச்சுக்கலாம்னு தோணுது.''

''என்னது! அந்த மாதிரி சொல்லிட்டு வந்திருக்கீங்களா?''

''இல்லே, பார்வதி! அவரேதான் கேட்டாரு.''

''நல்லா இருக்குது! அதெப்படி முடியும்?''

''ஏன்?''

''சாவு விழுந்த வீட்டுத் தீட்டு என்ன ஆறது?''

''என்ன பார்வதி! சின்னப் புள்ளைங்களுக்குத் தீட்டாவது ஒண்ணாவது? ஆசையா ஸ்லேட்டு பலபம் எல்லாம் எடுத்துக்கிட்டுத் தயாரா மூணும் நிக்குது!''

''எல்லாம் அப்பறம் பார்த்துக்கலாங்க. இப்ப வேணாம்.''

''அந்தாளு எனக்காகக் காத்துக்கிட்டு இருக்காரே பார்வதி!''

''போய் சொல்லிட்டு வந்துருங்க. குழந்தைக்கு உடம்பு சரியில்லே. சரியாப்போனப்புறம் ஒரு நா வேறு அழைச்சுட்டு வந்து காட்டறம்னு.''

''இல்லே பார்வதி. அவருக்கு இப்ப இக்கட்டான நிலைமையா இருக்கு. இந்தச் சமயத்தில உதவி பண்ண வேணுமில்லே! சாப்பாட்டுக்கே ஏற்பாடு பண்ண முடியாம தவிச்சுக்கிட்டு இருக்காரு. அவரு கேக்கறதிலே ஞாயம் இருக்கத்தான் செய்யுது.''

''சாப்பாட்டுக்குன்னு ஓட்டல் இல்லையா? அதெல்லாம் கதை. எப்படியாவது புள்ளைங்களை நம்மகிட்டத் தள்ளி விடலாம்னு பாக்கறாரு. ஐயரு லேசுப்பட்டவரு இல்லே. அவரு சொன்னதுக்கெல்லாம் தலையை ஆட்டிட்டு வந்துட்டீங்க. இப்ப அந்தப் புள்ளங்களை வெச்சுக்கிட்டு நான் என்ன செய்யறது? ஒவ்வொண்ணும் வாலு. குழந்தையைக் கசக்கிப் போட்டுரும்! வேண்டாங்க, நேரப் போய் நாங்க ஊருக்குப் போயிக்கிட்டிருக்கோம். பண்டிகைன்னு ஏதாவது சொல்லிட்டு வந்துருங்க.''

''என்ன பார்வதி!''

''இப்ப முடியாது! முடியாதுன்னு முடியாதுதான்!''

''பின்ன எப்ப முடியும்? நாளைக்கி வரச் சொல்லலாமா?''

''எப்பவும் முடியாதுன்னு சொல்லிருங்க. அவ்ளதான்.''

''என்ன பார்வதி? குழந்தை அவங்களது இல்லையா?''

''இல்லே. குழந்தை என்னுது! அவ்ளதான். அதுக்கு மேலே பேச்சில்லே!''

நமச்சிவாயம் திரும்பிப் போனபோது மணி பத்தாகியும் பிள்ளைகள் மூவரும் விழித்திருந்து வாசற்படியிலேயே நெருக்கமாகக் காத்திருந்தார்கள். (தொடரும்)

Regd. No. TN MS (S) 231







